12𝓌4
ய
3

# அரசியல் நிர்ணய சபை

ஜவாஹர்லால் நேரு

KMM 0052

அ. க. ஜெயகரன்

# அரசியல் நிர்ணய சபை

ஜவாஹர்லால் நேரு

மொழிபெயர்த்தவர்
தி. ஜ. ர.

1072






உரிமை பதிவு] கலைமகள் காரியாலயம் [விலை ரூ. 2/-
மயிலாப்பூர் :: சென்னை

# பொருளடக்கம்

அத்தியாயம் பக்கம்

1. இந்தியா உலகத்தைக் கவனிக்கிறது ... 1
2. காங்கிரஸும் யுத்தமும்
   (i) போருக்கு ஆயத்தம் ... 17
   (ii) நியாயம் என்ன? ... 24
   (iii) பத்திரிகைகளுக்கு விடுத்த அறிக்கை ... 30
   (iv) எந்த வழி? என்ன முறை? ... 34
3. இந்தியாவின் கோரிக்கையும் இங்கிலாந்தின் பதிலும் ... 45
4. அரசியல் நிர்ணய சபை ... 71
5. வழி பிரியும் கட்டம் ... 77
6. ஜவாஹர்லால் நேரு அவர்களின் வானொலிச் செய்தி ... 113
7. அனுபந்தம்
   (i) பிரிட்டிஷ் மந்திரிகளின் தூதுக் கோஷ்டித் திட்டம் ... 124
   (ii) பிரதிநிதித்துவ அட்டவணை ... 141
8. சுதந்தரக் குடியரசுத் தீர்மானம் ... 149

# முகவுரை

ஒரு நாடு பிறர் நுகத்தினின்று விடுபட்டுச் சுதந்தரம் பெற்றுக் குடியரசாக மாறியதாக நாம் காணும் சரித்திர நிகழ்ச்சிகளிலெல்லாம் - அந்த விடுதலை அந்நியர் ஆதிக்கத்தில் இருந்தாயினும் சரி, அரசர் ஆதிக்கத்தில் இருந்தாயினும் சரி - அந்நாட்டு மக்கள் தங்கள் அரசியலை நிர்ணயித்துக்கொள்ள நாட்டுப் பொதுமக்களுக்குப் பிரதிநிதித்துவம் வாய்ந்த சபை ஒன்றையே அமைத்துக் கொண்டனர் என்பதைக் காண்கிறோம். சீசர் ஆட்சியை ஒழிக்க முயன்ற ஸெனட், பிரெஞ்சுப் புரட்சிக்குப் பின் ஏற்பட்ட ஆட்சி சபை இவைகளும் இத்தகைய பிரதிநிதித்துவம் வாய்ந்தவைகளாகவே தம்மைக் கூறிக்கொண்டன. அமெரிக்க நாடு சுதந்தரம் பெற்றபோது அமைந்த காங்கிரஸ் உண்மையில் இத்தகைய ஸ்தாபனமே. ருஷியாவில், மன்னர்களான ஜார்களின் ஆட்சி ஒழிந்தபிறகு ஏற்பட்ட முதல் ஆட்சி சபையும் கிட்டத்தட்ட இத்தகைய பொது ஜன வாக்குப் பெற்றதே. அரசனிடமிருந்து அதிகாரத்தைப் பிடுங்கிய பிரிட்டிஷ் பார்லிமெண்டும் இத்தகையதே.

நம் நாட்டில் சுதந்தரப் போராட்டம் தொடங்கிய நாள் முதலாகவே 'இந்நாட்டின் சுதந்தரம் என்பது என்ன? அது வந்த பிறகு அரசியலை நிர்ணயிப்பது யார்? எப்படி? அதைச் சுயராஜ்யம் என்பதா சுதந்தரம் என்பதா ?' என்றெல்லாம் பல தலைவர்கள் அவ்வப்பொழுது சிந்தித்தும், பேசியும் எழுதியும் வந்தார்கள். இந்தப் போராட்டத்தில் ஆரம்பம் முதலே பங்கெடுத்துக்கொண்ட நம் ஜவாஹரையும் இப்பிரச்னை கவர்ந்தது. வெகு நாளாக இது அவர் மனமாகிய உலையில் காய்ந்து உருகியது; அநுபவமாகிய சம்

மட்டியால் அடிபட்டது; கடைசியில் அறிவாகிய அரத்தால் கூராயிற்று. பின்பு வெளிப்பட்ட அரசியல் நிர்ணய சாதனமே இது. முதல் முதலாக ஒரு நாட்டுக்கு வேண்டிய குடியரசை நிர்ணயிக்க வேண்டியவர்கள் மக்களே. அதற்கான அமைப்பு, பொது மக்களின் உண்மைப் பிரதிநிதிகள் அடங்கிய அரசியல் நிர்ணய சபையே. இந்தச் சபை அமைந்து தீர்மானிக்கும் தீர்மானமே அந்த நாட்டின் அரசியல் அமைப்பு. இதற்கு மேலான அதிகாரம் யாருக்குமே இல்லை. இந்தத் தீர்மானம் வந்த பிறகு நாடு சுதந்தரம் பெற்றுவிட்டது, சுதந்தரத்தை வேறு யாராவது தருவது என்பதோ இன்னொருவர் வாங்கிக்கொள்வது என்பதோ இல்லை என்று தீர்மானமாகவும் தெளிவாகவும் சிந்தித்தும், எழுதியும், பேசியும், அந்த லட்சியத்தைக் காங்கிரஸ் கொள்கையாக்கி உருவாக்கியும் வந்த முதல் பெருமை நம் நேருஜிக்கே உரியது.

இந்த லட்சியத்தின் எழுத்துருவே அவர் எழுதிய இந்தப் புத்தகம். பல நாட்டுச் சரித்திரங்களைப் படித்தறிந்த அநுபவமும், நம் நாட்டுக்கே உரிய பிரச்னைகளை நன்கு ஆராய்ந்த விவேகமும் நீண்ட எதிர்கால நோக்கும்—எல்லாவற்றுக்கும் மேலாக நடுநிலை, சத்தியம், தர்மம் இவைகளும் சேர்ந்து பின்னிய அழகிய சித்திர வேலை இது.

இந்த லட்சியம் நனவாகும் சந்தர்ப்பமும் இன்று வாய்த்துவிட்டது. அவர் நினைத்தபடியான, பொது மக்கள் பிரதிநிதித்துவம் வாய்ந்த பிரதிநிதிகள் இல்லை எனினும் அதற்கு எவ்வளவு நெருங்க முடியுமோ அவ்வளவு நெருங்கிய பிரதிநிதித்துவம் வாய்ந்த பிரதிநிதிகளைக் கொண்ட நம் நாட்டு அரசியல் நிர்ணய சபை இன்று சில அடிப்படையான முடிவுகளையும் செய்துவிட்டது. அதன் தொடக்கத்தில் 'இதன் நோக்கம் இது' என்று இவர் கொண்டுவந்த தீர்மானம், இவ்வளவு நாளாக

இவர் இந்தப் பிரச்னைபற்றி எழுதியும் பேசியும் வந்த எல்லாவற்றுக்கும் சிகரம்போல் விளங்குகிறது. ஏக மனதாகவும் இது இச்சபையில் நிறைவேறிவிட்டது. இனிமேல் இதன் வேலை தடைப்பட முக்கிய காரணம் ஒன்றும் காணோம்.

இத்தகைய அரசியல் நிர்ணய சபையின் அமைப்பு, வேலைத் திட்டங்கள் முதலியவற்றைப் பற்றி நம் தலைவர் ஜவாஹர்ஜி கொண்ட அபிப்பிராயங்களைத் தெளிவாக இதில் காணலாம்.

இதை மொழிபெயர்த்த ஸ்ரீ தி. ஜ. ர. அவர்களின் அரசியல் அறிவும், படிப்பும், மொழிபெயர்ப்புத் திறனும் தமிழ்நாட்டுக்குப் புதியன அல்ல.

மோ. ஸ்ரீ. செல்லம்

# அரசியல் நிர்ணய சபை

## 1

## இந்தியா உலகத்தைக் கவனிக்கிறது

தேசியம் என்பது இன்று மேல் நாட்டில் மாசடைந்திருக்கிறது. ஆக்கிரமிப்பு, சகியாமை, மூர்க்க ஹிம்சை ஆகியவைகளுக் கெல்லாம் அங்கே இது தயாராகிவிட்டது. பிற்போக்கான சகல சங்கதிகளும், தேசியம் என்ற போர்வையைப் போர்த்துக்கொண் டிருக்கின்றன. பாஸிஸம், ஏகாதிபத்திய முறை, நிறவெறி இவைகளெல்லாம் அந்தப் போர்வைக்குள் புகுந்திருக்கின்றன. எதையும் சுதந்தரமாய் ஆராய்ச்சி புரியவேண்டும் என்ற உணர்ச்சிதான், பத்தொன்பதாம் நூற்றூண்டில் ஐரோப்பாவுக்குப் பெருமை கொடுத்தது. தேசியம் என்ற பெயரால், அந்த உணர்ச்சி இன்று நசுக்கப்பட்டு வருகிறது. தேசியத்தின் அடி தாங்காமல், கலைகள் விழுகின்றன ; நாகரிகம் நசித்துவருகிறது. ஜனநாயகம், சுதந்தரம் என்றாலே, தேசியத்துக்கு மிகவும் கசப்பாயிருக்கிறது. தேசியத்தின் பெயரால், ஸ்பெயின் நாட்டில், நிரபராதிகளான ஆண்களும் பெண்களும் குழந்தைகளும் விமானக் குண்டுகள் சொரிந்து கொல்லப்பட்டார்கள் ; குரூரமான நிறக் கொடுமை நிகழ்கிறது.

என்றாலும், இந்தத் தேசியந்தான் நூறு வருஷங்கள் அல்லது அதற்கும் முன்பாக, ஐரோப்பிய நாடுகளை நிர்மாணம் செய்தது ; ஐரோப்பிய நாகரிகத்துக்குப் பகைப்

புலமாயிருந்தது. ஆனால் இப்போது அந்த நாகரிகம் தனது முடிவை நெருங்கிக்கொண் டிருப்பதுபோல் தோன்றுகிறது. இன்று அந்நிய ஆதிக்கத்துக்கு உட்பட்டுத் தவித்துக்கொண்டு விடுதலைபெறத் தேடும் கீழ்த்திசை நாடுகளைத் தூண்டும் சக்தியாய் இருப்பதும் இந்தத் தேசியம்தான். அது இந்தக் கீழ்த்திசை நாடுகளுக்கு ஒற்றுமையும் ஜீவனும் அளித்திருக்கிறது; அடிமைத் தனத்தால் இவைகளுக்கு ஏற்பட்ட அச்சங்களின் சுமையை அகற்றுகிறது. ஒரு கட்டம் வரையில், தேசியத் திலே குணம் இருக்கிறது; அது மனித சுதந்தரத்தை வளர்க்கும் ஒரு முற்போக்குச் சக்தியாயிருக்கிறது. என்றாலும், அது ஒரு குறுகிய கொள்கையேயாகும். விடுதலை பெறத் தேடும் ஒரு தேசம், நோய்பிடித்த ஒரு மனிதனைப் போலத் தன் போராட்டத்தையும் தன் துயரத்தையுமே அன்றி வேறு எதையுமே நினைக்க முடியாமல் போகிறது.

இந்தியாவும் இதற்கு விலக்கல்ல. அது அநேக சமயம், தன்னுடைய போராட்டம் உக்கிரமாயிருந்தபோது, உலகத்தை மறந்து, தன்னைப்பற்றி மட்டிலுமே எண்ணி வந்திருக்கிறது. ஆனால், வலிமையும் வெற்றியால் பிறந்த ஒரு நம்பிக்கையும் அதற்கு உண்டானபோது, இந்தியா தன் எல்லைகளுக்கு அப்பால் கவனிக்கத் தொடங்கியது. உலகப் பிரச்னைகளில் இந்தியா வரவர அதிகச் சிரத்தை காட்டிவருகிறது. இது அதன் தேசிய இயக்கம் எவ்வளவு வளர்ந்திருக்கிறது என்பதைக் காட்டும் அடையாளமாகும். இன்று இந்தியா அந்நிய நாடுகளின் விவகாரங்களை அக்கறையுடன் கவனித்து வருகிறது; தனது சொந்தச் சுதந்தரப் போராட்டம், உலகப் போராட்டத்தின் ஒரு பகுதியேயாகும் என்று அது அறிந்துகொண் டிருக்கிறது. இதைப் போன்ற ஆச்சரியம் வேறில்லை என்று

சொல்லலாம். இந்த அக்கறை படித்த வகுப்பாரிடம் மட்டும் அல்ல; தொழிலாளி, சின்னக் கடைக்காரன் இவர்களிடமும் - சிறிதளவு குடியானவனிடமும்கூடத்தான் ஆழ்ந்து காணப்படுகிறது. மஞ்சூரியா மீது ஜப்பான் படையெடுத்தபோது, சீனுவிடம் இந்தியாவெங்கும் அலைபோல் அனுதாபம் எழுந்தது. அதுவரையில் ஜப்பானைப் பாராட்டிக்கொண் டிருந்த இந்தியர்கள், அதை வெறுக்கத் தொடங்கிவிட்டார்கள். அபிஸீனியாவை இதாலி அக்கிரமமாய்ப் படையெடுத்தபோது, இந்தியர் ஆழ்ந்த வருத்தங்கொண்டு, இதாலியைக் கண்டித்தார்கள். மத்திய ஐரோப்பாவில் நிகழ்ந்த துக்ககரமான சம்பவங்கள், இந்தியரின் மனத்தை உருக்கிவிட்டன. ஆனல் ஸ்பெயினில் குடியரசுக்கு விரோதமாகக் கிளம்பிய கலகத்தையும் சீனுவில் ஜப்பான் மேற்கொண்ட படையெடுப்பையும் அவைகளின் பலனுய் விளைந்த கொடுமைகளையும் கண்டு, மற்றெல்லாவற்றினும் மேலாக, தங்கள் சொந்தத் துயரம் போல் இந்தியர் வருந்தினர்கள். ஸ்பெயினுக்கும் சீனுவுக்கும் ஆதரவாக, இந்தியாவெங்கும் ஆயிரக்கணக்கான பொதுக் கூட்டங்கள் நடந்தன. எங்கள் வறுமைக்கு நடுவிலே, அந்த இரண்டு நாடுகளுக்கும் உணவும் வைத்திய கோஷ்டிகளும் அனுப்பி, நாங்கள் உதவினேம்.

இந்தியா இப்படிச் செய்ததன் மூலகாரணம், பரோபகாரச் சிந்தை யல்ல. உலகில் நிகழ்ந்துவரும் போராட்டங்களின் உட்கருத்தை இந்தியா வரவர அதிகமாக உணர்ந்திருப்பதும், மதிநுட்பம் வாய்ந்த சுயநலமுமே, அந்த மூல காரணமாகும். நாங்கள் எந்த ஏகாதிபத்திய முறையின்கீழ் அகப்பட்டுத் தவிக்கிறேமோ அந்த ஏகாதிபத்திய முறையின் நிலைக்கண்ணுடியே பாஸிஸம் என்று கண்டோம். பாஸிஸம் வளர்ந்து விடுமானல்,

நாங்கள் எந்தச் சுதந்தரத்துக்காகவும் ஜனநாயகத்துக் காகவும் போராடினேமோ அவைகளெல்லாம் தோற்றுப் போகும் என்று கண்டோம். பிரிட்டிஷ் ஏகாதிபத்திய முறையை நீண்ட காலமாய் நாங்கள் அனுபவித்திருக் கிறேம். ஆகையால், உலக சமாதானத்தைக் கூட்டாகப் பாதுகாப்பது என்ற கொள்கைக்கும் சர்வதேசச் சங்கத்துக்கும் தாங்கள் ஆதரவு அளிப்பதாய்ப் பிரிட் டிஷார் கொடுத்த வாக்குறுதிகளை யெல்லாம், நாங்கள் நம்பவில்லை. எனவே, பிரிட்டனின் அயல் நாட்டுக் கொள்கை போகும் போக்கை, மற்ற எந்த நாட்டவரை யும் விட மிகத் தெளிவாக, நாங்கள் புரிந்துகொண்டோம். பாஸிஸ்டு சர்க்கார்களுடன் ஒத்துழைப்பதாக இருந்தது பிரிட்டனின் அயல் நாட்டுக் கொள்கை. பிரிட்டிஷ் ஏகாதிபத்திய முறையை எதிர்த்த நாங்கள், சகல ஏகாதி பத்திய முறைகளையும் பாஸிஸத்தையுமே எதிர்க்க லானேம்.

இந்தப் பிரிட்டிஷ் அயல்நாட்டுக் கொள்கையை, நாங்கள் அடியோடு எதிர்த்தோம். என்றுலும், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் ஒருபகுதியாகவே நாங்கள் இருந்த தால், இந்தப் பிரிட்டிஷ் அயல்நாட்டுக் கொள்கை எங்களை யும் கட்டுப்படுத்திவிட்டது. ஆனல், இந்தக் கொள்கை யில் எங்களுக்குச் சம்பந்தமில்லை யென்று, தீர்மானத்தின் மூலமும் பகிரங்க அறிக்கையின் மூலமும் நாங்கள் தெரி வித்து விட்டோம். எங்களால் இயன்ற வழிகளிலெல் லாம் எங்கள் சொந்த அயல்நாட்டுக் கொள்கை யொன்றை உருவாக்கிக் கொள்ளவும் முயன்றேம். நாங்கள் சீனுவுக்கு வைத்திய கோஷ்டி அனுப்பிய தும், ஸ்பெயினுக்கு உணவுப்பொருள் அனுப்பிய தும் எங்கள் அயல்நாட்டுக் கொள்கையை வற்புறுத்தி,

பிரிட்டிஷ் அயல்நாட்டுக் கொள்கையினின்றும் ஒதுங்கிக்கொள்ள, நாங்கள் கடைப்பிடித்த வழிகளாகும். மேலும், உலக யுத்தம் தொடங்குமானல், அப்போது நாங்கள் என்ன செய்வது என்ற முறையையும் வகுத்துக்கொண்டோம். ஒரு யுத்தத்திலே இந்தியா சேருவதா இல்லையா என்ற விஷயத்தைத் தீர்மானிக்க வேண்டுபவர் இந்திய மக்களே. பிரிட்டிஷார் எங்கள்மீது எந்தத் தீர்மானத்தையாவது சுமத்தினல் அதை எதிர்ப்பதென்று முடிவு செய்தோம். ஏகாதிபத்திய முறையைக் காப்பாற்ற நடக்கும் எந்த யுத்தத்துக்கும் எங்கள் சக்தி, பொருள் முதலிய வசதிகளைப் பயன்படுத்திக் கொள்ளும்படிவிட, நாங்கள் எக்காரணத்தினலும் தயாராயில்லை.

இந்தியத் தேசிய இயக்கம், பல வருஷங்களாகவே, பூரண சுதந்தரம் பெறவும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துடன் இந்தியாவைப் பிணைத்திருக்கும் தளையை அறுத்து எறியவுமே, நோக்கங்கொண் டிருக்கிறது. சமீபத்தில் ஐரோப்பாவில் நிகழ்ந்துள்ள நிகழ்ச்சிகள், எங்களுடைய இந்த நோக்கம் நிறைவேறுவதை, அவசரத் தேவையாகச் செய்துவிட்டன. ஏனென்றால், பிரிட்டனின் அயல்நாட்டுக் கொள்கையுடன் எங்களைச் சம்பந்தப் படுத்துவதையும், எங்கள் சக்தியையும் பொருளையும் தவருன நோக்கங்களுக்குப் பயன்படுத்திக் கொள்வதையும், எங்களால் சகிக்கமுடியாது. எங்களுடைய அயல்நாட்டுக் கொள்கை, நிதி, தற்காப்பு ஆகிய விஷயங்களை நாங்களே கண்காணித்துக் கொள்ளவேண்டும்; பிற நாடுகளுடன் எங்கள் சொந்த உறவுகளை நாங்களே வளர்த்துக்கொள்ள எங்களுக்குப் பூரண சுதந்தரம் வேண்டும்.

இவ்வாருக, இந்தியத் தேசியப் போராட்டத்தின்

மீது, அயல் நாட்டு விவகாரங்களின் நீண்ட சாயை படிந் திருக்கிறது. இதைக் குறித்த பிரக்ஞை இந்தியாவில் வரவர அதிகரித்து வருகிறது. அதனுல், வரவர அதிக அக்கறையுடன் இந்தியா உலகத்தைக் கவனித்து வரு கிறது. தான் சுதந்தரம் அடையப் போகிற நாளைப் பற்றி, இந்தியா சிந்தித்துக்கொண் டிருக்கிறது. அந்த நாள் வெகு தூரத்தில் இல்லை. இந்த மாறுதலுக்குத் தன் மனோ பாவத்தை, இந்தியா இப்போதே தயார் செய்துகொண்டு வருகிறது. எங்கள் கண் முன்னே, பிரிட்டிஷ் ஏகாதிபத்தி யம் மங்கி மாய்ந்துவருகிறது. இனி வெகுகாலம் அது இந்தி யாவை அடிமைத்தனத்தில் வைத்திருக்க முடியாது என் பதைச் சகலரும் அறிவார்கள். இங்கிலாந்தின் பொறுப் புள்ள ராஜதந்திரிகளும் ஐயமின்றி இதை உணர்ந்துவிட் டார்கள். என்றுலும், ஒரு நூற்றுண்டுக்கு முந்திய பழங் கற்பனைகளையும் மனச்சூழலையும் கைவிடவும், தர்க்க ரீதியாகப் பார்க்கும்போது என்ன முடிவு ஏற்படுகிறதோ அந்த நிவர்த்தியற்ற முடிவுக்குத் தங்களை இசைவுபடுத்திக் கொள்ளவும், அவர்களுக்கு மிகவும் சிரமமாக இருக் கிறது.

இதுதான் இன்று பிரிட்டனின் தர்ம சங்கடம். இந்தியா சம்பந்தப்பட்ட மட்டில், பிரிட்டனுக்கு இரண்டே வழிகள்தாம் இருக்கின்றன. எது நடக்க வேண்டுமோ அதைப் பிரிட்டன் அங்கீகரிக்க வேண்டும்; கௌரவமாகத் தன்னை அதற்கு இசைவுபடுத்திக் கொள்ளவேண்டும். இதுவே இயற்கையும் தர்க்க ரீதியுமான வழியாகும். இதற்கு என்ன அர்த்தமென் ருல், பூரண சுதந்தரம் என்பதை அடிப்படையாகக் கொண்டு இந்தியாவின் சுய நிர்ணய உரிமையைப் பிரிட் டன் அங்கீகரிக்க வேண்டும். தேர்ந்தெடுத்த இந்தியப்

பிரதிநிதிகள் கூடிய அரசியல் நிர்ணயசபையைக் கொண்டு இந்தியாவின் அரசியல் அமைப்பைத் தயாரிக்க வேண்டும். இவ்வாறு தீர்மானம் செய்து, அதை நிறைவேற்றுவதற்கான நடவடிக்கைகளையும் உடனே மேற்கொண்டால், இந்தியாவின் மனோ பாவத்திலே தட்சணமே ஒரு மாறுதல் ஏற்படும். போராட்டமும் பகைமையும் நிறைந்த பழைய சூழ்நிலை மாறி ஒத்துழைப்பு உணர்ச்சியும் உண்டாகும். இந்தியா இந்த வழியில் தன் சுதந்தரத்தை அடைந்தால், வர்த்தக விஷயங்களில் சில சலுகைகளைப் பிரிட்டனுக்கு அளிக்க இசையக் கூடும். நியாயப்படி தன் தலைமீது சுமத்தத் தகாத சில நிதிச் சுமைகளையும் கூட, இந்தியா ஏற்றுக்கொள்ளக் கூடும். சமாதானமாய்ச் சுதந்தரம் அடைவதற்காக, இந்த விலையைக் கொடுக்க நாங்கள் சம்மதிப்போம். ஏனென்றால், எப்படியிருந்தாலும், போராட்டத்தினால் ஏற்படக் கூடிய நஷ்டம் இதைவிட மிக அதிகமாகவே இருக்கும். மேலும், சுதந்தரத்தையும் ஜனநாயகத்தையும் பிரிட்டன் தாங்கி நிற்குமானால், உலக விவகாரங்களில் இந்தியா பிரிட்டனின் நண்பனாகவும் துணைவனாகவும் கூட இருந்துவரும்.

பிரிட்டனுக்கு உள்ள மற்றொரு வழி என்னவென்றால், இந்தியாவை இன்னும் அடிமைத் தனத்திலேயே வைத்துக்கொண்டு, ஜீவாதாரமான தன் தீர்மானங்களையெல்லாம் தன் இஷ்டப்படி இந்தியாவின்மீது சுமத்துவதுதான். இப்படிச் செய்தால், இந்தியத் தேசியத்துடன் பெரும் போராட்டம் ஏற்படும். அதற்கு நிவர்த்தியில்லை. போராட்டத்தினால், இந்தியச் சுதந்தரம் சிறிது தாமதிக்கலாம். ஆனால் வெகு காலம் தாமதிக்காது என்பது மட்டும் நிச்சயம். போராட்டமே விவகாரத்தைத் துரிதப்படுத்தி விடவும் கூடும். கடைசி

யாய் நடக்கும் சட்ட மறுப்பு இயக்கத்தை, பிரிட்டிஷ் சர்க்காரால் சுலபமாய் அடக்க முடியாது. காங்கிரஸும் தேசிய இயக்கமும் இதற்கு முன் என்றும் இருந்ததை விட இன்று, மிக அதிக வலிமையுடன் இருக்கின்றன. ஆனால், பிரிட்டனே, மிஸ்டர் சேம்பர்லீனின் கொள்கையால், அயல் நாட்டு விவகாரங்களில் மோசமான பேடித்தனம் காட்டிவருகிறது. இதனால், இந்தியாவைப் பிரிட்டன் கடுமையாய்த் தாக்காது என்று அர்த்தமல்ல. பிரிட்டன் நிச்சயம் கடுமையாய்த்தான் தாக்கும். ஆனால் அது மிகவும் கஷ்டமான காரியமாயிருக்கும். நடுவிலே சர்வதேச நெருக்கடி வேறே வந்து குறுக்கிடக் கூடும். அப்படிக் குறுக்கிட்டால், இந்தியாவைப் பிரிட்டன் தாக்குவது அபாயமாகவும் முடியும். ஆகையால், போராட்டம் தொடுக்கவேண்டிய நிர்ப்பந்தத்தை இந்தியாவுக்கு உண்டாக்க, பிரிட்டிஷ் சர்க்கார் விரும்பவில்லை. இது ஆச்சரியம் அல்ல. தங்களுடைய ஜீவாதாரமான விசேஷ உரிமைகளை விட்டுக்கொடுக்காமல், இந்தியாவுடன் ஒரு ராஜி செய்துகொள்ள முடியுமானால், அதைச் செய்துகொள்ளப் பிரிட்டிஷ் சர்க்கார் தயாராயிருக்கிறார்கள். ஆனால், எந்த ராஜி செய்துகொள்ளுவதானாலும், அதை இந்தியத் தேசியக் காங்கிரஸுடனேயே செய்துகொள்ள வேண்டும். அப்படி ராஜி செய்துகொள்ள உண்மையாய் முயன்று வெற்றி காணவேண்டுமானால், மேலே சொன்ன இரண்டு வழிகளில் முதலாவது வழியின் உட்கருத்துக்களையெல்லாம் உணர்ந்து கடைப்பிடிக்கவேண்டி வரும். பிரிட்டிஷ் ஏகாதிபத்திய முறை, தன் இயற்கை காரணமாக, இதைச் செய்யச் சக்தியற்றதாக இருக்கிறது. ஆகையால், பிரிட்டிஷ் சர்க்கார் முதல் வழியை எப்பாடு பட்டும் தவிர்க்கவே முயல்வர்.

இதுதான் தர்மசங்கடம். வீணே காலங் கடத்துவதை யல்லாமல், இரண்டுக்கும் மத்திபமான வேறு வழி இல்லை. ஆனல், சர்வாதிகாரிகளின் சகாப்தமான இந்நாளில், காலம் துரிதமாய் ஓடுகிறது. சம்பவங்கள் திகைக்கத்தக்க விரைவுடன் ஒன்றை யொன்று தொடர்கின்றன. தேசங்களும் சரி, தனி மனிதர்களும் சரி, அருமையாய் மதித்திருக்கும் சொத்து சுதந்திரங்களை யெல்லாம்கூடப் பலிகொடுத்து, சிறிது சிறிதாய் மிகவும் கஷ்டப்பட்டு, எதிரியைச் 'சாந்தப்படுத்தும் கொள்கை' என்ற ஒரு கோபுரத்தை, மிஸ்டர் சேம்பர்லீன் கட்டியிருக்கிறார். அந்தக் கோபுரம் எந்த நிமிஷத்திலும் விழுந்து பேராபத்தைக் கொண்டுவந்து விடும்போல் இருக்கிறது. அப்போது, இந்தியாவின் நிலை என்ன? இந்தியா என்ன செய்யும்? இந்தக் கேள்வி, பிரிட்டிஷ் ராஜதந்திரிகளுக்கு அடிக்கடி கவலை கொடுத்துக்கொண் டிருக்கிறது. இந்தியா என்ன செய்யப்போகிறது என்பது மிகவும் முக்கியமாகும். நிலைமையில் பெரிய வித்தியாசத்தை, இந்தியா உண்டாக்கிவிடும்.

இங்கிலாந்தின் கஷ்டத்தைக்கொண்டு தான் லாபம் அடைய, இந்தியா தருணம் பார்த்துக்கொண் டிருக்கிறது என்று இதற்கு அர்த்தமல்ல. ஜெக்கோ-ஸ்லொவாக்கியா நெருக்கடியின்போதுகூட, நாங்கள் வழிப்பறியோ பேரமோ செய்யவில்லை என்று காந்திஜி தெளிவாய்த் தெரிவித்திருக்கிறார். ஆனல், தன்னை அடிமைத்தனத்தில் வைத்திருப்பது மாத்திரமல்லாமல், தான் வெறுத்து அருவருக்கும் ஓர் அயல்நாட்டுக் கொள்கையையும் கடைப்பிடித்துக்கொண் டிருக்கும் ஒரு சர்க்காருக்கு, இந்தியா எந்த விதத்திலேனும் உதவி செய்யும் என்று மனோராஜ்யம் செய்துகொண் டிருப்பது மகா மூடத்தனமாகும். அன்றி

யும், இங்கிலாந்து சங்கடத்தில் சிக்கிக்கொண் டிருக்கிறதே என்பதற்காக, நாங்கள் எங்கள் சுதந்தர லக்ஷ்யத்தை மறந்து எங்கள் போராட்டத்தை நிறுத்தி விடவேண்டும் என்பதும் நடவாத காரியம். நாங்கள் எங்கள் வழியிலே சென்றுகொண்டுதான் இருப்போம். அப்படிச் சென்றால், பிரிட்டிஷ் சர்க்காருக்கும் எங்களுக்கும் போராட்டம் நேர்வது நிச்சயம் என்றே தோன்றுகிறது. ஏனென்றால், எங்கள் விருப்பத்துக்கு மாறாக எங்கள் தலையில் பிரிட்டன் சுமத்தும் எந்த விஷயத்தையும் நாங்கள் எதிர்ப்போம்.

ஐரோப்பிய நிலைமையும் தூரக் கிழ்த்திசையின் நிலைமையும் ஒரு புறம் இருக்க, இந்தியாவின் உள்நாட்டு நிலைமைகளையே கவனித்தாலுங்கூட, இனி வெகுநாள் வீணே காலங் கடத்திக்கொண் டிருப்பது சாத்தியமல்ல. மேல் பார்வைக்கு எல்லாம் அமைதியாய் இருப்பதுபோலத்தான் தோன்றுகிறது. இந்தியாவின் பெரும் பாகத்திலும், மாகாணங்களில் காங்கிரஸ் சர்க்கார்கள் ஆட்சி புரிந்து வருகின்றன. என்றாலும், உள்ளுக்குள்ளே கனன்றுகொண் டிருக்கும் பயங்கரக் குமுறல் கேட்கிறது. நெருக்கடி சமீபித்துக்கொண் டிருக்கிறது என்பதைக் காட்டும் குறிகள் இப்போதே தென்படுகின்றன.

ஆகையால், பிரிட்டிஷ் சர்க்கார் இனியும் சுலபமாய்க் காலங் கடத்திக்கொண் டிருக்க முடியாது. அப்படியிருந்தும், இந்தியாவைப் பற்றியோ வேறு பிரச்னைகளைப் பற்றியோ, எவ்விதத் தீர்மானமும் செய்ய, பிரிட்டிஷ் சர்க்காரால் இயலவில்லை. நம்பிக்கைக்கே இடம் இல்லாதபடி காற்றடித்த திசையிலே தத்தளித்துக் கொண்டு, பேராபத்தில் போய் விழ, அவர்கள் சென்று கொண்டிருக்கிறார்கள். சிந்திக்கவோ செயல் புரியவோ

தங்களுக்குள்ள திறமையை யெல்லாம், இழந்துவிட்டவர்கள் போல், அவர்கள் தோன்றுகிறார்கள். பிரிட்டனில் ஆட்சி புரிந்துவரும் வகுப்பினர்கள் அழிந்து வருகிறார்கள் என்பதை நிச்சயமாய்க் காட்டும் குறியே ஆகும் இது. அந்த வகுப்பினர்கள்தாம் இதுவரையில் அதிகாரத்தைக் கைப்பற்றிக் கொண்டு, ஏகாதிபத்தியத்தைக் கண்காணித்து வந்தார்கள். இந்தியா விஷயத்தில் அவர்கள் கொண்டுள்ள மனோபாவத்தை, தனிப்படக் கவனிக்கலாகாது. உலக முழுவதையும் பற்றி அவர்கள் கொண்டுள்ள கொள்கையின் ஒருபகுதியே யாகும் அந்த மனோபாவம். ஐரோப்பாவில் பாஸிஸத்தை ஆதரித்துக்கொண்டு, இந்தியாவில் சுதந்தரமான ஜனநாயக அரசாங்கத்தை ஸ்தாபிப்பதென்பது பொருந்தாது. இந்தியாவில் சுதந்தர ஜனநாயக அரசாங்கத்தை ஸ்தாபிக்க நோக்கங் கொண்டால், உலக முழுவதிலுமே ஏகாதிபத்திய முறையை ஒழிக்கவேண்டி இருக்கும். பிரிட்டனில், ஜனநாயகத்தைப் பலப்படுத்த வேண்டும்; பாஸிஸத்தையும் அதன் சகல நோக்கங்களையும், துளியும் விட்டுக்கொடுக்காமல், எதிர்க்க வேண்டும். இப்படியெல்லாம் செய்வதானல், இன்று பிரிட்டன் துர்ப்பாக்கிய வசமாய் ஒரு சர்க்காரின் கீழ் அவதிப்பட்டுக் கொண்டிருக்கிறதே இதுபோன்ற சர்க்கார்களெல்லாம் ஒழிந்துபோக நேரும்.

ஆகையால், மேலே சொன்ன முதல் வழியைத் தற்போதைய நிலையில், பிரிட்டிஷ் சர்க்கார் கடைப்பிடிக்க மாட்டார்களென்பது தெளிவு. இரண்டாவது வழியிலே தான் அவர்களுக்கு அதிக நாட்டம் இருக்கும். என்றாலும், அதைக் கடைப்பிடிக்கவும், அவர்கள் தயங்குவார்கள். நடுமையமான ஏதாவதொரு வழியைக் கண்டு பிடிக்கவே முயல்வார்கள். அது பலிக்கவிட்டால், சர்வதேச

நிலைமையும் அனுசரணையாக இருக்கும் பட்சத்தில் அவர்கள் அடக்கு முறையைப் பிரயோகிப்பார்கள். அப்போதும், நேருக்கு நேரே போராடாமல் தவிர்க்கவே முயல்வார்கள். இந்தியாவில் உள்ள பற்பல பிற்போக்குச் சக்திகளின் பின்னே, முக்கியமாய்ச் சுதேச மன்னர்களுக்கும் வகுப்புவாதிகளுக்கும் பின்னே பெரிதும் ஒளிந்துகொண்டுதான், அவர்கள் வேலை செய்வார்கள். இந்த வேலை முறை தயாராகிவருவதை, இன்று நாம் காண்கிறோம்.

பெரும்பாலான மாகாணங்களில் காங்கிரஸ் மந்திரி சபைகள் ஏற்பட்டிருப்பதால், பல புதிய பிரச்னைகள் முன்னணிக்கு வந்திருக்கின்றன. அவைகள் காங்கிரஸின் அந்தஸ்தையும், ஸ்தாபன பலத்தையும் அதிகமாக்கி விட்டன. மகாஜனங்களை - குடியானவர்கள், தொழிலாளர் இரு வகையினரையுமே - உற்சாகப் படுத்திவிட்டன. குடியானவர்களுக்கும் ஆலைத் தொழிலாளர்களுக்கும் சாதகமான சில சட்டங்களை இயற்றி, அவர்களின் பல சுமைகளை, காங்கிரஸ் மந்திரிகள் குறைத்திருக்கிறார்கள். ஆயினும் எப்போதும் எதிர்பார்த்த பலன் மட்டும் கிட்டவில்லை. ஜீவாதாரமான பொருளாதாரப் பிரச்னைகள் நெருக்கிக்கொண் டிருக்கின்றன. அவைகளுக்குச் சிறிது சிறிது பரிகாரமே செய்ய முடிகிறது. சில சமயம் அந்தப் பரிகாரம் பயனற்றும் போகிறது. ஏனென்றால், தற்போதைய அரசியல் சட்டத்தில் பற்பல விஷயங்கள் கவர்னரின் விசேஷ அதிகாரத்துக்கு ஒதுக்கப்பட் டிருப்பதாலும், விசேஷ உரிமைகள் படைத்தோருக்குப் பற்பல பாதுகாப்புகள் அளிக்கப்பட் டிருப்பதாலும், மேற்கண்ட பிரச்னைகளுக்கு அடிப்படையான பரிகாரம் காண மந்திரிகளுக்கு அதிகாரம் இல்லை. ஆகையால் சமூக வாழ்விலே பிளவுகள் தோன்றி வருகின்றன.

இந்தப் பிளவுகள், தேசீய இயக்கத்தைச் சிதைக்க முயல்கின்றன. ஆனால், அவைகளால் அதை அப்படிச் சிதைக்க முடியாமல் போகலாம். ஏனென்றால், சுதந்தரம் அடைய வேண்டுமென்ற ராஜீய லக்ஷ்யத்தால் உண்டாகியிருக்கும் ஒற்றுமை உணர்ச்சி மிகவும் மகத்தானதாகும். நம்மைக் கவனித்துக்கொண் டிருக்கும் அந்நிய நாட்டவர்கள், கடுமையான வர்க்கப் போராட்டங்களைப் பார்த்துப் பழகியவர்கள். இந்தியாவில் காங்கிரஸ், ஒன்றுக்கொன்று முரணான நலன்களைப் படைத்த பற்பல வர்க்கங்களையும் ஒன்றுகூட்டி, அவைகளையெல்லாம் திறமையான முறையில் கட்டுப்பாடு கொள்ளச் செய்திருப்பது கண்டு, அந்த அந்நிய நாட்டவர்கள் ஆச்சரியப்படுகிறார்கள்.

இந்து - முஸ்லிம் பிரச்னை சென்ற ஒன்றரை வருஷ காலமாக, ஒரு புதிய தோற்றம் அடைந்திருக்கிறது. அது நமது ராஜீய முன்னேற்றத்தைச் சந்தேகமின்றித் தடை செய்துகொண்டுதான் இருக்கிறது. இந்த இந்து - முஸ்லிம் பிரச்னை பெரிதும் மனத்தத்துவ ரீதியானது. முஸ்லிம்களின் மனத்தில் ஏற்பட்டிருக்கும் ஒரு பயந்தான் இதற்குக் காரணம். ஜனநாயக முறையின் கீழ் இந்துக்கள் எங்கே தங்களை அலட்சியம் செய்துவிடுவார்களோ என்று முஸ்லிம்கள் பயப்படுகிறார்கள். இது மிகவும் கடுமையான பிரச்னை. மனத்தத்துவ ரீதியானது ஆகையால், சமாளிக்கக் கஷ்டமா யிருக்கிறது. ஆயினும், இதற்கு ஆழமான வேர் இல்லை. ஐரோப்பாவில் பற்பல தேசீய இனத்தவர்களுக்கும் இடையிலே ஏற்படும் சச்சரவுகளுடன் இதைப் போட்டுக் குழப்பலாகாது. ஏனென்றால், இந்தியாவில் மிகப் பெரும்பான்மையான இந்துக்களும் முஸ்லிம்களும் ஒரே தேசீய இனத்தைச் சேர்ந்தவர்களாவர். அவர்கள் அநேகமாக ஒரே விதமான

1072



பழக்க வழக்கங்களும் ஒரே பாஷையும் உடையவர்கள். பொருளாதாரப் பிரச்னைகள் வர வர அதிகமாய் முக்கியத்துவம் பெற்று வருகின்றன. அவைகள், இரு வகுப்பார்களையும் ஒரே விதமாகப் பாதிக்கின்றன. பொருளாதாரப் பிரச்னைகள் இப்படி முக்கியத்துவம் பெற்று வருவதைக் கொண்டு இந்து - முஸ்லிம் பிரச்னையைத் தீர்ப்பதுதான், மிகவும் சரியான வழியாகும். அதற்கிடையிலே சாமர்த்தியமாகவும் தாராளத்துடனும் இந்தியர் பிரச்னையைக் கவனித்தோமானால், இதன் கடுமையைத் தணிக்க உதவியாயிருக்கும்.

இந்திய சமஸ்தானங்கள் திடீரென்று தேசீய அரசியல் போராட்டத்தின் மத்தியில் வந்து குதித்திருக்கின்றன. அவைகளின் மக்கள் வடக்கே காச்மீரம் தொடங்கி, தெற்கே ஹைதராபாது, திருவாங்கூர் வரையிலும். கிளர்ச்சி செய்ய ஆரம்பித்திருக்கிறார்கள். பற்பல சமஸ்தானங்களில், சட்ட மறுப்பு உள்படத் தீவிரமான போராட்டங்களும் நடைபெற்று வருகின்றன. சில சமஸ்தானங்களில், மக்களுக்கு இப்போதே வெற்றிகளும் கிடைத்திருக்கின்றன. இந்தப் போராட்டங்களிலே மிகவும் முக்கியமாகக் குறிப்பிடத்தக்க ஓர் அம்சம் என்னவென்றால். பிரிட்டிஷ் சர்க்காரின் நடத்தைதான். அவர்கள் இந்தப் பொதுஜன இயக்கங்களை நசுக்கி, பழம் பசலியைச் சேர்ந்த ராஜாக்களைத் தூக்கித் தாங்கிக்கொண் டிருக்கிறார்கள். பொதுஜன இயக்கங்களுக்கு உண்மையான எதிர்ப்பு பிரிட்டிஷ் சர்க்காரிடமிருந்தோ. சமஸ்தானங்களில் உத்தியோகம் பார்க்கும் அதிகாரிகளிடமிருந்தோதான் கிளம்புகிறது என்று தெளிவாய்த் தெரிந்துவிட்டது. காங்கிரஸ் வெகு காலமாய்ச் சமஸ்தானங்களின் விஷயத்தில் நிதானமான கொள்கையை அநுஷ்டித்து வந்தது. ஆனால்,

இந்தப் புதிய நிலைமை ஏற்பட்ட பின்பு, அது அதிகத் தீவிரமான நடவடிக்கையைக் கைக்கொள்ளத் தொடங்கியிருக்கிறது. முக்கியமாய், பிரிட்டிஷார் தலையிட்டுச் சமஸ்தானங்களின் பழம் பசலி ஆட்சி முறையை ஆதரிப்பதை, காங்கிரஸ் எதிர்க்கிறது. ஒரு வேளை, இந்தப் போராட்டம் இந்தியாவின் மீதிப்பாகங்களுக்கும் பரவி, பெரிய தேசீயப் போராட்டமாக மாறவும் கூடும்; அதனால், மாகாணங்களின் காங்கிரஸ் மந்திரி சபைகள் கூடப் பதவியைத் துறக்க நேரலாம்.

மாகாணச் சுய ஆட்சி சுமார் இரண்டு வருஷங்களுக்கு முன்புதான் வந்தது. இதற்குள்ளேயே அதன் பிரயோசனமெல்லாம் அநேகமாய்த் தீர்ந்து போய்விட்டது. சமஷ்டியைப் பற்றி அடிக்கடி பேச்சு நடந்தாலும், அது வெகு தூரம் எட்டச் சென்றுவிட்டது. உத்தேசம் செய்யப்பட்டிருந்த சமஷ்டியை, காங்கிரஸ் அடியோடு நிராகரித்தது ; முக்கியமான முஸ்லிம் ஸ்தாபனமும்கூட, அதை நிராகரித்துள்ளது. அந்தச் சமஷ்டியை இந்தியாவின்மீது சுமத்த எண்ணினால், அதை இந்தியர்கள் நிச்சயமாய் எதிர்ப்பார்கள். அந்தச் சமஷ்டி வரப் போவதாகவே, வைஸ்ராயும் பிரிட்டிஷ் மந்திரிகளும் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். ஆயினும், போராட்டத்தைத் தவிர்க்க முடியாதென்று தோன்றுவதால், அதற்கு அஞ்சி, அந்தச் சமஷ்டியை அவர்கள் ஒத்திப் போட்டுக்கொண்டே இருக்கிறார்கள். ஏதாவது ஒரு ராஜி ஏற்படலாம் என்று இன்னமும் அவர்கள் நம்பிக்கொண்டிருக்கிறார்கள். ஆனால், இந்தச் சமஷ்டியையோ அல்லது இது போன்ற வேறு எதையாவதையோ ஆதாரமாய் வைத்துக்கொண்டு எவ்வித ராஜியும் ஏற்படுவது சாத்தியம் அல்ல. சமஸ்தானங்களில் சமீபத்தில் ஏற்பட்டுள்ள நிலைமைகளைப் பார்க்

கும்போதும் இந்தச் சமஷ்டி இந்தியாவில் ஒரு நாளும் அமலுக்கு வரப் போவதில்லை என்று தோன்றுகிறது.

இந்தியா இன்று ஒரு விசித்திரச் சித்திரமாய்க் காட்சியளிக்கிறது. மாகாணங்களிலே காங்கிரஸ் சர்க்கார்கள் பிரிட்டிஷ் சர்க்காருடன் பற்பல விஷயங்களில் ஒத்துழைக்கிறார்கள். ஆனால், இருதரப்பாருக்கும் இடையில் அடிக்கடி தகராறு வந்துகொண்டே இருக்கிறது. இதற்குப் பகைப் புலமாக, தேசிய இயக்கத்துக்கும் பிரிட்டிஷ் ஏகாதிபத்திய முறைக்கும் உள்ள பகைமை தொடர்ந்து இருந்து கொண்டே வருகிறது. பெரும் பிரச்னைகளெல்லாம் ஒரு நெருக்கடியை உண்டாக்கி, போராட்டத்திலே கொண்டு போய் விடும்போல் தோன்றுகின்றன. என்றாலும், ஐரோப்பிய நிலைமையின் நீண்ட சாயை இங்கே நம்மை எட்டி, நமது இயக்கத்தையும் அதேபோல நம் விஷயத்தில் பிரிட்டிஷ் சர்க்காரின் கொள்கையையும் பாதித்திருக்கிறது. வெளி உலகத்திலே நிகழும் நிகழ்ச்சிகள், இந்தியாவில் நிகழக்கூடிய சம்பவங்களைப் பெரிதும் பாதிக்கத்தான் போகின்றன. ஆகையால், உலகத்தை இந்தியா கவலையோடும் ஆழ்ந்த சிரத்தையுடனும் கவனித்து வருவதோடு, தான் மகத்தான தீர்மானங்களைச் செய்யவேண்டி வரும் நாளையும் எதிர்பார்த்துக்கொண்டு தயாராயிருக்கிறது.

—ஜனவரி 25, 1939.

# 2

# காங்கிரஸூம் யுத்தமும்

## 1. போருக்கு ஆயத்தம்

சென்ற ஆறுவார காலத்தில், இந்தியாவில் பல விஷயங்கள் நிகழ்ந்து விட்டன. யுத்தம் தொடங்கிய வுடனே, பலதிறப்பட்ட மனிதர்கள் - உயர்ந்த நிலைமையில் உள்ளவர்களும் சரி, அவர்களுக்குச் சிறிது குறைந்தவர்களும் சரிதான் - நாஜி ஆக்கிரமிப்பைப்பற்றித் தங்கள் அபிப்பிராயங்களை வெளியிட்டிருக்கிறார்கள். எங்கே பார்த்தாலும், நாஜி ஆக்கிரமிப்புக்குக் கண்டனம்தான் எழுந்திருக்கிறது. போலந்து மக்களின் துயர நிலைமைக்கு, ஏராளமான பேர் அனுதாபமும் தெரிவித்திருக்கிறார்கள். மகாத்மா காந்தி, உத்வேகமாய்ப் பேசியிருக்கிறார். பிற தலைவர்களும் நாஜி ஆக்கிரமிப்பைக் கண்டித்திருக்கிறார்கள். இந்தப் பற்பல அறிக்கைகளையும் கண்டு, பிரிட்டிஷ் அதிகாரிகளுக்கு மிகுந்த நிம்மதி ஏற்பட்டிருக்கிறது. ஆகவே, யுத்தம் சம்பந்தமாக இந்த நாட்டில் தாங்கள் என்ன காரியம் செய்தாலும் இந்தியா சம்மதித்திருக்கும் என்று, அவர்கள் முடிவு செய்து விட்டதாகத் தெளிவாய் விளங்குகிறது. நாஜி தத்துவத்தையும், போலந்தை நாஜிகள் படையெடுத்ததையும், நாம் கண்டிப்பது உண்மை. ஆனால், ஏகாதிபத்திய முறையை எதிர்ப்பது நமது ஸ்தாபிதமான கொள்கையாகும். அது மாறாது; தொடர்ந்து இருந்துகொண்டுதான் வரும். இதை அந்த அதிகாரிகள் உணர்ந்துகொள்ளவில்லை. காங்கிரஸ்காரர்

கள் தங்களுக்குள்ளே ஒரு கட்டுப்பாட்டை ஏற்படுத்திக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் தங்கள் சகாக்களுக்கு மரியாதை காட்டுகிறவர்கள்; தங்கள் ஸ்தாபனத்துக்குப் பக்தி செலுத்துகிறவர்கள். எனவே, செயல்புரிய அவசிய மான ஜீவாதார விஷயங்களில், தங்கள் தனிப்பட்ட அபிப் பிராயங்களைத் தீவிரமாய் வெளியிடாமல், காங்கிரஸ் காரர்கள் அடங்கியிருக்கிறார்கள். இதையும் பிரிட்டிஷ் அதிகாரிகள் புரிந்துகொள்ளவில்லை. பேச்சிலே நிதான மும் செயலிலே வலிமையும் காட்டும் ஒரு பழக்கம் நமக்கு உண்டாகியிருக்கிறது. இதை அந்த அதிகாரி கள் மறந்துவிட்டார்கள். எல்லாவற்றிலும் முக்கியமாக, காந்திஜி நட்போடும் மாரியாதையாகவுமே அதிகாரிகளை அணுகுவார். என்றாலும், அந்த நட்புக்கும் மரியாதைக் கும் பின்னே, எஃகைப்போன்ற உறுதி அவரிடம் உண்டு. இந்திய சுதந்தரம் சம்பந்தப்பட்ட எந்த ஜீவாதாரமான விஷயத்திலும் அவர் துளியும் வளைந்துகொடுக்க மாட் டார். கால் நூற்றாண்டாக அவரிடம் அனுபவம் பெற் றிருந்தும், பிரிட்டிஷ் அதிகாரிகள் இந்த விஷயத்தையும் தெரிந்துகொள்ளவில்லை.

பின்பு, காங்கிரஸ் காரியக் கமிட்டியின் அறிக்கை, செப்டம்பர்மீ 14உ வெளியாயிற்று. அது தேசீய அபிப்பிராயத்துக்குத் திட்டமான உருக் கொடுத்து, அதைத் தெளிவான சொற்களில் சொல்லிவிட்டது. உடனே, அந்த அறிக்கைக்கு இந்தியாவில் ஆச்சரியப் படத்தக்க ஆதரவு கிடைத்தது. எண்ணற்ற மக்கள் தங் கள் மனத்திலும் இதயத்திலும் ஏதோ மங்கலாகக் கொண் டிருந்த ஓர் உணர்ச்சிக்குத் தெளிவான உருக்கொடுத்து, அதைக் கம்பீரமான பாஷையில் வெளியிட்டது அந்த அறிக்கை. சந்தேகங்கள் தீர்ந்தன. திகைப்புகள்

அகன்றன. ஏனென்றால், இந்திய மக்களும் தங்கள் அபிப்பிராயத்தை வெளியிட ஒரு வழி கிடைத்துவிட்டது. நம்முடைய தற்காலப் பிரச்னைகளை யெல்லாம் தீர்த்துக்கொள்ள, நிச்சயமான ஒரு மார்க்கத்தை, உலகத்துக்கு இந்திய மக்கள் சுட்டிக் காட்டியதுபோல் தோன்றியது. இந்த அற்புதமான வேண்டுகோளை அமுக்கி விட, தணிக்கை அதிகாரிகளும் அவர்களைப் போன்ற பிறரும் என்னதான் முயன்றும், இந்தியரின் சொல்லை, உலகம் செவிகொடுத்துக் கேட்கலாயிற்று. இங்கிலாந்தில் முற்போக்கான அபிப்பிராயம் உடையவர்கள், அதை உத்ஸாகத்துடன் வரவேற்றார்கள். ஜனநாயக ஆட்சி படைத்த அமெரிக்காவில், அதற்குப் பிரமாதமான விளம்பரம் கிடைத்தது. யுத்தத்துக்கு ஆட்பட்ட ஐரோப்பாவில்கூட, அதற்கு ஆதரவு கிடைத்தது. அடக்கப்பட்ட அடிமை நாடுகளின் மக்களெல்லாம், அமுக்கப்பட்ட சகல மக்களுக்கும் அது ஒரு சுதந்தர சாசனம் என்று கண்டார்கள். கால உணர்ச்சிக்கு ஏற்றதாய் இருந்தது அந்த அறிக்கை.

இதன் பிறகு நிகழ்ந்த சகல நிகழ்ச்சிகளும், அந்த அறிக்கையின் தர்க்க ரீதியான விளைவுகளேயாகும். யுத்த நோக்கங்கள் என்ன என்று தெளிவுபடுத்தும்படி தான், பிரிட்டனைக் காங்கிரஸ் கமிட்டி அந்த அறிக்கையிலே அழைத்தது. ஜெட்லண்டு பிரபு பிரசங்கம் செய்தார் ; அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி கூடியது; வைஸ்ராய் அறிக்கை பிறந்தது. முஸ்லிம் லீக் தீர்மானங்கள் வெளியாயின ; காமன்ஸ் சபை விவாதம் நடந்தது. இப்போது, மாகாணச் சட்டசபைகள் யுத்தம் பற்றிய தீர்மானங்களை நிறைவேற்றின. நிவர்த்தியின்றிக் காங்கிரஸ் மந்திரிகள் ராஜீனமாச் செய்தார்கள். இத்தனையும்

ஒன்றுக்குப் பின் ஒன்று வரிசையாக நிகழ்ந்து, இந்திய அரங்கத்தில் ஒளிவீசி யிருக்கின்றன.

இந்த ஒளியிலே நாம் காண்பதென்ன? முதல் முதலாக, காங்கிரஸின் உன்னதமான ராஜ தந்திரத்தையும் ஞானத்தையும் நாம் காண்கிறோம். காங்கிரஸ் செய்வதெல்லாம் நியாயம் என்று இந்தியாவுக்கும் உலகத்துக்கும் தெளிவாகி விட்டது. காங்கிரஸ் தன் லட்சியங்களையும் முந்திய அறிக்கைகளையும் கைவிடாமல் பிடித்துக் கொண்டு அவைகளை, மாறிக்கொண்டு வரும் சங்கடமான நிலைமைகளுக்குப் பிரயோகம் செய்துள்ளது. இவ்வாறாக, தான் லட்சியவாதியாக இருப்பது மட்டிலும் அல்லாமல் அதே சமயத்தில் அனுபவ ரீதியிலும் நடந்து கொள்ளத் தனக்குச் சக்தி உண்டு என்பதை, காங்கிரஸ் நிரூபித்து விட்டது. உலக சுதந்தரம், யுத்த லட்சியங்கள், சமாதான லட்சியங்கள் ஆகிய இவைகள் அனைத்தும் அடங்கிய ஒரு சித்திரத்திலேயே காங்கிரஸ் வேண்டும் சுதந்தரம் இழைந்திருக்கிறது. உலகத்தில் நிகழ்ந்து வரும் தீமைகளுக்கெல்லாம் ஓர் அனுபவ ரீதியான பரிகாரத்தைக் காங்கிரஸ் சொல்லியுள்ளது.

இரண்டாவதாக, இந்த யுத்தத்தின் உண்மையான சொரூபம் தெரிந்துவிட்டது. எப்போதும் போலவே இப்போதும் தங்கள் ஏகாதிபத்திய நலன்களைப் பாதுகாத்துக் கொள்ளவே, பிரிட்டிஷ் சர்க்கார் முனைந்திருக்கிறார்கள். அவர்கள் காங்கிரஸுக்குத் தந்துள்ள பதில், இதைச் சந்தேகமறக் காட்டிவிட்டது. இது ஜனநாயக யுத்தம் அல்ல. ஜனநாயக யுத்தம் என்றால், நாஜி தத்துவத்தை எதிர்க்கும் ஜனநாயக சக்திகள் ஒரு தரப்பிலும், பிற்போக்குச் சக்திகள் மறு தரப்பிலும் திரண்டு நிற்கவேண்டும். நேசக் கட்சியாரின் பக்கத்தில் சில ஜனநாயக சக்தி

கள் கூடி நிற்கின்றன என்பது உண்மை. ஆனால், இங்கிலாந்து, பிரான்ஸ் ஆகிய இரண்டு நாடுகளின் தலைவிதியையும் கண்காணித்துக்கொண் டிருக்கும் சர்க்கார்கள் மதிப்பிழந்த பழைய சாக்கார்களே யாகும். ஐரோப்பாவில் இப்போது ஏற்பட்டிருக்கும் துர்ப்பாக்கிய நிலைமைக்கு அந்தச் சர்க்கார்களே பொறுப்பாகும். மூனிக், ஸ்பெயின் இந்த இரண்டையும் நாம் மறக்கமுடியாது. இன்று பிரான்ஸில் உள்ள சர்க்கார், பிற்போக்குக்குக் கோட்டையாகும். பிரிட்டிஷ் சர்க்காரிலோ இன்னமும் மிஸ்டர் நெவில் சேம்பர்லீனே பிரதம மந்திரியாக இருக்கிறார்; அப்புறம் என்ன சொல்லக்கிடக்கிறது? இதை யெல்லாம் நாம் அறிவோம். என்றாலும், மக்களின் மனத்தில் உள்ள சகல சந்தேகங்களையும் அகற்றுவது, அவசியமாயிருந்தது. யுத்தத்தால் சூழ்ந்திருக்கும் பனித் திரையிலிருந்து, உண்மையை வெளிப்படுத்தவேண்டி யிருந்தது.

அந்த உண்மை வெளிவந்துவிட்டது. அதைப் பார்க்க அழகாயில்லை. ஸர் ஸாமுவேல் ஹோர் எத்தனையோ அலங்காரமான வார்த்தைகளைத்தாம் சொல்லுகிறார். ஆயினும், கிழடுதட்டித் தளர்ந்து போன ஏகாதிபத்திய முறைக்கு, அந்த வார்த்தைகளெல்லாம் புத்துயிர் கொடுக்க முடியாது. ஏகாதிபத்திய முறை என்ற கட்டிடம் இன்று ஆட்டமெடுத்துப் போய்விட்டது; நவீன கால நிலைமைகளில் அதற்குச் சற்றும் இடமில்லை. என்றாலும், பிரிட்டனில் ஆட்சிபுரியும் வகுப்பார், இன்னமும் ஏகாதிபத்திய ரீதியிலேயே சிந்திக்கிறார்கள்; ஏகாதிபத்தியத்தைக் காப்பாற்றவும் முயல்கிறார்கள். இந்திய சுதந்தரம் பற்றித் தெளிவாய் ஓர் அறிக்கை செய்யக்கூட, அவர்கள் அஞ்சுகிறார்கள். இந்த ஏகாதிபத்தியவாதிகளுக்குச் சிறுபான்மை வகுப்பார்களிடமோ சுதேச மன்னர்களிடமோ அன்பு

ஏதும் இல்லை. ஆனால், அந்த இரு வகையினரை யும், தங்களுடைய முக்கிய நோக்கத்துக்குப் பயன் படுத்திக்கொள்கிறார்கள். இந்தியாவில் பிரிட்டிஷாருக்கு உள்ள நிதி நலன்களையும் இதர விசேஷ நலன்களை யும் காப்பாற்றிக் கொள்வதில் மாத்திரமே, அவர்கள் முக்கியமாகக் கவனம் செலுத்துகிறார்கள்.

ஏகாதிபத்திய முறைக்கும், இந்தியத் தேசீயம், சுதந்தரம் இவைகளுக்கும் இடையிலே ராஜி இல்லை. இது இந்திய அரசியலிலே ஒரு சூத்திரமாகும். நமது போராட்டம் எந்தக் கட்டத்திலிருக்கும்போதும், இந்த விரோதம் நிலைத்து வந்திருக்கிறது. ஏகாதிபத்திய முறையை முடித்துவிடவேண்டும்; இந்திய சுதந்தரத்தை ஒப்புக்கொள்ளவேண்டும்; இவ்வாறாக, பன்னெடு நாளாய் இருந்துவரும் இந்தப் பகைமைக்குப் பதிலாக, நட்பும் ஒத்துழைப்பும் உண்டாக வேண்டும். இதுதான் காங்கிரஸின் கோரிக்கை. இந்தக் கோரிக்கையைப் பிரிட் டிஷ் சர்க்கார் மறுத்துவிட்டார்கள். ஆகையால், இப் போது நாம் பிரிந்து அவரவர் வழியில் சென்றுகொண் டிருக்கிறோம். இனி விதியோ சந்தர்ப்பமோ என்று நம்மை ஒன்றுசேர்க்கப் போகிறதோ ?

மூன்றாவதாக, முஸ்லிம் லீக்கின் நிலைமை, எவ்விதச் சந்தேகத்துக்கும் இடமில்லாமல் தெளிவாகி விட்டது. மூன்று வருஷத்துக்கு முந்தி இந்திய சுதந்தரத்தையே தனது லட்சியமாக லீக் ஒப்புக்கொண்டது. தனக்கு அங்கத்தினர்களைச் சேர்த்துக்கொள்ளும் முறையையும் அது விஸ்தரித்துக்கொண்டது. இதை நாம் வரவேற் றோம். என்றாலும், அதன் பழைய பிற்போக்கான ராஜீயதிருஷ்டி பின்னும் இருந்து கொண்டே வந்ததை, வெகு சீக்கிரத்திலே நாம் கண்டுகொண்டோம். இந்த

விஷயத்தை முஸ்லிம் மகாஜனங்கள் உணர்ந்து கொள்ளாதபடி, வகுப்புவாதப் போர்வையின் மூலமாக அவர்கள் தடுக்கப்படுகிறார்கள். இங்கே நாம் லீக்கின் வகுப்புவாதக் கோரிக்கைகளைப் பற்றிச் சர்ச்சை செய்யவில்லை. அந்தக் கோரிக்கைகள், சரியோ தவறோ எவ்வாறாயினும் இருக்கட்டும். ஒரு மனிதன் வகுப்புவாதியாக இருக்கலாம்; அதே சமயத்தில், அரசியல் சுதந்தரத்தில் தீவிர ஆர்வம் உடையவனாகவும் இருக்கமுடியும். ஆனால் ஏதோ ஒரு கட்டத்தில் இந்த இரண்டு பகுதிகளுக்கும் முரண்பாடு ஏற்படத்தான் ஏற்படும். அரசியலில் அற்பமான பிரச்னைகளில், காங்கிரஸ் சில சமயம் தவறு செய்ததுண்டு. ஆனால், பெரிய பிரச்னை எழுந்தபோதெல்லாம், அது ஒரு போதும் தவறே செய்ததில்லை. ஆனால் முஸ்லிம் லீகோ, பெரும் பிரச்னைகள் எழும்போதெல்லாம் தவறே செய்திருக்கிறது. ஏதோ சில அற்பமான பிரச்னைகளில், அபூர்வமாகச் சில சமயம், அது செய்தது சரியாயிருக்கலாம்.

நமது தேசிய சரித்திரத்தின் உன்னதமான இந்த நெருக்கடியில், பரிபூரணமான பிற்போக்குச் சக்திகளோடு லீக் சேர்ந்துகொண்டது துயரத்துக்குரிய விஷயமாகும். அதன் சொந்த அங்கத்தினர்களிலேயே பலர், அது இப்படிச் செய்வதை ஆதரிக்கிறார்கள் என்று நாம் நம்பவில்லை. முஸ்லிம் மகாஜனங்கள் இந்திய சுதந்தரத்தில் பலமான பற்று உடையவர்கள் என்று நாம் நிச்சயமாக நம்புகிறோம். லீக் சில வகுப்புவாத விஷயங்களில், அவர்களுக்குப் பிரதிநிதியாயிருக்கலாம். ஆனால், ராஜீய விஷயங்களில் அது அப்படி அவர்களின் பிரதிநிதியாக இல்லை என்பது நிச்சயம்

திரை விழுகிறது. காங்கிரஸ் மந்திரிசபைகள் வெளி

யேறுகின்றன. ஐக்கியமாகாணச் சட்டசபையில் நிகழ்ந்த பிரசங்கமாரிகளுக்கெல்லாம் பகைப் புலமாகத் தென்பட்டது ஒரு போராட்டம். முன்னேற்றத்துக்கும் பிற்போக்குக்கும் நடக்கும் போராட்டமே அது. விவாத முடிவிலே தோன்றிய உத்ஸாகம், ஐக்கிய மாகாணத்தின் உண்மையான உணர்ச்சியையும் அதன் மக்களின் மனோபாவ வேகத்தையும் ஓரளவு காட்டிவிட்டது. நாம் போராட்டத்துக்கு ஆயத்தமாகிவிட்டோம். நமக்கு வரும் கட்டளைப்படி செயல் புரியக் காத்திருக்கிறோம்.

—அக்டோபர் 31, 1939.

## 2. நியாயம் என்ன ?

பல நாள் வரையில் நமக்கு எல்லாம் ஒரே மர்மமாயிருந்தது. அரசியல் ஸ்தாபனங்களின் தலைமைக் கமிட்டிகளும் டில்லியில் கூடிய பிரபலஸ்தர்களும் என்ன செய்கிறார்கள் என்ற செய்திகளையும் என்ன செய்யப் போகிறார்கள் என்ற ஹேஷ்யங்களையும் நாம் துண்டு துணுக்குகளாய்ப் பெற்றுப் படித்துக்கொண் டிருந்தோம். இப்போது நமக்கு ஏராளமான தகவல் கிடைத்துள்ளது - கடிதங்களும், அறிக்கைகளும், வைஸ்ராயின் ஒரு ரேடியோப் பிரசங்கமும்கூடத்தான் கிடைத்துள்ளன. வைஸ்ராய்ப் பிரபு மிக்க உருக்கமான வார்த்தைகளிலே எழுதியும் பேசியும் இருக்கிறார். ஆனால் நாம்தான் நிரம்ப உருகிவிடவில்லை. இதற்கு அவர் நம்மை மன்னிப்பார் என்று நம்புகிறோம். நாம் துஷ்டப்பையன்கள் என்று அவர் நமக்குச் சொல்லுகிறார். பிரிட்டிஷ் சர்க்கார் எத்தனையோ முயற்சி செய்தும், வைஸ்ராய் நமக்கு எத்தனையோ வேண்டுகோள்கள் விடுத்தும், நாம் நம்முடைய வேற்றுமைகளைச் சமரசம் செய்துகொள்ள

வில்லையாம். நம்மிடத்திலே பல குற்றங்களும் குறைகளும் இருக்கத்தான் இருக்கின்றன. இதை நாம் வருத்தத்துடன் உணர்ந்தே இருக்கிறோம். ஆனால், தன்னை வெள்ளைச் சமாதானத் தேவதூதன் என்று பிரிட்டிஷ் சர்க்கார் பாத்தியம் கொண்டாடுகிறதே, அதை நாம் ஒப்புக்கொள்ள வேண்டுமா? நூற்றெண்பது வருஷத்துக்கு மேலாக இந்தச் சர்க்காரிடம் நாம் கொஞ்சம் அனுபவம் பெற்றிருக்கிறோம். அதை மறக்க நமக்குக் கஷ்டமா யிருக்கிறது. தொடர்ந்து வரிசையாய் வந்த வைஸ்ராய்கள், பிரிட்டிஷ் சர்க்கார்கள் ஆகியவர்களின் காருண்யம் மிகுந்த செல்வாக்கின் கீழே, இந்தியாவில் வகுப்புப் பிரச்னை எப்படி உருவெடுத்தது, ஊட்டம் பெற்றது, வளர்ந்து வளர்ந்து பிரம்மாண்டமாயிற்று என்பவை பற்றியெல்லாம் நமக்குக் கொஞ்சம் தெரியும். அந்தப் பழைய ஐதீகம் இன்னமும் இருந்துகொண்டு, இந்தியாவில் பிரிட்டிஷார் அனுஷ்டிக்கும் கொள்கையில் வெளி வருகிறது என்ற விஷயம் தெளிவாய் விளங்குகிறது. வைஸ்ராய் பேசிவிட்டார்; அவ்வாறே ஜெட்லண்டு பிரபுவும், ஸர் ஸாமுவேல் ஹோரும், மற்றும் உயர்ந்த அந்தஸ்திலோ தாழ்ந்த அந்தஸ்திலோ உள்ள பலரும் பேசிவிட்டார்கள்! அப்படிப் பேசியவர்களில் ஸாலிஸ்பரிப் பிரபுவை நாம் மறக்கலாமா? அவர் இந்தியாவில் உள்ள 'பூர்விகக் குடிக' ளிடம் அருமையான சிரத்தை காட்டியிருக்கிறாரே! இந்த எல்லாப் பேச்சுக்களிலும் ஒரு பழைய கருத்தே ஊடுருவிச் செல்கிறது - உலகத்தை உய்விக்கும் சுமை வெள்ளையனைச் சேர்ந்தது என்ற கருத்து; இந்தத் துரதிருஷ்டம் பிடித்த நாட்டின் உள்நாட்டுத் தொல்லைகளை யெல்லாம் தீர்த்து வைக்கப் பிரிட்டிஷ் ராஜ தந்திரிகளும் நிர்வாகிகளும் மல்லுக் கட்டிக்கொண் டிருக்கிறார்கள் என்ற கருத்து.

டில்லியில் என்ன நடந்தது? மகாத்மா காந்தி, ஸ்ரீ ராஜேந்திரப்பிரஸாத், மிஸ்டர் ஜின்னு இந்த மூவரையும் வைஸ்ராய் சந்தித்தார். மாகாணங்களின் விஷயத்தில் இவர்கள் ஓர் ஒப்பந்தத்துக்கு வந்துவிட்டால், மத்திய விஷயம் பற்றிய பிரச்னையை மிகவும் சுலபமாகத் தீர்த்து விடலாம் என்று அவர் இவர்களுக்கு ஒரு யோசனையைச் சமர்ப்பித்தார். ஜின்னுவுக்கும் காங்கிரஸுக்கும் ஏற்பட்டிருக்கும் ஏதோ ஒரு தகராறுதான் இந்த நெருக்கடி என்றும், தாம் பரோபகாரச் சிந்தையுள்ள ஒரு பஞ்சாயத்துதார் என்ற முறையில் அன்றி இதில் தமக்கு எவ்வித சம்பந்தமும் இல்லை யென்றும், வைஸ்ராய் எண்ணுவதுபோல் தோன்றுகிறது. மாகாணங்களில் சரிக்கட்டிக் கொள்ளும்படி அப்படி என்னதான் நடந்துவிட்டது? காங்கிரஸ் சர்க்கார்கள் ராஜினுமாச் செய்தார்கள். எந்த வகுப்புவாதப் பிரச்னையின்மீதும் அவர்கள் அப்படி ராஜினுமாச் செய்யவில்லை. பிரிட்டிஷார் கடைப்பிடிக்கும் கொள்கை காரணமாகவே அவர்கள் ராஜினுமாச் செய்தார்கள். அந்தக் கொள்கை இவர்களுக்கு உடன்பாடில்லை. அந்தக் கொள்கையிலிருந்து தாங்கள் விலகிக் கொள்ள இவர்கள் விரும்பினுர்கள். போராட்டம் பிரிட்டிஷ் சர்க்காரோடுதான்.

இவ்வாறுக, மாகாண சர்க்கார்கள் சம்பந்தமாக, ஸ்ரீ ராஜேந்திரப்பிரஸாதும் மிஸ்டர் ஜின்னுவும் முடிவு செய்ய என்ன இருக்கிறது? ஜின்னு பிரிட்டனின் கொள்கையைக் கண்காணிப்பவராகவும் அதன் சார்பாகப் பேசக்கூடியவராகவும் இருந்தால், இவ்விஷயத்தில் அவர் உதவியாயிருக்கலாம். ஆனல், அவரே அந்தக் கொள்கைக்கு ஒரு விரோதி; அதைக் கண்டிப்பவர். பிரிட்டிஷ் சர்க்காரிடம் அவருக்கும் சொந்தக் குறைகள் உண்டு. ஆகை

யால், மாகாண சர்க்கார்களைப்பற்றி என்ன செய்யக்கிடக்கிறது? தம்மைச் சந்தித்த தலைவர்களிடம் வைஸ்ராய் என்ன எதிர்பார்த்தார் என்பதையே நம்மால் அறிய முடியவில்லை. சமீப நிகழ்ச்சிகளைக் கவனித்து, அவைகளின் பொருளை அவர் உணர்ந்துகொள்ளவில்லை என்றுதான் நாம் நினைக்கவேண்டி யிருக்கிறது.

இரண்டு வாரங்களுக்கு முன்பு பிரிட்டிஷ் கொள்கையை வைஸ்ராய் அறிக்கை செய்தபோது, நாடெங்கும் ஆத்திரம் எழுந்தது. இம்மாதிரி ஆத்திரம் இந்தியாவில் வேறு எக்காலத்தும் எழுந்ததில்லை. அந்த அறிக்கையைச் சகலரும் மிகப் பலமாக எதிர்த்தார்கள். தனிப்பட்ட மிகச் சில நபர்களே அதற்கு விலக்கு. அவர்கள் மிக்க பிரபலஸ்தர்கள்தாம். ஆனால், யாருக்கும் பிரதிநிதித்துவம் வாய்ந்தவர்கள் அல்ல. வைஸ்ராயின் அறிக்கையை முஸ்லிம் லீக் அங்கீகரிக்கவில்லை என்பதை, நாம் ஞாபகத்தில் வைக்கவேண்டும். ஹிந்து மகாசபை அதைக் கண்டித்தது. மிதவாதி சம்மேளனம் கூட, அதனிடம் அன்பு காட்டவில்லை. அந்த அறிக்கைபற்றிக் காங்கிரஸின் கண்டனம் தான், மற்றெல்லாவற்றையும் விடப் பலமானது; அதன் விளைவாகக் காங்கிரஸ் சர்க்கார்களும் ராஜீனமாச் செய்து விட்டன.

இப்படியெல்லாம் இருந்தும், இவைகளைப் பொருட்படுத்தாமல், வைஸ்ராய் நம் தலைவர்களைச் சந்திக்கிறார்; எல்லாம் மறந்தவரைப்போல், மாகாண சர்க்கார்களை நடத்தும்படி அவர்களுக்குச் சொல்லுகிறார்! இத்தனையும் துயரத்துக்குரிய விஷயமாயில்லாவிட்டால், இந்த விகடத்தை நாம் அனுபவித்திருப்போம். ஆனால், வைஸ்ராய் இந்த விதமாய் நடிப்பதும், நாம் நம்முடைய உயிருக்கு உயிராய்க் கொண்டிருக்கும் கொள்கைகளையும் திட சங்கல்

பங்களையும் அம்மானை ஆடிக்கொண் டிருப்போம் என்று அவர் கற்பனை செய்வதும், துயரத்துக்குரிய விஷயமாகும். பிரிட்டனில் ஆட்சி புரிந்து வரும் வகுப்பாரின் ஆத்ம திருப்திதான், இன்னும் அதிகத் துயரத்துக்குரிய விஷயம். ஐரோப்பாவில் நிகழ்ந்துள்ள மகா அபாயமான பல நிகழ்ச்சிகளும்கூட, அவர்களுடைய இந்த ஆத்ம திருப்தியைப் பாதிக்கவில்லை. 'பிரித்தாளும் தந்திரத்'தை யன்றி வேறெதையும்பற்றி நினைக்க, அவர்களை அவை தூண்டவும் இல்லை. ஆனால், அபாயப் பிரதேசம் கிழ்த்திசையிலே நீண்டு வருகிறது; ஆத்ம திருப்தியும் தன் மயக்கமும் அதன் முன்னேற்றத்தைத் தடுக்கமாட்டா.

யுத்த நோக்கங்களையும் இந்திய சுதந்தரத்தையும் பற்றி அறிக்கை செய்யுங்கள் என்று காங்கிரஸ் கோரியது. பிரிட்டிஷ் சர்க்கார் இதைச் செய்யத் தயாரில்லை. டில்லியில் நடந்த விவகாரம் இதுபற்றியதேயாகும் என்பது தெளிவு. நேரடியான பிரச்னை இதுதான். ஒளி மறைவின்றியும் நேரிடவும் இதைத்தான் சமாளித்திருக்கவேண்டும். இந்த விஷயம் திருப்திகரமாகத் தீர்க்கப்படாத வரையில், மற்றவையெல்லாம் அடுத்தபடியே யாகும். இந்தப் 'பிரதமமான தார்மிக' இடைஞ்சலை அகற்றாத வரையில் காங்கிரஸ் மந்திரிகள் மீண்டும் பதவி ஏற்கமாட்டார்கள். பிரிட்டிஷ் சர்க்காருடன் நாம் எவ்வித ஒத்துழைப்பும் செய்யோம். இதைச் செய்யும்வரையில், பிரிட்டிஷ் கொள்கையினின்றும் யுத்த முயற்சியிலிருந்தும் நாம் அடியோடு விலகித்தான் இருப்போம்.

மேற்கண்ட விதமான அறிக்கைக்கு இந்தியர் தரப்பிலிருந்து எவ்வித இடைஞ்சலும் இல்லை. இதையும் நாம் தெளிவாக ஞாபகத்தில் வைக்கவேண்டும். முஸ்லிம் லீக் ஏதோ சில விஷயங்களில் நம்முடன் உடன்பாடு கொள்

ளாமல் இருக்கலாம். ஆனல், சுதந்தரத்தையும் இந்திய விடுதலையையும் அதுவும் ஆதரிக்கிறது. நாம் அறிந்தமட்டில், மிஸ்டர் ஜின்ன அத்தகையதோர் அறிக்கை பிறப்பதை அங்கீகரிக்கிருர். ஆனல், அதற்கு அவர் நம்மைப் போல் அவ்வளவு முக்கியத்துவம் அளிக்காமல் இருக்கலாம். நாம் கோரும் அரசியல் நிர்ணயசபையானது, "எவ்வளவு சாத்தியமோ அவ்வளவு விரிவான ஓட்டுரிமை அஸ்திவாரத்தின் மீதும், வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் பற்றி ஓர் ஒப்பந்தம் செய்து கொள்வதன் மூலமுமே அமைக்கப்படும்." இதைக் காங்கிரஸ் தலைவர் தெளிவாகத் தெரிவித்திருக்கிருர். மேலும், "சிறுபான்மை வகுப்புகளின் உரிமைகளும் நலன்களும் பூரணமாகப் பாதுகாக்கப்படும்; இந்தப் பாதுகாப்பு, சம்பந்தப்பட்ட வகுப்புகளுடன் செய்துகொள்ளும் ஒப்பந்தத்தை அனுசரித்திருக்கும்." சிறுபான்மை வகுப்புகளின் மனத்தில் இருக்கக்கூடிய எவ்வித அச்சத்தையும் இது நிச்சயமாய் அகற்றிவிடுகிறது. நாம் ஆலோசித்துத் தீர்மானிக்க வேண்டிய கடுமையான விஷயங்கள் அநேகம் இருக்கலாம். ஆனல், அடிப்படையான கொள்கைகளை உறுதியாய் ஸ்தாபித்துவிட்டோம். அந்தக் கொள்கைகளில் நமக்குள் உடன்பாடு இருக்கிறது. இத்தகையதோர் அரசியல் நிர்ணயசபையின் மூலம் இந்தியாவின் அரசியல் அமைப்பைத் தயாரித்துக்கொள்வதில் வகுப்புவாத ரீதியான பெரிய கஷ்டம் எதுவும் இல்லை.

ஆகவே, இந்தியாவின் முன்னேற்றத்துக்கு ஏதோ வகுப்பு வேற்றுமை தடையாயிருப்பதாய் ஒரு கட்டுக் கதையை வைஸ்ராய் தூபம்போட்டு எழுப்புகிருரே அது, உண்மையை ஆராய்ந்து பார்த்தால், அடியோடு மங்கி மாய்ந்து போகிறது. இன்று பிரத்யட்சமாயிருப்பது

ஒரே ஓர் உண்மைதான்: அதாவது, பிரிட்டன் நடத்தி வரும் யுத்தம் மேலும் மேலும் ஏகாதிபத்திய முறையிலேயே சென்றுவருகிறது. யுத்த நோக்கங்களைச் சொல்லப் பிரிட்டன் மறுத்துவிட்டது. இதை அறிந்துகொண்ட நாம், நமது தீர்மானத்தைச் செய்துவிட்டோம்; அதன்படியே நடப்போம்.

—நவம்பர் 6, 1939.

### 3. பத்திரிகைகளுக்கு விடுத்த அறிக்கை

நேற்றிரவு வைஸ்ராய் விடுத்த அறிக்கை எனக்கு ஆச்சரியமாயிருக்கிறது. டில்லி நிகழ்ச்சிகளைப் பற்றி, அவைகளில் சம்பந்தப்பட்ட சில பிரதானத் தலைவர்களிடமிருந்து எனக்கு ஒரு விவரம் கிடைத்திருக்கிறது. அந்த விவரத்திலிருந்து அடியோடு மாறுபட்ட ஒரு தோற்றம் தருகிறது வைஸ்ராயின் அறிக்கை. ஏற்பட்டிருக்கும் பிரச்னை வகுப்புவாத ரீதியானது என மதிக்கவேண்டும் என்றே அவருடைய அறிக்கையிலிருந்து தோன்றும். மேலும் அவர், "பிரதான அரசியல் கட்சிகளின் பிரதிநிதிகளுக்கு இடையிலே, இன்று அடியோடு வேற்றுமை இருந்து வருகிறது" என்று கூறுகிறார். இது நிலைமையை முற்றும் திரித்து அர்த்தம் செய்துகொள்வதாகும் என்றே எனக்குத் தோன்றுகிறது. அடிப்படையான பிரச்னைகளில் அத்தகைய வேற்றுமை இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. ஆனால், காங்கிரஸுக்கும் பிரிட்டிஷ் சர்க்காருக்கும் இடையிலேமட்டில், ஓர் அடிப்படையான வேற்றுமை இருக்கிறது. அந்த வேற்றுமை காரணமாகத் தான், வைஸ்ராயின் யோசனைகளைப்பற்றி நாங்கள் ஆலோசிக்க முடியவில்லை. நம்முன் உள்ள பிரச்னை

அரசியல் ரீதியானது. அரசியல் ரீதியிலேயே நாம் அனைவரும் அதைப்பற்றி ஆலோசிக்க வேண்டும். கூடிய சீக்கிரம் ஒரு நாள் வகுப்புப் பிரச்னை குறித்து நாங்கள் பூரணமாய் விவாதிக்கவேண்டும் என்று, எனக்கும் ஜின்னுவுக்கும் இடையில் ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டிருக் கிறது. அரசியல் சங்கடம் தீராதவரையில், இந்த ஒப்பந்தம் வைஸ்ராயின் யோசனைகளைப் பாதிக்காது. ஆகவேதான், வைஸ்ராயின் யோசனைகள் சம்பந்தப்பட்ட மட்டில், ஒப்பந்தம் பற்றிப் பேச்சு நடக்கவில்லை.

நெருக்கடி எழுந்தது ஓர் அரசியல் பிரச்னைமீது தான். அதாவது, ஐரோப்பிய யுத்தம் தொடங்கியதும், இந்தியாவை அந்த யுத்தத்தில் கலந்த ஒரு நாடாகப் பிரிட்டன் அறிக்கை செய்தது பற்றியேயாகும். யுத்த நோக்கங்கள் என்ன என்றும், அவை இந்தியாவுக்கு எப்படிப் பிரயோகமாகும் என்றும், அறிக்கை செய்ய வேண்டும் என்று காங்கிரஸ் காரியக்கமிட்டி கேட்டது. உடனே, வைஸ்ராயின் மூலமாக, பிரிட்டிஷ் சர்க்காரின் அறிக்கை ஒன்று பிறந்தது. அந்த அறிக்கை சற்றும் திருப்திகரமானதல்ல என்று நாம் மதித்தோம். அதன் பலனாக, தான் இந்த யுத்தத்திலே சம்பந்தப்பட முடியா தென்று, காங்கிரஸ் தீர்மானித்தது. காங்கிரஸ் மந்திரிக ளெல்லாம் ராஜீனமாச் செய்யவேண்டும் என்றும், அது கட்டளை பிறப்பித்தது. ராஜீனமாக்கள் சமர்ப்பிக்கப் பட்டன. சில மாகாணங்களில் ராஜீனமாக்கள் அங்கீ காரமும் ஆகிவிட்டன. இதிலெல்லாம் வகுப்புப்பிரச்னைக் குச் சம்பந்தமே இல்லை.

இந்த நிலையில், வைஸ்ராய் யோசனை சொல்லுகிறார்: காங்கிரஸும் லீகும் மாகாணங்களின் விஷயத்தில் ஓர் ஒப்பந்தத்துக்கு வரவேண்டுமாம். அதன்மேல், மத்திய

விஷயம் பற்றி யோசிக்கப்படுமோம்! இந்த யோசனே வேறு எந்தக் காலத்தில் விரும்பத்தக்கதா யிருந்திருக்கக் கூடு மாயினும் சரிதான்; இந்தச் சமயத்தில் பொருந்தவே பொருந்தாது. ஏனென்றால், கொள்கை சம்பந்தப்பட்ட அடிப்படையான விவகாரங்களில் பிரிட்டனுடன் எங்களுக்கு உடன்பாடில்லாமல் போயிற்று. அதனால், நாங்களாகவேதான், மாகாணங்களில் ராஜீனுமாச் செய்தோம். மாகாணச் சர்க்கார்களிலிருந்து நாங்கள் விலகிக்கொண்டதற்கு, எந்த விதமான வகுப்புச் சச்சரவும் காரணம் அல்ல.

ஆனல், வைஸ்ராயோ அடிப்படையான பிரச்னேயை மறந்துவிட்டார். ஏதோ அற்ப மாறுதல்கள் செய்து விட்டால், பிரிட்டனுடன் நாங்கள் ஒத்துழைப்பது தின்னம்போல் உத்தேசம் செய்துகொள்கிருர். இது தான் ஆச்சரியமாயிருக்கிறது. ஸ்ரீ ராஜேந்திரப் பிரஸாத் தமது கடிதத்தில் சொல்லியிருப்பதே சரி. அவர் சொல்லுவதாவது: " யுத்த நோக்கங்களேத் தெளிவுபடுத்த வேண்டும் என்ற பிரதானமான தார்மிகப் பிரச்னேயைக் காங்கிரஸ் எழுப்பியது. வைஸ்ராயின் பேட்டியில், இந்தப் பிரச்னே குறித்த பிரஸ்தாபத்தையே மகாத்மா காந்தியும் நானும் காணவில்லே. இந்தப் பிரச்னே தீராவிட்டால், அடுத்தபடியான விஷயம் எதையும் பற்றிக் காங்கிரஸ் ஆலோசிப்பது சாத்தியம் அல்ல."

இப்படி யுத்த நோக்கங்களேத் தெளிவு படுத்துவது, வகுப்புப் பிரச்னேயையோ, அரசியல் நிர்ணயசபை யோசனேயையோ எந்த விதத்திலும் பாதிக்காது. இதை வைஸ்ராய் பேட்டியிலும் அவருக்குத் தாம் எழுதிய கடிதத்திலும், ஸ்ரீ ராஜேந்திரப் பிரசாத் விளக்கியிருக்கிருர். அந்த விளக்கம், எந்த வகுப்புவாத ஆட்சேபத்தையும்

நிவர்த்தி செய்கிறது. யுத்த நோக்கங்களைத் தெளிவு செய்வதையோ, இந்தியாவைச் சுதந்தர நாடாக அறிக்கை செய்வதையோ, மிஸ்டர் ஜின்னாவோ முஸ்லிம் லீகோ ஆட்சேபிப்பார்கள் என்று வைஸ்ராய் நினைக்கிறாரா? அவர் அப்படி நினைப்பாரானால், அது பெருந் தவறென்று நான் அஞ்சுகிறேன். அடையவேண்டிய நோக்கங்கள் சம்பந்தப்பட்டமட்டில், மிஸ்டர் ஜின்னாவுக்கும் எனக்கும் பெரிதும் ஒற்றுமை இருக்கிறது என்று கண்டு, நான் சந்தோஷம் அடைகிறேன். அரசியல் பிரச்னை குறித்து நாங்கள் கவனிக்கும் முறையிலே மட்டில், அவருக்குப் பூராவும் சம்மதமில்லை. ஆகையால் தான், வைஸ்ராய்க்கு அவரும் நாங்களும் தனித்தனியே பதில்கள் அனுப்ப முடிவு செய்தோம். எங்கள் சம்பாஷணைகள், பற்பல தப்பபிப்பிராயங்களை அகற்றி விட்டன. சென்ற பலவருஷங்களாக இருந்ததைவிட, நாங்கள் ஒருவருக் கொருவர் மிகவும் நெருங்கி வந்துவிட்டோம். அரசியல் ரீதியிலும் வகுப்பு ரீதியிலும் எங்களுக்கிடையே இருக்கும் வேற்றுமைகளை அகற்றிக்கொள்ள முடியும், அகற்றிக்கொண்டு விடுவோம் என்று எனக்கு நம்பிக்கை ஏற்பட்டிருக்கிறது. சென்ற வாரத்திலே ஏற்பட்ட இடையூறுகூட, மிஸ்டர் ஜின்னாவுக்கும் எங்களுக்கும் இடையிலே உள்ள எந்த வேற்றுமையாலும் அல்ல; அது பிரிட்டிஷ் சர்க்காருக்கும் நமக்கும் இடையிலே உள்ள அடிப்படையான வேற்றுமையால் ஏற்பட்டதேயாகும். இந்த விஷயத்தில் யாரும் தவறு செய்யவேண்டாம். யுத்த நோக்கங்களையும் இந்திய சுதந்தரத்தையும் பிரிட்டிஷ் சர்க்கார் அறிக்கை செய்வதற்கு யாரும் இடையூறாக நிற்கவில்லை. அவர்களேதாம் நிற்கிறார்கள். அத்தகைய திருப்திகரமான ஓர் அறிக்கை பிறக்கும் வரையில், இதர பிரச்னைகள்

எழ இடமில்லை; அதுவரையில், நாங்களும் பிரிட்டிஷ் சர்க்காரின் கொள்கையில் எந்த விதத்திலும் சேர்ந்து கொள்ள முடியாது. இந்த நேரடியான பிரச்னையிலே, வகுப்புப் பிரச்னையை இழுத்துப் போடுவது ஜனங்களின் மனத்திலே குழப்பம் உண்டாக்குவதற்கும் அவர்களைத் தவறான வழிகளில் திருப்பி விடுவதற்குமே யாகும்.

—நவம்பர் 6, 1939.

## 4. எந்த வழி? என்ன முறை?

**மீ**ண்டும் மகத்தான சம்பவங்கள் நடக்கவிருக்கும் கட்டத்தின் நுழைவாயிலிலே நாம் நிற்கிறோம். மீண்டும் நம் நாடிநரம்புகள் துடிக்கின்றன. நம் கால்விரல்கள் நடுங்குகின்றன; பழைய ஆக்ஞை நம் செவிகளிலே ஒலிக்கிறது. நம்முடைய அற்பத் தொல்லைகளை யெல்லாம் மூட்டைகட்டி வைத்துவிட்டோம்; குடும்பக் கவலைகளை யெல்லாம் மூலையில் ஒதுக்கித் தள்ளிவிட்டோம். ஏனென்றால், அந்த ஆக்ஞை வரும்போது இவையெல்லாம் ஒரு பொருட்டா? நாம் நேசிக்கும் இந்தியா, நாம் தொண்டு புரிய ஆசைகொண்ட இந்தியா, நம் செவிகளில் என்னவோ முணுமுணுக்கிறது; அற்பமான நம்மையெல்லாம் ஏதோ ஒரு மோகன மந்திரத்தால் வசியம் செய்கிறது. மற்றவை அனைத்தையும் நாம் மறந்து போகிறோம்.

என்றாலும், சிலர் துடிக்கிறார்கள். தங்கள் இளமையின் செருக்கால், குற்றம் கூறுகிறார்கள். ஏன் இந்தத் தாமதம்? நம் நாடிகளிலே ரத்தம் குறுகுறுக்கும் போது, முன்னே பாய் என்று நம் ஜீவன் ஆக்ஞையிடும்போது, ஏன் நாம் மந்த நடை போடுகிறோம்? இந்திய வாலிபர்களே! இந்திய யுவதிகளே! சள்ளைப்படாதீர்கள்; எரிச்சல் மூளாதீர்கள்;

ஆத்திரம் கொள்ளாதீர்கள். இந்தப் பெரும் பாரத்தை நீங்கள் தோள் கொடுத்துத் தாங்கவேண்டிய நேரம் சீக்கிரமே வந்துகொண் டிருக்கிறது; 'முன்னே பாயுங்கள்' என்ற ஆக்ஞையும் உங்களுக்கு வரும். நீங்கள் நினைப்பதைவிட அதி வேகமாய் இருக்கும் நம் நடை. ஏனென்றால், கண் காது தெரியாமல் வருங்காலத்துக்குள் தாவிப் பாய்ந்துகொண் டிருக்கும் உலகம் அல்லவா இன்று நம் நடையைத் தூண்டியிருக்கிறது? நம் காலடியில் உள்ள பூமியே ஆட்டமெடுத்து விட்டபோது, நமக்கு இஷ்டமிருக்கிறதோ இல்லையோ எப்படியிருந்தாலும் சரி, நம்மில் எவரும் சும்மா நிற்கமுடியாது.

நேரம் வரும். அந்த நேரத்திலே, நாம் தயாராக இருப்போமாக! உள்ளத்திலே வலிமையும், உடலிலே துடிப்பும், மனத்திலே - நோக்கிலே தெளிவும் கொண்டவர்களா யிருப்போமாக! அந்தப் போதிலே சந்தேகங்கள் நம்மை நலியாவண்ணம், வேற்றுமைகள் நம் வலிவைக் குறைக்காவண்ணம் நாம் நமது மார்க்கத்தை நன்கு அறிந்திருப்போமாக!

நமது லட்சியத்தை, நமது குறியை, நமது உள்ளத்தின் ஆசையை, நாம் அறிவோம். அதைப்பற்றி இனி எவ்வித வாதமும் தேவையில்லை. ஆனால், நாம் யாத்திரை செய்ய வேண்டிய மார்க்கம் எது? நாம் கைக்கொள்ளவேண்டிய நெறிகள் எவை? நாம் செயல் செய்ய வேண்டிய முறைகள் யாவை? இதுவும்கூட வாதத்துக்கு உரிய விஷயம் அல்ல. ஏனென்றால், அநேக வருஷங்களாய் நாம் வந்த பாதையிலே ஒளி வீசியிருக்கிறோம்; மற்றவர் எளிதிலே பின்பற்றத்தக்க சுவட்டை உருவாக்கியுள்ளோம். கஷ்டம் நிறைந்த இந்தக் கடுமையான பாதையிலே பலன் கிடைக்குமா என்ற விஷயம்பற்றி, இருபது வருஷங்களுக்கு

முன்னே, பலர் சந்தேகங் கொண்டிருக்கலாம். ஆனால், இன்றோ நமக்கு வழிகாட்ட, நமது நீண்டகால அனுபவம் இருக்கிறது; நமக்குப் படிப்பினை போதிக்க, நாம் அடைந்த வெற்றிகளும் தோல்விகளும் இருக்கின்றன. நம்மை இந்தப் பாதையைவிட்டு விலகச் செய்ய, எத்தனையோ முயற்சிகள் நடந்தன. அவைகளை யெல்லாம் மீறி, இதிலே நாம் உறுதியாய் ஒட்டிக்கொண்டு விட்டோம். கோடிக் கணக்கான இந்திய மக்கள் இதன் பொருளையும் சக்தியையும் அறிந்துகொண்டு விட்டார்கள். வேறு என்றையும் விட அதிகமாய், இன்று இதிலே அவர்கள் கால் ஊன்றிவிட்டார்கள். இந்தப் பாதையிலே தனக்குள்ள உறுதியான நம்பிக்கையை, காங்கிரஸ் அறிவித்துள்ளது. ஏனென்றால், அதற்கு வேறே வழி எதுவும் இல்லை.

ஆனால், இதற்காக, எல்லாம் தானே நடக்கும் என்று நாம் மிதமிஞ்சி நம்பிவிடக்கூடாது. நம் தலைவிதியை நிர்ணயிக்கப்போகிற இந்த நேரத்திலே, இந்தப் பாதையின் சகல பலாபலன்களையும் நாம் ஆராய்ந்து பார்க்க வேண்டும். அவைகளை யெல்லாம் நம் இதயமும் மனமும் பொருந்த ஒப்புக்கொள்ள வேண்டும். வீண் ஊகங்களும் வெள்ளைச் சித்தாந்தங்களும் செய்துகொண் டிருக்க இது நேரம் அல்ல. செயல் நமக்குக் காத்திருக்கிறது. மனத்தை ஒருமைப்படுத்தி முயன்றால்தான், செயல் புரிய முடியும். செயலுக்கு நடுவிலே, சம்சய சிந்தனைகளுக்கும் விவாத வேடிக்கைகளுக்கும் இடம் இல்லை. அந்தச் செயலின் மூல வேரையே கல்லி விடத்தக்க வழிகளைக் கடைப்பிடிப்பதன் மூலம், அந்தச் செயலை வியர்த்த மாக்கிவிட எந்தத் தனி நபருக்கோ கோஷ்டிகளுக்கோ, நாம் சற்றும் இடங்கொடுக்கவும் முடியாது.

இந்த விஷயத்தை, நாம் ஒளிவு மறைவு இல்லாமல் ஆராய்ந்து, தெளிவும் இறுதியுமான முடிவுக்கு வரவேண்டும். ஏனென்றால், நமது பழைய அனுபவத்தில் வேரூன்றியிராத ஒரு புதிய தலைமுறை தோன்றியிருக்கிறது. அதைச் சேர்ந்தவர்கள் புதிய தோரணையில் பேசுகிறார்கள். அவர்களில் சிலர், பகிரங்கமாகவோ ரகசியமாகவோ—நமது ஸ்தாபனத்திலே ஒளிந்து கொண்டும்கூட—நம் வழிகளையும் முறைகளையும் அவமதித்துத் தூஷிக்கிறார்கள். இந்தச் சம்சயாத்மாக்களும் உள்பகைவர்களும் மிகச் சிலர் என்றே நாம் நம்புகிறோம்; நாடெங்கும் நடக்கும் அகண்டமான இயக்கத்துக்கு, இவர்களால் எவ்விதமும் ஊறு ஏற்படாதென்றும் நாம் நம்புகிறோம். இது சரியாயிருக்கலாம். என்றாலும், பலருடைய மனத்தில், இவர்கள் குழப்பம் உண்டாக்கி விடக்கூடும். அதனால், நம் இயக்கத்துக்குத் தீங்கு பயக்கக்கூடிய விளைவுகள் நேர்ந்து விடலாம். ஆகையால், தெளிவும் திட்டமுமான தீர்மானத்தை நாம் செய்யவேண்டும். நம் தலைக்குமேல் காத்திருக்கும் போராட்டத்தில், அநாவசிய உபத்திரவங்கள் நேர, நாம் இடம் கொடுக்கமுடியாது.

பத்தொன்பது வருஷங்களுக்கு முன்பு, அஹிம்சா மார்க்கத்தையே, நம் செயல் முறையாய் ஏற்றுக்கொண்டோம். சென்ற பல வருஷங்களில், அநேக சந்தர்ப்பங்களில் அதை நாம் பரீட்சித்துப் பார்த்திருக்கிறோம். நாம் செய்த வேலையையும் அதை நாம் செய்த விதத்தையும் கண்டு, உலகம் பிரமித்திருக்கிறது. அதையும்விட முக்கியமாய், நாமே பிரமித்திருக்கிறோம். அப்படிப் பிரமித்ததுடன், அதனின்றும் நாம் வியக்கத்தக்க பலனையும் அடைந்திருக்கிறோம். அடிமை நாட்டினர் என்றால், ஒன்று, பணிந்துகிடக்க வேண்டும்; அல்

வது, பலாத்காரம் புரியவேண்டும். இதுவே பழைய விதி. இது இனி நம் விஷயத்தில் பிரயோகமாகாது. சக்தி மிக்க ஓர் ஆயுதம் நம்மிடம் இருக்கிறது. நமது பலம் அதிகரிக்க அதிகரிக்க, அந்த ஆயுதத்தைப் பற்றி நாம் மேலும் மேலும் புரிந்துகொள்ளப் புரிந்துகொள்ள, அந்த ஆயுதத்தின் மதிப்பும் வளர்ந்து வருகிறது. அந்த ஆயுதம் எங்கே வேண்டுமானுலும் உபயோகமாகக் கூடியதே. என்றுலும் இந்தியாவின் மேதைக்கும் தற்போதைய நிலைமைக்கும், அது விசேஷமாய்ப் பொருந்துவதாகும். அதுவே சரி என்று முடிவு செய்யவும், நாம் ஆறுதலும் உத்ஸாகமும் பெறவும், நமது சொந்த உதாரணமே நமக்குப் போதும். அதுபோதாதென்றுல், சென்ற சில வருஷங்களாகநிகழ்ந்து வரும் உலக நிகழ்ச்சிகள்வேறே, பலாத்கார நெறிகளின் வியர்த்தத்தையும் குரூரத்தையும் நிரூபித்து விட்டன.

பலாத்கார சகாப்தம் முடிந்து விட்டதென்றே, கூடிய சீக்கிரம் முடிந்துவிடும் என்றே, நம்மில் எவரானும் சொல்லமுடியாது. இதற்குமுன் எப்போதும் இருந்ததைவிட, மிகக் கடுமையாய், வெகு நாசகரமாய், மிகக் குரூரமாய், இன்று பலாத்காரம் ஓங்கி வளர்ந்திருக்கிறது. ஆனுல், அதன் உக்கிரமே, அது நசித்து வருகிறது என்பதைக் காட்டும் சின்னமாகும். ஒன்று அது செத்துவிடும்; அல்லது, உலகில் முக்கால்வாசிப் பேரை அது மடித்துவிடும்.

**என்றும் மூடன் தன்னுடைய**
**இழிகடை அறிவை ஒளித்திடவே**
**பொன்றும் வாளைத் தூக்கிடுவான்**
**போகும் வழியினை அறியாமல்.**

ஆனுல், அறியாமையும் பித்தும் மலிந்த காலத்திலே நாம் வாழ்கிறேம். நம்மை ஆள்வோரும், மனித விவகா

ரங்களை நிர்வகிப்போரும், இந்தக் காலத்தின் உண்மை யான விளைவே யாவார்கள். பலாத்கார ஆக்கிரமிப்பை நாம் எப்படி எதிர்ப்பது? இந்தப் பயங்கரமான பிரச்னை ஒவ்வொரு நாளும் நம் முன் எழுந்துவருகிறது. ஏனென்றால், அடங்கி ஒடுங்கித் தீயவனுக்குப் பணிந்து போவதையல்லாமல், வேறு வழியையே பெரும்பாலும் காணோம். பலாத்காரத்தைக் கொண்டே ஸ்பெயின் எதிர்த்தது. இறுதியில் அது விழுந்துபோயிற்று. ஆயினும், அதன் ஜனங்கள், தீரத்துக்கும், வீரமாய்க் கஷ்டத்தைச் சகித்துக் கொள்வதற்கும் அற்புதமான உதாரணம் காட்டிவிட்டார்கள். நண்பர்களெல்லாம் அவர்களைக் கைவிட்டார்கள். அப்படியிருந்தும், பாஸிஸ்டுகளின் ஆக்கிரமிப்பு வெள்ளத்தை, இரண்டரை வருஷகாலம் அவர்கள், தடுத்து நிறுத்திவிட்டார்கள். ஸ்பெயின் மக்கள் தோற்றுப்போன இன்றைக்கும்கூட, அவர்களைத் தவறுசெய்தவர்கள் என்று யார் சொல்ல முடியும்? ஏனென்றால், கௌரவமான வேறு வழி எதுவும் அவர்களுக்கு இருக்கவில்லை. அஹிம்சா மார்க்கம் அவர்கள் மனத்தில் இல்லை. அப்போதைய நிலையில், இந்த மார்க்கம் அவர்களுக்கு எட்டவும் வசதியில்லை. இதே போல்தான் சீனாவிலும் நடக்கிறது.

ஜெக்கோஸ்லாவாக்கியாவுக்கு ராணுவ பலம் உண்டு; தீரமும் உண்டு. இந்த இரண்டும் இருந்தும், அது போரிடாமலே பணிந்துவிட்டது; அதன் நண்பர்கள் அதைக் காட்டிக் கொடுத்ததால்தான், இப்படி அது பணிந்தது என்பது உண்மை. என்றாலும், எத்தனை ராணுவ பலம் இருந்தும், அதெல்லாம் நெருக்கடியான நேரத்தில் அதற்கு உதவவில்லை என்ற விஷயத்தை மறக்க முடியாது. போலந்து மூன்றே வாரத்தில் அடியோடு தோற்றுப்

போயிற்று; அதன் மகத்தான சேனையும், போர்க்கப்பல்களும், விமானங்களும் எல்லாம் இருந்த இடம் தெரியாமல் மறைந்துபோயின.

எதிரிக்கு மேலாகவோ அல்லது அவனுக்குச் சமமாகவாவதோ ராணுவபலம் நமக்கு இருக்கவேண்டும். அந்த நிலையில்தான், பலாத்காரத்தையும் ராணுவபலத்தையும் சாரும்வழி, இன்றைக்கு அனுபவசாத்தியமாகும். அதுவும்கூட, தற்போதைக்கு வெற்றி கிடைக்கும் என்ற மிகவும் குறுகிய அர்த்தத்திலேதான். எதிரிக்கு மேலாக அல்லது சமமாக ராணுவபலம் இல்லாவிட்டால், எதிர்க்காமலே அடி பணியவேண்டும்; அல்லது சொற்பப் போராட்டத்துக்குப் பின், விழுந்து போகவேண்டும். அதன் பலனாக, அடியோடு தோல்வியும் சீரழிவும்தான் வந்துசேரும். அற்பமான பலாத்காரமோ துளியும் பயனில்லை என்று நிச்சயமாகிவிட்டது. ஏனென்றால், அதன் மூலம் வெற்றி கிடைக்கும் என்று துளி நம்பிக்கைக்கும் இடமில்லை; அன்றியும் அதனால் தோல்வியின் விளைவான கொடுமைகளும் சீர் குலைவுமே உண்டாகும்.

வருங்காலத்தில் இந்தியாவுக்கு என்ன நேரப் போகிறது என்பதை, நம்மால் அறியமுடியாது. வருங்காலத்தில் ஒவ்வொரு தேசமும் தனித்தனியே ஆயுதந் தாங்கிய சேனைகள் தாம் வைத்திருக்கும் என்றால், சுதந்தர இந்தியா மட்டில் அப்படிப்பட்ட ஒரு தேசிய சேனையையும் தற்காப்புக்கான சகல இதர அங்கங்களையும் அமைத்துக்கொள்ளாமல் இருக்கமுடியுமா? முடியும் என்று நம்மில் பலரால் எண்ணமுடியவில்லை. ஆனால், அந்த வருங்காலத்தைப் பற்றி இப்போது நாம் யோசிக்கத் தேவையில்லை. தற்காலத்தைப்பற்றியே நாம் கவனிக்க வேண்டும்.

தற்காலம் சம்பந்தப்பட்ட மட்டில், இந்தச் சந்தேகங்களும் சங்கடங்களும் எழவில்லை. ஏனென்றால், நமது மார்க்கம் தெளிவாயிருக்கிறது; நமது பாதை கோலப்பட்டிருக்கிறது. அதுதான் அஹிம்சா தர்ம எதிர்ப்பு. இந்திய சுதந்தரத்துக்குக் குறுக்கிடும் தடங்கல்களையெல்லாம் எதிர்க்க வழி, அஹிம்சாதர்மமே; வேறு வழி இல்லை. அதைப்பற்றி நாம் முற்றும் தெளிவாயிருப்போமாக. ஏனென்றால், நம்முடைய மனசைப் பல திசைகளிலும் இழுக்க விட்டுவிட்டு, நாம் செயல்புரியத் துணியமுடியாது. நாம் திறமையாய்ச் செயல் புரியலாம் என்று துளி நம்பிக்கையேனும் வைக்கக்கூடிய வேறு எந்த வழியும் எனக்குத் தெரியவில்லை. பிற வழிகளைப்பற்றி நாம் நினைத்தோமானால், உண்மையான செயல் நிகழவே நிகழாது.

இந்த விஷயம் சம்பந்தப்பட்ட மட்டில், காங்கிரஸ்காரர்கள் அனைவருக்கிடையிலும் பொதுவாய் ஒற்றுமை இருக்கிறது என்று நான் நம்புகிறேன். ஆனால், காங்கிரஸுக்குள் சற்றுப் புதிதாய் வந்து புகுந்த சிலர் இருக்கிறார்கள். அவர்கள் வெளிப்பார்வைக்கு இதில் ஒற்றுமை கொண்டிருப்பதுபோல் தோன்றினாலும், மனத்தில் வேறு விதமாகத் திட்டம் போட்டுக்கொண்டிருக்கிறார்கள். காங்கிரஸின் மூலமாக அல்லாமல், தேசிய இயக்கம் ஒன்று தேசமெங்கும் நடக்காது என்று அவர்கள் உணர்ந்திருக்கிறார்கள். மற்ற இயக்கமெல்லாம் அசட்டுத் துணிச்சலாகவே முடியும். ஆகையால் காங்கிரஸை அவர்கள் உபயோகித்துக்கொள்ள விரும்புகிறார்கள். ஆனால், அதே சமயத்தில், காங்கிரஸைப் பிளந்து வழிசெய்துகொண்டு, அதன் மூலம் காங்கிரஸ் கொள்கைக்கு விரோதமான திசைகளில் செல்லவும், அவர்கள் முயல்கிறார்கள். தாங்கள் காங்கிரஸுக்குள் பதுங்கிக் கொள்வது,

பின்பு அதன் அடிப்படையான கொள்கையையும் செயல் முறையையுமே வேரறுப்பது - இதுதான் அவர்கள் உத்தேசித்திருக்கும் தந்திரம். முக்கியமாக, அஹிம்சாதர்ம முறை இனியும் நடந்துகொண் டிருக்கமுடியாதபடி அதை வீழ்த்த, அவர்கள் எண்ணுகிறுர்கள். ஆனுல், இந்த வேலையைப் பகிரங்கமாய்ச் செய்ய, அவர்கள் நினைக்கவில்லை; சூழ்ச்சியாகவும் உள்ளேயிருந்து கொண்டுமே செய்ய நினைக்கிறுர்கள்.

எந்த இந்தியனும் தன் சொந்தத் திட்டங்களையும் கருத்துக்களையும் சொல்லலாம்; அவைகளைப் பரப்பவும், பிறரைத் தன் அபிப்பிராயத்துக்கு மாற்றவும், அவன் முயலலாம்; அவைகளைக் கைக்கொண்டு செயல் புரிவது அவசியமென்று தான் எண்ணினுல், அவன் அப்படியே செயலும் புரியலாம் ; இதற்கெல்லாம் அவனுக்கு உரிமை உண்டு. ஆனுல், வேருெரு போர்வைக்குள் போய் ஒளிந்து கொண்டு, இப்படியெல்லாம் செய்ய, அவனுக்கு உரிமை இல்லை. செய்தால், அது பொதுஜனங்களை ஏமாற்றுவதாகும். அப்படி ஏமாற்றுவதன் மூலம், பொதுஜன இயக்கங்களைக் கிளப்பிவிட முடியாது. அது காங்கிரஸுக்குத் துரோகமாகும். இயக்கம் முழு வலிமையோடு நடக்கும்போது உள்ளிருந்தபடியே அதைச் சீர்குலைப்பதுமாகும். கொள்கையிலே மாறுபாடு இருக்குமானுல், அதைப் பகிரங்கமாய் வெளியிடவேண்டும். ஜனங்கள் அதை நன்ருய்ப் புரிந்துகொண்டு, முடிவு செய்யும்படி விடுவதே நல்லது. வேறு எந்த நேரத்திலுமே இதுதான் நியாயம். மகத்தான சம்பவங்கள் நடக்கக் காத்திருக்கும் இந்த நேரத்திலோ, இது இன்னும் மிக நியாயமாகும். வலிமை மிகுந்த எதிரியோடு, தான் மல்லிட நினைத்துக்கொண் டிருக்கும்போது, உள்ளிருந்தபடியே

தன்னைச் சீர் குலைக்க நடக்கும் முயற்சி எதையும் எந்த ஸ்தாபனமும் சகித்துக்கொண் டிருக்க முடியாது. நாம் செயல் புரியவேண்டிய நேரத்தில், நமக்குள்ளே கட்டுப் பாடு குலையலாகாது; மாறுபட்ட யோசனைகள் கூடா.

ஆகவே, இந்தப் பிரச்னை குறித்து, நாம் முற்றும் தெளிவாகவும் திட்டமாகவும் முடிவுசெய்வது அவசிய மாகும். காங்கிரஸ் சம்பந்தப்பட்டமட்டில், நாம் அந்த முடிவையும் செய்துவிட்டோம். அதன்படியே நடக்க, நாம் உத்தேசம் கொண்டிருக்கிறோம். மற்ற எந்த வழியும் வியர்த்தமானது; தேசத்துக்கே அபாயம் விளைவிக்கக் கூடியது. நாம் விரும்பினால், இந்தியாவில் பெரும் குழப்பத்தை உண்டாக்கிவிடுவது நமக்குக் கஷ்டம் இல்லை. ஆனால், குழப்பத்திலிருந்து சுதந்தரம்தான் வரும் என்ற நிச்சயமில்லை; எப்போதும் அது அப்படி வந்துகொண் டிருக்கும் வழக்கமுமில்லை. இந்தியாவில் குழப்பம் ஏற் பட்டால், எத்தனையோ துர்ப்பாக்கிய விளைவுகள் நேரிட லாம்; அவை நேரிடத்தக்க வெளிப்படையான காரணங் கள் பல இருக்கின்றன. நமது செயலின் விளைவுகள் இப்படித்தான் இருக்கும் என்று, நாம் ஒருபோதும் சோதிடம் சொல்லமுடியாது. அதிலும் முக்கியமாய், மகா ஜனங்கள் சம்பந்தப்பட்ட ஓர் இயக்கத்தை நாம் நடத்தும் போது, அதைச் சொல்லவே முடியாது. நாம் எந்த அபாயத்துக்கும் துணிகிறோம்; அப்படித் துணிந்துதான் ஆகவேண்டும். ஆனால், 'அந்த அபாயத்தைப் பலமடங் காக்கி, நமது சுதந்தரப் பாதையில் இடையூறுகளை உண் டாக்கக்கூடிய எதையும் நாம் செய்யமுடியாது. நமது இயக்கத்திலிருந்து நமக்கு ஒரு தார்மிக கௌரவம் கிடைத் திருக்கிறது. பல வருஷங்களாக, நாம் அதில் பெருமை அடைந்து வருகிறோம். நமது அந்தத் தார்மிக கௌரவத்

தைப் பறித்துவிடக்கூடிய எதையும் நாம் செய்யமுடியாது. அதெல்லாம் மூடத்தனமாகும். பலாத்கார வழிகளிலே உலகம் சலிப்படைந்து வருகிறது. இந்த நேரத்திலே, நாம் பலாத்காரத்துக்குத் திரும்புவோம் என்று எண்ணுவதுகூடத் துயரத்துக்குரிய விஷயமாகும்.

ஆகையால், நாம் உறுதியாகவும் முழுமனசுடனும் அஹிம்சா தர்ம மார்க்கத்திலே நிற்கவேண்டும். இதர சகல மாற்று வழிகளையும் நிராகரிக்கவேண்டும். பற்பல விதமான வழிகளை ஏககாலத்தில் ஒன்றின் பக்கத்திலே ஒன்றாக நாம் கடைப்பிடிக்கலாம் என்பது சாத்தியமல்ல. அப்படிக் கடைப்பிடிப்போமானால், அவைகள் ஒன்றை ஒன்று பலவீனப்படுத்தி, ஒன்றை ஒன்று கெடுத்துவிடும். இதை நாம் நினைவில் வைக்கவேண்டும். ஆகையால், நாம் புத்திசாலித் தனமாய் ஒரே வழியைத் தேர்ந்துகொள்ள வேண்டும். அப்படித் தேர்ந்துகொண்ட வழியிலே நிற்கவும் வேண்டும். மற்ற வழிகளி லெல்லாம் மோகம்கொண்டு அலையலாகாது. மற்றெல்லாவற்றிலும் மேலாக, அஹிம்சா தர்மம் என்றால், நாம் உண்மையிலே அஹிம்சா தர்மத்தைக் கடைப்பிடிக்க வேண்டியதாகும் என்று உணர வேண்டும். அது வெறும் வார்த்தையல்ல. யந்திரம் போல், அதை உபயோகித்துக்கொண்டு, மனத்தால் வேறு விதமாய் நினைப்பதும், வாயால் அதற்கு விரோதமான வார்த்தைகளை உச்சரிப்பதும், செயலால் அதைப் பொய்ப்படுத்துவதும் கூடாது. அந்தத் தர்மத்துக்கும், நமக்கும், நமது இயக்கத்துக்குமே நியாயமாய் நாம் நடந்துகொள்ள வேண்டுமானால், சகல வழிகளிலும் அதற்கு உண்மையாய் நடந்துவரவேண்டும்.

—நவம்பர் 15, 1939.

# இந்தியாவின் கோரிக்கையும் இங்கிலாந்தின் பதிலும்

## 3

ஐரோப்பிய யுத்தம் நம் கவனத்தைக் கவர்ந்திருக்கிறது. ஏனென்றால், நாம் அதில் சேர்ந்தாலும் சேரா விட்டாலும், நமது வருங்காலம் இந்த யுத்தத்தின் விளைவையே பெரிதும் சார்ந்திருக்கிறது. கீழ்க்கோடியிலே நடக்கும் போராட்டத்தினின்றும் நமது கவனம், தற்போது 'சத்தியாக' வேறு பக்கம் திரும்பியிருக்கிறது. என்றாலும், கீழ்க்கோடிப் போராட்டம் மிகவும் முக்கியமான தென்றும், சீனாவில் நடப்பதெதுவும் நம் அனைவரையும் பாதிக்கும் என்றும் நாம் அறிவோம். இந்தியாவில் தற்போது வெளிப்படையாகவோ, வெளியாருடனோ எவ்விதப் போராட்டமும் நடக்கவில்லை. என்றாலும் இங்கே நடப்பது எதுவும் அப்படித்தான் நம் அனைவரையும் பாதிக்கும். வருங்கால விளைவுகள் இறுதியாக எவ்விதம் உருவெடுத்தாலும் சரிதான்; அந்த வருங்கால விளைவுகளைச் சீனாவும் இந்தியாவும் மிகவும் பலமாய்ப் பாதிக்கும். இதற்குக் காரணம், இந்த இரண்டு நாடுகளிலும் மிக ஏராளமான மக்கள் - 40 கோடி முதல் 90 கோடிவரையில் - வாழ்வது மாத்திரமல்ல; அவர்களுடைய மதிப்பரிய மகத்தான புராதன நாகரிகம் மாத்திரம் அல்ல; இந்த இரு நாடுகளிலும் உள்ள அளவிறந்த பொருள் வசதிகளும், இவைகளில் புதைந்து கிடக்கும் ராஜீய, பொருளாதார வலிமையும் கூடத்தான், இதற்குக் காரணமாகும்.

உலகத்திலே ஒரு புதிய ஏற்பாடும் சர்வதேச ஒத்துழைப்பும் ஸ்தாபிதம் ஆகப்போகின்றன என்றெல்லாம் பேச்சு நடக்கிறது. இந்தியாவையும் சீனவையும் அலட்சியம் செய்தால் எந்த உலக ஏற்பாடும் நிலைத்திருக்காது; எந்த ஒத்துழைப்பும் பலிக்காது. பிற நாடுகளுடன் ஒப்பிடும் போது இன்று இந்த இரு நாடுகளும், பலவீனமாயிருக்கலாம். ஆனல், தங்களை அலட்சியமாய் நடத்தினல் அதற்குப் பணிந்து போகக்கூடிய அவ்வளவு பலவீனமாக இவை இல்லை.

நான் ஓர் இந்தியன் என்ற முறையில், இந்தியாவினதும் இந்திய மக்களதும் வருங்காலம் எனக்குப் பெரிதும் முக்கியமாகும். ஆனல், உலகப் பிரச்னையிடம் இந்தியப் பிரச்னைக்கு உள்ள தொடர்பிலேதான், இந்தியப் பிரச்னையின் உண்மையான கருத்து அடங்கி யிருக்கிறது. ஏனென்றல், இந்தியப் பிரச்னை, உலகப் பிரச்னையின் ஒரு பகுதியேயாகும். இந்த இரண்டில், ஒன்றை விட்டுவிட்டு, மற்றதை மாத்திரம் பூரணமாய் ஆராய முடியாது; புரிந்து கொள்ளவும் முடியாது. ஐரோப்பாவில் நடக்கும் இந்த யுத்தத்திலேகூட, இந்தியா பெரிய மாறுதலைச் செய்துவிட முடியும்.

ஆகையால், இந்தியாவில் நடக்கும் நிகழ்ச்சிகள் ஐக்கிய அமெரிக்காவின் கவனத்தை இழுத்திருக்கின்றன. இந்தியப் பிரச்னைகள் உலகத்துக்குச் சம்பந்தப் பட்டவை என்ற ரீதியில் அவைகளைப் புரிந்துகொள்ள, அமெரிக்கர் முயல்கிறர்கள். இது இயற்கையும் நியாயமுமாகும். ஏனென்றல், அவர்கள் இஷ்டப் பட்டாலும் சரி, இஷ்டப் படாவிட்டாலும் சரிதான்; வருங்காலத்தின் சுமை இறுதியிலே அமெரிக்கரின் தலையில்தான் விழப்போகிறது. அமெரிக்கருக்குப் பொருள் துறையில் பிரமாத

மான வசதிகள் இருக்கின்றன. உலகத்தில் அவர்களே முதன்மையாய் நிற்கிறார்கள்; ஜனநாயக சக்திகளுக்கெல்லாம் அவர்களே தலைமை வகித்து நடத்துகிறார்கள். ஆகையால்தான், இந்த வருங்காலப் பொறுப்பு இன்று அவர்கள்மீது சுமந்திருக்கிறது. "மனித சுதந்தரம், விவேகம், ஜனநாயகம், தர்மநியாயம் என்ற ஜோதிகளையெல்லாம், மங்காமல் ஒளிவிடச் செய்து அமெரிக்க மக்கள் காப்பாற்றிவருவார்கள்" என்று ஜனாதிபதி ரூஸ்வெல்ட் சொல்லியிருக்கிறார். இது உண்மையானால், உலகத்தின் இதர பாகங்களிலேயும் சுதந்தரமும் ஜனநாயகமும் நிலவச் செய்வதற்கு, தங்கள் செல்வாக்கை அமெரிக்கர் உபயோகிக்கவேண்டும். அவ்விதம் செய்தால்தான், தற்போதைய குழப்பமும் பலாத்காரமும் தீர்ந்து, உண்மையான சமாதானமும் சுதந்தரமும் உதயமாகும். சமாதானத்தைக் கூறுபோட முடியாது என்று சொல்லுவார்கள். சுதந்தரமும் அப்படிப்பட்டதுதான். உலகத்தில் நிரந்தரமான அமைதி வேண்டுமானால், அது உலக முழுவதையும் தழுவியதாக இருக்கவேண்டும்; சமாதானம், சுதந்தரம் இவைகளை அஸ்திவாரமாய்க் கொண்டிருக்க வேண்டும். இல்லையானால், அந்த அமைதி ஏற்படாது.

இந்தியாவின் பலமும் தன்னம்பிக்கையும் வளர வளர, சுதந்தரத்தின் நுழைவாயிலை இந்தியா நெருங்க நெருங்க, தான் உலக சமுதாயத்தின் ஒரு பகுதியே என்றும், தன் சொந்தப் பிரச்னை உலகப் பிரச்னையின் ஓர் அம்சமே என்றும், இந்தியா வரவர அதிகமாய் எண்ணிவருகிறது. மஞ்சூரியா, அபிசீனியா, ஸ்பெயின், பாலஸ்தீனம், மத்திய ஐரோப்பா ஆகிய இடங்களிலெல்லாம் நிகழும் நிகழ்ச்சிகள் பற்றி, சமீப வருஷங்களில், இந்தியா பிரமாதமான அக்கறை காட்டியது; கவலையும் கொண்டது.

சர்வதேச நோக்கு ஒன்றை வளர்த்துக் கொள்ள, இந்தியர்கள் ஆரம்பித்திருக்கிறார்கள். இந்திய சுயேச்சையில், அவர்களுக்கு அடங்கா ஆர்வந்தான் இருக்கிறது. என்றாலும், இந்திய சுயேச்சை என்றால், தனித்து ஒதுங்கி நிற்கவேண்டும் என்று அவர்கள் எண்ணவில்லை; உலக முழுவதற்கும் பொதுவான ஏற்பாடு ஒன்றில் தாங்கள் ஒத்துழைக்க வேண்டும் என்றே எண்ணுகிறார்கள். ஐரோப்பாவிலும் ஆசியாவிலும் பிற இடங்களிலும் நிகழும் நிகழ்ச்சிகளை யெல்லாம், இதனால்தான் நாங்கள் கூர்மையாய்க் கவனித்து வருகிறோம்; இரண்டாவது உலக யுத்தம் சமீபித்து விட்டதுபோல் தோன்றியதும், அதுபற்றிக் காங்கிரஸ் தன் கொள்கையையும் வகுத்துக் கொண்டது. 1914-18-ஆம் வருஷங்களில் நிகழ்ந்த யுத்தத்தையும் அதன் பிறகு நடந்த நடப்பையும் பற்றிய ஞாபகம் எங்கள் மனதை உறுத்திக்கொண் டிருக்கிறது. அந்த யுத்தத்திலே, இந்தியாவின் உதவி பிரமாதமானது. 12 லட்சம் பேருக்குமேல், பற்பல யுத்த முனைகளுக்கும், இந்தியா தன் மக்களை அனுப்பியது. இந்தியாவின் வருங்கால அந்தஸ்தைப் பற்றிப் பிரிட்டிஷார் என்ன என்னவோ வாக்குறுதிகளை யெல்லாம் அளித்தார்கள். யுத்தத்துக்குப் பின்பு, உண்மையிலேயே இந்தியாவுக்குக் கிடைத்தது கடுமையான அடக்குமுறைதான். பஞ்சாபிலே ராணுவச் சட்டம் அமலுக்கு வந்தது; பிரசித்தமான அமிர்தசரஸ் படுகொலையும் நடந்தது. இவைகள் அனைத்துக்கும் பலனாக, காந்திஜியின் ஒத்துழையாமை இயக்கம் தோன்றியது. அதன்மேல், சென்ற இருபது வருஷகாலமாக, இந்தியச் சுதந்தரப் போர் மேலும் மேலும் நடந்துகொண்டே இருக்கிறது; அமைதியாகத்தான் நடக்கிறது. ஆனால், திறமையாகவும், மகா

ஜனங்களெல்லாம் சேர்ந்துகொண்ட பெரிய அளவிலும் நடக்கிறது. எப்படி இருந்தாலும், அந்த இயக்கம் தோன்றியே இருக்கும். ஏனென்றால், ஜீவாதாரமான மாறுதல்கள் ஏற்படுவதற்கு ஏற்றதாக, காலம் பக்குவம் அடைந்திருந்தது. ராஜீயப் பிரச்னைகளும் பொருளாதாரப் பிரச்னைகளும் அந்த மாறுதல்களை நிர்ப்பந்தித்துக்கொண்டிருந்தன. யுத்தமும் அதன் பின் விளைவுகளும், நெருக்கடியை முற்றும்படி செய்தன. இந்திய மக்களையும் பொருள் வசதிகளையும் உபயோகித்துக் கொண்டு, பிரிட்டிஷார் எப்படித் தங்களுடைய ஏகாதிபத்திய ஆதிக்கத்தைப் பலப்படுத்திக் கொண்டார்கள் என்று, நாங்கள் கண்டுகொண்டோம்.

ஆகையால், பிரிட்டிஷாரின் ஏகாதிபத்திய நோக்கங்களை நிறைவேற்றிக்கொள்வதற்கு இந்தியப் பொருள் வசதிகளை உபயோகித்துக்கொள்ள இந்திய மக்கள் விடமாட்டார்கள் என்றும், ஏகாதிபத்திய யுத்தம் எதிலும் அவர்கள் ஒத்துழைக்க மாட்டார்கள் என்றும், 1927-ஆம் வருஷத்திலேயே, காங்கிரஸ் அறிவித்து விட்டது. பின்னுல் அது ஒவ்வொரு வருஷமும் இந்தக் கொள்கையை மீண்டும் மீண்டும் ஊர்ஜிதம் செய்து, வளர்த்துக்கொண்டே வந்தது. நாஜிகளின் அதிகாரம் வலுத்தபோது, பாஸிஸ்டுகளையும் நாஜிகளையும், காங்கிரஸ் கண்டித்தது. அவர்களுடைய கொள்கைகளையும், செயல்களையும் அது வெறுத்தது. ஆக்கிரமிப்பைத் தடுப்பதற்கு, கூட்டுப் பாதுகாப்பு முறையே நல்லது என்று நாங்கள் ஆதரித்தோம். சர்வதேச சங்கம் இந்தக் கூட்டுப் பாதுகாப்பு முறையை அஸ்திவாரமாகக்கொண்டே அமைந்திருந்தது. பிரிட்டிஷ் சர்க்காரும் இந்த முறையை ஆதரிப்பதாக ஒவ்வொரு சமயம் அறிக்கை செய்தது. என்றாலும், அது இந்த முறையை

உள்ளிருந்தபடியே சீர்குலைத்து ஆக்கிரமிப்பவர்களுக்குத் தைரியம் கொடுத்தது. மூனிக் ஒப்பந்தத்தைக் கண்டு, நாங்கள் திடுக்கிட்டுப் பதறிவிட்டோம். ஒரு தேசத்தின் உள்நாட்டு விஷயங்களில் சர்வதேசசங்கம் தலையிடக் கூடாதென்று சொல்லிக்கொண்டு, ஸ்பெயினைக் காட்டிக் கொடுத்தார்கள். அந்தத் துயரமான சம்பவம் எங்கள் மனசைப் பெரிதும் உருக்கிவிட்டது.

இந்தியத் தேசியக் காங்கிரஸின் வெளிநாட்டுக் கொள்கைக்கு இந்தச் சம்பவங்களெல்லாம் உருக்கொடுத்தன. ஒரு புறம், பாஸிஸ்டு, நாஜி தத்துவங்களை நாங்கள் வெறுத்தோம். மறுபுறம், பிரிட்டிஷாரின் அயல்நாட்டுக் கொள்கையினின்றும் நாங்கள் அடியோடு விலகிக் கொண்டோம். ஏகாதிபத்திய நோக்கங்களுக்காக எங்கள்மீது பிரிட்டன் சுமத்தும் எந்த யுத்தத்திலும் நாங்கள் கலந்து கொள்ளமாட்டோம் என்று, மீண்டும் தெளிவாய்த் தெரிவித்துவிட்டோம். அப்படி எந்த யுத்தத்தையாவது எங்கள்மீது பிரிட்டன் சுமத்தினல், அதை நாங்கள் ஆட்சேபிப்போம்; எதிர்ப்போம். ஆனல், இதற்கிடையிலே பிரிட்டிஷ் சர்க்கார் தற்போதைய இந்திய அரசியல் சட்டத்துக்கு ஒரு திருத்தம் செய்து வைத்துக் கொண்டுவிட்டார்கள். இப்போதைய இந்திய மத்திய சர்க்கார் இந்திய ஜனங்களுக்குப் பொறுப்பற்றது. அதைப் பிரிட்டிஷ் சர்க்காரே கண்காணித்து வருகிறார்கள். யுத்தம் வந்தால், அப்போது சகல அதிகாரங்களும் இந்த மத்திய சர்க்காரின் கையிலே போய்க் குவிந்துவிடும்படியாகவே, மேற்கண்ட திருத்தத்தைச் செய்திருக்கிறார்கள். அதன்படி மாகாண சர்க்காரின் அதிகாரங்களையெல்லாம், மத்திய சர்க்கார் தங்கள் யுக்தம்போல் கண்காணித்து ஆட்டிவைக்கலாம். இவ்வாருக, மாகாணச்

சுயஆட்சி என்பதை வெறும் கேலிக்கூத்தாகச் செய்து விட்டார்கள். இந்தத் திருத்தத்தை, நாங்கள் மிகக் கடுமையாக எதிர்த்தோம்.

மத்திய சட்டசபையையோ மாகாண சட்டசபைகளையோ கேட்காமலே, 1939-ஆம் ௵ ஆகஸ்டு மாசத்தில் இந்தியத் துருப்புக்களை எகிப்துக்கும் மலேயாவுக்கும் பிரிட்டிஷ் சர்க்கார் அனுப்பிவிட்டார்கள். இதை ஆட்சேபிப்பதற்கு அடையாளமாக மத்திய சட்டசபையின் காங்கிரஸ் அங்கத்தினர்களெல்லாம் ராஜீனாமாச் செய்யும்படி, காங்கிரஸ் கட்டளையிட்டது. இந்திய மக்களின் சம்மதமின்றி இந்தியாவை ஒரு யுத்தத்திலே இழுத்துவிட்டால், அதனால் நேரிடக்கூடிய விபரீதங்களைக் குறித்து, மீண்டும் பிரிட்டிஷ் சர்க்காருக்கு அது எச்சரிக்கையும் செய்தது.

இதையெல்லாம் பிரிட்டிஷார் லட்சியம் செய்யவில்லை. ஐரோப்பாவில் யுத்தம் மூண்ட க்ஷணமே, இந்தியாவையும் யுத்தத்தில் கலந்த ஒரு நாடாக, பிரிட்டிஷார் அறிவித்து விட்டார்கள். இந்திய அரசியல் சட்டத் திருத்த மசோதா ஒன்றையும் பிரிட்டிஷ் பார்லிமெண்டில் கொணர்ந்து, அதை அவசர அவசரமாகச் சில நிமிஷ நேரத்துக்குள்ளே நிறைவேற்றிக் கொண்டார்கள். இது எங்களுக்குப் பேராத்திரம் மூட்டியது. பொதுவாய்ப் பார்த்தால், இதன்மேல் காங்கிரஸ் தன் முந்திய தீர்மானங்களைப் பின்பற்றி யிருக்கலாம். 'யுத்தத்தில் கலவாமல் ஒதுங்கியிருங்கள்' என்று, இந்திய மக்களை வேண்டிக் கொண்டிருக்கலாம். அது நியாயமாகவே இருந்திருக்கும். இந்தச் சம்பவங்களெல்லாம் ஒரு புறம் இருக்க, மிஸ்டர் நெவில்சேம்பர்லீனின் சர்க்காரை எங்களுக்குத் தெரியும். அவர்கள் என்னதான் தங்கள் கொள்கையென்று வாயால்

சொன்னாலும், ஜனநாயகத்தையும் சுதந்தரத்தையும் தாங்கவோ, அவைகளுக்காக உழைக்கவோ மாட்டார்கள் என்று நாங்கள் அறிவோம். நாஜிகள் வெற்றி பெறுவதிலும், அதே சமயத்தில் எங்களுக்கு விருப்பமில்லை; ஆக்கிரமிப்புக்குப் பலியான நாடுகளின் பக்கமே எங்கள் அனுதாபமெல்லாம் பூரணமாயிருந்தது.

இதன்மேல், 1939-ஆம் வருஷம் செப்டம்பர் மீ 14உ யுத்த நெருக்கடியைப்பற்றிக் காங்கிரஸ் நீண்டதோர் அறிக்கையை வெளியிட்டது. ஏகாதிபத்தியத்தின் சொத்துக்களையும் காலனிகளையும், விசேஷ நலன்களையும், உரிமைகளையும் காப்பாற்றி இப்போதுள்ள நிலைமையை நிலை நிறுத்தவே இந்த யுத்தம் நடப்பதானால், இதில் இந்தியா துளியும் சம்பந்தப்படாது என்று அந்த அறிக்கை தெளிவாய்க் கூறியது. அவ்விதமில்லாமல், ஜனநாயகமும், ஜனநாயகத்தை அடிப்படையாகக் கொண்ட ஓர் ஏற்பாட்டை உலக முழுவதிலும் ஸ்தாபிப்பதுமே இந்த யுத்தத்தின் நோக்கம் என்றால், இதில் இந்தியா மிகுந்த அக்கறை காட்டும். ஏகாதிபத்திய முறையையோ பாஸிஸத்தையோ, எந்த உருவத்திலும் இந்தியா ஆதரிக்க முடியாது. ஜனநாயகத்துக்காகப் போராடும் கட்சியை இந்தியா ஆதரிக்கும். ஆனால், அந்த ஜனநாயகம் இந்தியாவிலும் நடந்துகொண்டிருக்கவேண்டும். அடிமை இந்தியா தனக்கில்லாத சுதந்தர உரிமைகளை வெளிநாடுகளிலே தாங்கும் வீரனாய் நடிக்கவேண்டும் என்பது சுத்த அபத்தமாகும். ஆகையால், ஜனநாயகம், ஏகாதியபத்திய முறை இவைகளைப்பற்றியும், உத்தேசத்திலிருக்கும் உலக ஏற்பாடு எப்படிப்பட்டது என்பது பற்றியும் விளக்கி, பிரிட்டிஷ் சர்க்கார் தங்களுடைய யுத்தநோக்கங்களை அறிக்கை செய்ய வேண்டும்; முக்கியமாக, அந்த யுத்த நோக்கங்கள் இந்தி

யாவுக்கு எப்படிப் பிரயோகமாகப் போகின்றன, அவைகளை இந்தியாவில் நிறைவேற்ற இப்போது தாங்கள் என்ன முயற்சி எடுத்துக்கொள்ளப் போகிறார்கள் என்பதையும் அவர்கள் அறிக்கை செய்யவேண்டும். இவ்வாறு செய்யும்படி, பிரிட்டிஷ் சர்க்காரைக் காங்கிரஸ் அழைத்தது. இந்திய சுதந்தரம் பற்றியும் பிரிட்டிஷ் சர்க்கார் அறிக்கை செய்துவிட வேண்டும்; வெளியாரின் தலையீடில்லாமல் இந்தியா தனது அரசியல் அமைப்பை, தானே ஓர் அரசியல் நிர்ணய சபையின் மூலம், அமைத்துக்கொள்ளும் உரிமையையும், அவர்கள் அங்கீகரிக்கவேண்டும். இவ்வாறு காங்கிரஸ் கேட்டுக்கொண்டது.

பேரம்பேசும் கருத்தோடு, இந்த உரிமையைக் காங்கிரஸ் கோரவில்லை. நீண்ட காலமாக, நாங்கள் சுதந்தரம் பெறப் போராடிவருகிறோம். அந்தப் போராட்டத்தின் நிவர்த்தியற்ற விளைவே இந்தக் கோரிக்கை. யுத்தத்தை இந்திய மக்கள் ஆதரிக்கும்படி செய்வதற்கான எந்த முயற்சிக்கும், இது பூர்வாங்கமாகும். இந்தியத் தேசீயத்துக்கும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்கும், சென்ற நூற்றைம்பது வருஷ காலமாய்ப் போராட்டம் நிகழ்ந்துகொண்டிருக்கிறது. அந்தப் போராட்டமே எங்கள் பகைப்புலமாய் அமைந்திருக்கிறது. அதை மறந்து ஒதுக்குவது சுலபம் அல்ல. இங்கிலாந்து, தனது தாய் நாட்டில் ஓரளவு ஜனநாயகம் உள்ளதாய் இருக்கலாம். இந்தியாவில் உள்ள எங்கள் கண்ணுக்கோ, அது ஏகாதிபத்தியக் கோலத்தில்தான் காட்சி தருகிறது. அந்த ஏகாதிபத்திய முறையின் கீழே, நாங்கள் பல தலைமுறைகளாகத் துன்பம் அனுபவித்துவிட்டோம். இன்னமும் இங்கிலாந்தின் நோக்கம், ஏகாதிபத்திய முறையிலேதான் முற்றும் செல்கிறது என்று, நாங்கள் நம்புகிறோம்.

இந்தியாவிலும் சரி, வெளி நாடுகளிலும் சரி, பிரிட்டன் அனுஷ்டிக்கும் கொள்கை, எங்களுடைய இந்த நம்பிக்கையைப் பலப்படுத்துகிறது. இந்தியாவையும் இங்கிலாந்தையும், மனோபாவ ரீதியான ஒரு பெரிய தடைச் சுவர் பிரித்து வைத்திருக்கிறது. இந்திய சுதந்தரத்தைப் பரிபூரணமாய் ஒப்புக்கொள்ளும் ஓர் அறிக்கையைப் பிரிட்டன் பிறப்பிப்பதன் மூலமே, அந்தத் தடைச்சுவரைத் தகர்த்தெறிய முடியும். இந்த யுத்தத்திலே இங்கிலாந்தின் நோக்கம் அந்தரங்க சுத்தியானது என்று, அப்போது தான் ஸ்தாபிதமாகும். அப்படியில்லையானால், ஏகாதிபத்தியப் போர்களிலே நாங்கள் ஏன் கூட்டாளிகளாய்ச் சேரவேண்டும்? ஏகாதிபத்திய நோக்கங்களை அவர்கள் நிறைவேற்றிக் கொள்வதற்காக, எங்கள் பொருள் முதலிய வசதிகளை உபயோகித்துக் கொள்ளும் படி, நாங்கள் ஏன் அவர்களுக்கு இடங் கொடுக்க வேண்டும்?

பிரிட்டிஷ் சர்க்கார் எங்களுக்கு ஒரு பதில் அளித்தார்கள். அது எங்கள் அச்சங்களும் சந்தேகங்களும் முற்றும் நியாயமே என்று காட்டிவிட்டது. தங்கள் யுத்த நோக்கங்களையோ சமாதான நோக்கங்களையோ தெளிவாய்ச் சொல்ல, பிரிட்டிஷ் சர்க்கார் மறுத்துவிட்டார்கள். இந்தியா சம்பந்தப்பட்ட மட்டிலும், அவர்கள் சொல்வதென்ன? "யுத்தம் முடிந்ததும், இந்தியாவில் உள்ள பற்பல சமூகங்கள், கட்சிகள், நலன்கள் இவைகளின் பிரதிநிதிகளோடும் இந்திய மன்னர்களோடும் ஆலோசனைகள் நடத்த, மன்னர்பிரானின் சர்க்கார் மிகவும் சித்தமாயிருக்கிறார்கள். விரும்பத் தக்கவை என்று மதிக்கப்படும் மாறுதல்களை இந்திய அரசியல் அமைப்பில் செய்வதற்கு, அந்தப் பிரதிநிதிகளின் உதவியையும் ஒத்துழைப்

யையும் பெறுவதே, இந்த ஆலோசனைகளின் நோக்கம்" என்றே சொல்கிறார்கள். இதில் சொல்லப்படும் கட்சிகளிலும் நலன்களிலும், பிரிட்டிஷ் முதலாளிகள், பிரிட்டிஷ் வியாபாரிகளின் நலன்களும் அடங்கியிருக்கும் என்று அவர்கள் தெளிவாய்ச் சொல்லியிருக்கிறார்கள்.

ஐரோப்பிய யுத்தம், உலக முழுவதையுமே ஒரு குலுக்குக் குலுக்கிவிடும்போல் இருக்கிறது. உலக முழுவதன் ராஜீய, பொருளாதார அமைப்பே நிலைகுலைந்து போகும்போல் இருக்கிறது. என்றாலும், ஒயிட்ஹாலில் உள்ள பிரிட்டிஷ் சர்க்கார், பழைய பாஷையிலேயே பேசுகிறது - பிரிட்டிஷ் ஏகாதிபத்திய முறையின் பாஷையில். நாம் யுத்தம் முடியும் வரையில் பொறுத்திருக்க வேண்டுமாம். அப்புறம் ஒயிட்ஹால் தீர்மானிக்குமாம்! இந்திய மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளை, அவர்கள் லட்சியம் செய்யமாட்டார்கள். விசித்திரமான பற்பல பழைய கும்பல்களையும் அழைத்து, அவர்கள் ஆலோசிப்பார்கள். பிற்பாடு, விரும்பத் தக்கதென்று மதிக்கப்படும் சங்கதி உதயமாகும்! ஆலோசனை சொல்லக் கூடிய கும்பல்களில், சுதேச மன்னர்களும் பிரிட்டிஷ் விசேஷ உரிமைக்காரர்களும் இருப்பார்கள். அந்த இரண்டு கோஷ்டியாரும், இந்திய சுதந்தரத்தைப் பரிபூரணமாய் எதிர்ப்பவர்கள். சுதேச மன்னர்கள் ஆளும் இந்திய சமஸ்தானங்கள், மலை யேறிப்போன பழம் பசலியின் எச்சங்களாகும். அவைகளில், பூரண எதேச்சாதிகாரம் நடக்கிறது; சில சமஸ்தானங்களில் பழம் பசலி முறையிலேயே நிர்வாகம் நடக்கிறது. அவர்களைப் பிரிட்டிஷ் சர்க்கார் மட்டும் காப்பாற்றி வரா விட்டால், வெகு காலத்துக்கு முன்பே அவைகள் மறைந்து போயிருக்கும். சமீபத்தில் சில வருஷங்களாக, இந்தச் சமஸ்தானங்

களில், மக்களின் இயக்கம் ஒன்று தோன்றியுள்ளது. சுதந்தரமும் ஜனநாயக உரிமைகளும் வேண்டுகிறது அந்த இயக்கம். குரூரமான அடக்கு முறையையும், கிராதகத்தனமான வழிகளேயும் கைக்கொண்டு, இந்த இயக்கத்தை அடக்கினர்கள்; அடக்கிவருகிறார்கள். இவர்களிடம் நாஜிகளும் தோற்றுப் போவார்கள் போலிருக்கிறது. சமஸ்தானங்களில் நடைபெறும் இந்த முறைக்கு, பிரிட்டிஷ் சர்க்கார் பூரண ஆதரவு தருகிறது.

பிரிட்டிஷ் முதலாளிகளும் வியாபாரிகளும் பிற உரிமையாளர்களும், இந்தியாவில் ஏகாதிபத்திய முறையின் ஆதிக்கத்துக்கும் சுரண்டலுக்கும் கோட்டைகளாய் விளங்குகிறார்கள். முடிவாய்ப் பார்க்கப் போனல், அவர்கள் சார்பிலும் அவர்களுக்காகவுமே, இந்தியாவைப் பிரிட்டிஷ் சர்க்கார் ஆண்டு வருகிறது. எந்த மாறுதலைச் செய்வதற்கும், சுதேச மன்னர்களேயும் பிரிட்டிஷ் விசேஷ உரிமையாளர்களேயும் சம்மதம் கேட்கும்படி நம்மிடம் சொல்வது, தாண்ட முடியாத தடைச் சுவரை நம் முன் எழுப்புவதற்கே சமமாகும். பிரிட்டிஷ் ஏகாதிபத்திய முறையை ஒழிப்பது பற்றி முடிவான தீர்மானம் செய்யும் உரிமை, அந்த ஏகாதிபத்தியவாதிகளிடமே இருக்க வேண்டும் என்றுதான் இதற்கு அர்த்தம்.

பிரிட்டிஷ் சர்க்காரின் பதில், இந்தியரை அவமதிப்பதாகும். இந்தியாவிலும் பிற இடங்களிலும் ஏகாதிபத்திய ஆட்சி முறையைக் கெட்டிப் படுத்திக்கொள்ளும் ஆசைதான் அந்தப் பதிலில் அடங்கியிருக்கிறதென்று இந்தியர்கள் கண்டார்கள். அப்படி யென்றால், ஐரோப்பிய யுத்தம், போட்டா போட்டி ஏகாதிபத்திய முறைகளுக்கிடையில் நடக்கும் ஒரு யுத்தமே யாகும். அத்தகைய யுத்தத்தில் இந்தியா எவ்வித மாகவும் பங்கெடுத்துக்

கொள்ள முடியாது. பிரிட்டிஷாரின் இந்தப் பதிலே, காங்கிரஸ் மாத்திரம் அல்ல, இந்தியாவில் உள்ள சகல கோஷ்டிகளும் சகல கட்சிகளுமே கண்டித்தன. தான் இந்த நிலைமையில் யுத்தத்திலே கலந்துகொள்ள முடியாது என்று, காங்கிரஸ் தீர்மானித்தது. ஒத்துழையாமைக்கு முதல் படியாக, மாகாணக் காங்கிரஸ் மந்திரிகளையெல்லாம் ராஜீனுமாச் செய்யும்படியும், அது கட்டளையிட்டது. எட்டு மாகாணக் காங்கிரஸ் மந்திரி சபைகள் அப்படி ராஜீனுமாச் செய்தன. அவைகளுள் ஏழு மாகாணங்களில் ஜனப்பிரதிநிதித்துவம் வாய்ந்த மாற்று மந்திரி சபைகள் அமைக்க முடியாததால், அரசியல் அமைப்பைத் தாற்காலிகமாக ரத்துச் செய்துவிட்டு, கவர்னர்களே எதேச்சாதிகாரம் வகிக்கிறுர்கள். எட்டாவது மாகாணத்தில் திரிசங்கு மந்திரி சபை ஒன்று அமைந்திருக்கிறது; அதன் வருங்கால வாழ்வு நிச்சயமில்லை. ஆகவே, பழைய எதேச்சாதிகாரத்துக்கும் சற்றும் ஜனப்பொறுப்பற்ற சர்க்கார் ஆட்சிக்கும், நாம் திரும்பிப் போயிருக்கிறோம்.

இந்தியாவில் எழுந்த ஆத்திரத்தின் அளவைக் கண்டு, பிரிட்டிஷ் சர்க்கார் திடுக்கிட்டுப் போனுர்கள். அதனுல், சமரசத்துக்கு மீண்டும் ஒரு முயற்சி செய்தார்கள். பொது ஜனப் பிரதிநிதிகளுக்கு இந்திய வைஸ்ராயின் நிர்வாக சபையில் சில ஸ்தானங்கள் அளிப்பதாகவும், அவர்களை வைஸ்ராயே நியமனம் செய்வார் என்றும், பிரிட்டிஷ் சர்க்கார் சொன்னுர்கள். பெரிய உத்தியோகங்களைக் கொடுத்து, சில பிரபல தலைவர்களை விலைக்கு வாங்குவதேயாகும் இந்த முயற்சி. எழுந்துள்ள பிரச்னைகள் என்ன என்பதை அவர்கள் அலட்சியம் செய்துவிட்டார்கள். இந்திய சுதந்தரத்தைப்பற்றி அறிக்கை செய்யாமல் மழுப்பிவிட்டார்கள். காங்கிரஸ் முட்டாள்தன

மாக இந்தத் தூண்டிலில் சிக்கியிருந்தால், சிலருடைய சொந்த லாபத்துக்காகவே அது பேரம் பேசியது என்ற பெயர் அதற்கு வந்திருக்கும். ஆனால், இந்த ஏற்பாட்டைக் காங்கிரஸ் நிராகரித்து விட்டது.

இன்னொரு தந்திரமான முயற்சியையும், பிரிட்டிஷ் சர்க்கார் செய்தார்கள். ராஜீயப் பிரச்னையை விட்டு, வகுப்புப் பிரச்னைமீது, பொது ஜனங்களின் கவனம் விழும்படி செய்யவும், அவர்கள் முயன்றார்கள். யுத்தம் தொடங்கிய காலத்திலிருந்து எழுந்துள்ள பிரச்னை, முற்றும் ராஜீயப் பிரச்னையேயாகும். இந்திய சுதந்தரத்தையும், இந்தியா தனது அரசியலமைப்பைத் தானே தயாரித்துக்கொள்ளும் உரிமையையும் பற்றியது அந்தப் பிரச்னை. வகுப்புப் பிரச்னையும், அதற்குரிய இடத்திலே முக்கியமானதுதான். ஆனால், இங்கே அதற்குச் சம்பந்தமில்லை. என்றாலும், பிரிட்டிஷ் சர்க்கார், வகுப்புச் சிக்கல்கள் என்ற போர்வைக்குள்ளே போய் ஒளிந்துகொண்டார்கள்; பிற்போக்கான சில வகுப்புவாதக் கோஷ்டிகளுடனும் சிறுபான்மையோருடனும் ஒப்பந்தம் ஏற்பட்டால்தான், அரசியல் பிரச்னை குறித்து மேற்கொண்டு ஆலோசிக்க முடியும் என்று, அவர்கள் சொன்னார்கள். இந்தியாவின் ஒருமை, ஜனநாயகம், சுதந்தரம் இவைகளுக்கு மட்டில் பங்கமில்லாத பட்சத்தில், சிறுபான்மையோரின் உரிமை நலன்களையும் வகுப்புகளின் உரிமை நலன்களையும் அங்கீகரித்துப் பாதுகாக்க நாங்கள் என்ன வேண்டுமானாலும் செய்யத் தயாராயிருக்கிறோம் என்று இந்தியத் தேசியக் காங்கிரஸ் அறிக்கை செய்தது. ராஜீயத்திலே பிற்போக்காயிருந்துகொண்டு, சுதந்தரம், ஜனநாயகம் என்ற கருத்துக்கே விரோதமாயிருப்பவர்களுக்கு, இந்த அறிக்கை ஒரு நாளும் திருப்தியளிக்காது. வகுப்புவாதிகளும் சுதேச

மன்னர்களும் அடங்கிய இந்தப் பிற்போக்குக் கோஷ்டி யார், சென்ற காலத்தில் போலவே மீண்டும், பிரிட்டிஷ் ஏகாதிபத்திய முறைக்குப் பின்னே அணிவகுத்து நிற்கிறார்கள்; ஜனங்களுக்கு அதிகாரம் அளிக்கக்கூடிய எந்த மாறுதலையும் எதிர்க்க முஸ்தீப்பாயிருக்கிறார்கள்.

எந்த அதிகாரமோ விசேஷ உரிமையுள்ள ஸ்தானமோ, தனக்கு வேண்டுமென்று, தேசியக் காங்கிரஸ் கேட்கவில்லை. இந்திய சுதந்தரத்தைப் பற்றிய ஓர் அறிக்கை வேண்டுமென்றுதான் கேட்டது. வயது வந்தவரெல்லாம் சுதந்தரமாய் ஓட்டுச் செய்வதன் மூலம் தேர்ந்தெடுத்த ஓர் அரசியல் நிர்ணய சபையே இந்திய அரசியல் அமைப்பைத் தயாரிக்க வேண்டும் என்றுதான் கேட்டது. அந்த அரசியல் நிர்ணய சபை, சில பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கும். அந்தப் பிரதிநிதிகள் பிரிட்டிஷ் சர்க்காரின் பிரதிநிதிகளைச் சந்திப்பார்கள். பரஸ்பரம் அக்கறையுள்ள சகல பிரச்னைகளையும் சமரசமாகப் பேசித் தீர்த்துக்கொள்ளவும், இரண்டு சுதந்தர நாடுகளுக்கும் இடையே ஓர் உடன்படிக்கையைச் செய்துகொள்ளவுமே, அவர்கள் அப்படிச் சந்திப்பார்கள். தேசம் முழுவதன் விருப்பத்தையும் அறிந்துகொள்ளவும் சகலமானவருக்கும் பூரண சந்தர்ப்பம் அளிக்கவும் ஜனநாயக ரீதியாக உள்ள ஒரே வழி இதுதான். வேறே எந்த வழியும், பிரிட்டனின் விருப்பத்தையோ, அல்லது நாட்டிலே விசேஷ உரிமைகள் படைத்த சில கோஷ்டியார்களின் விருப்பத்தையோ தேசமக்களின் தலைமீது சுமத்துவதாய்த்தான் முடியும்.

சிறுபான்மையோரின் அல்லது பற்பல வகுப்பார்களின் பிரச்னை ஆலோசனைக்கு உரியதுதான். ஆனால், அவர்களின் உரிமைகளும் ஆட்சேபங்களும் என்னவாயிருந்தா

லும் சரியே ; இந்திய சுதந்தரத்தைப் பற்றிப் பிரிட்டன் அறிக்கை செய்வதற்கு, அவர்கள் குறுக்கே நிற்கமுடியாது. அந்த அறிக்கை, பிரிட்டிஷ் சர்க்காரின் நோக்கத்தையும் தீர்மானத்தையுமே அறிவிக்கும். சிறுபான்மையோரின் பாதுகாப்புக்கு அது எவ்விதமும் இடையூறு யிராது. என்றாலும், தாங்கள் ஒருவித அறிக்கையுமே செய்யாதிருப்பதற்குச் சாக்காக, சிறுபான்மையோரின் பிரச்னையை, பிரிட்டிஷ் சர்க்கார் காரணம் கூறுகிறார்கள்.

இந்தியாவில் இந்தச் சிறுபான்மையோர் பிரச்னை என்பதுதான் என்ன? ஐரோப்பாவில் உள்ள நிறபேதச் சிறுபான்மையோரோ, தேசிய இனங்களோ, இங்கே இல்லை. ஒரே தேசிய இனத்தைச் சேர்ந்த மதவித்தியாச வகுப்புக்களே இங்கே இருக்கின்றன. கிருஸ்தவர், சீக்கியர் (ஹிந்து மதத்தினின்றும் கிளைத்த ஒரு வகுப்பு), பார்ஸிகள் முதலியோர் சிறுசிறு மதவகுப்புக்கள். ஹிந்துக்களும் முஸ்லிம்களுமே முக்கியப் பிரிவுகள். மொத்த ஜனத்தொகையில், ஹிந்துக்கள் மூன்றில் இரண்டு பங்கு இருக்கிறார்கள். முஸ்லிம்களோ, இந்தியா முழுவதையும் ஒன்றாய்ப் பார்க்கும் கற்பனையில்தான் சிறுபான்மையோர். அவர்கள், எட்டுக் கோடிப்பேர் இருக்கிறார்கள். வடக்கேயுள்ள ஐந்து மாகாணங்களில், முஸ்லிம்கள் பெரும்பான்மையோராக இருக்கிறார்கள். மாகாணச் சுய ஆட்சியில் வகுப்பு ரீதியிலோ மதரீதியிலோ அவர்கள் வேலை செய்தார்களானால், இந்த ஐந்து மாகாணங்களையும் ஆட்டி வைக்கலாம். ஜனத்தொகையும் நிர்வாகப் பிரதேசங்களும் சமநிலையான முறையிலேயே பரவிப் பிரிந்திருக்கின்றன. ஆகையால் இந்த இரண்டு வகுப்புக்களில் எதுவும், தான் விரும்பினால்கூட, மற்றதை அலட்சியம் செய்ய முடியாது; அதனிடம் தவறாய் நடந்து கொள்ளவும் முடி

யாது. அப்படி ஏதாவது நடக்குமானல், உடனே நாட்டின் இதர பாகங்களில், அதன் எதிரொலியான விளைவுகள் ஏற்படும்.

இந்தப் பிரம்மாண்டமான இரண்டு மதவகுப்புக்களும் நாட்டில் ஒன்றை ஒன்று எதிர்த்து அணிவகுத்து நிற்கின்றன என்று நினைப்பது சுத்தப் பிசகு. என்றாலும், முக்கியமாய் நகரங்களிலே சிற்சில சமயம் துரதிருஷ்ட வசமான சச்சரவுகள் நடப்பது உண்மைதான். பிரிட்டிஷார் அனுஷ்டித்து வரும் கொள்கையின் நீண்டகால சரித்திரமே இதற்குக் காரணமாகும். பிளவு உணர்ச்சிகளைத் தூண்டிவருவதே பிரிட்டிஷாரின் இடையருத கொள்கையாய் இருந்து வந்திருக்கிறது. இந்தியாவை ஒற்றுமைப் படுத்த இந்தியத் தேசிய இயக்கம் முயன்று வருகிறது. அதில் அது பெரும் அளவு வெற்றியும் அடைந்திருக்கிறது. இதே சமயத்தில், பிரிட்டிஷ் ஏகாதிபத்திய முறையோ, அந்த ஒற்றுமைக்குப் பல இடையூறுகளைச் சிருஷ்டிக்கவே முயன்றிருக்கிறது. அத்தகைய இடையூறுகளில் ஒன்று, தனித் தொகுதியைப் புகுத்தியதாகும். அதன்படி அந்தந்த வகுப்பாரும் தத்தம் சொந்தப் பிரதிநிதிகளைத் தனித்தனி தாங்களே ஓட்டுச் செய்து தேர்ந்தெடுக்கிறார்கள். இது பிரிவுணர்ச்சியை நிரந்தரமாக்கிவிட்டது; இரு கோஷ்டிகளிலும் இருக்கக்கூடிய தீவிர வகுப்பு வாதிகளுக்கும் மதவெறியர்களுக்கும் தைரிய மூட்டிவிட்டது. இந்த மதவெறியையும் வகுப்பு உணர்ச்சியையும், ராஜீயப் பிற்போக்காளர்கள், தங்களுக்கு அனுகுணமாக அடிக்கடி உபயோகித்துக் கொண்டார்கள்; இன்னமும் உபயோகித்துக்கொண் டிருக்கிறார்கள்.

இத்தனைக்கும் எதிரே, மக்களின் நோக்கிலும் செயலிலும் ஓர் அரசியல் ஒற்றுமையை வளர்ப்பதில், தேசியக்

காங்கிரஸ் பெரிதும் வெற்றிபெற்றிருக்கிறது. இந்திய சுதந்தர லட்சியத்தை ஒப்புக்கொள்ளும் சகல இந்தியரும் காங்கிரஸில் சேரலாம். அதில் மதவேற்றுமையோ, வேறு வேற்றுமையோ இல்லை. ஹிந்து அங்கத்தினர்கள்தாம் காங்கிரஸில் மிக அதிகமாயிருக்கிறார்கள். அதற்கு நிவர்த்தியில்லை. என்றாலும், ஆயிரக் கணக்கான முஸ்லிம் அங்கத்தினர்களும் அதில் இருக்கிறார்கள். நூற்றுக்குத் தொண்ணூற்றைந்து பேர் முஸ்லிமாயிருக்கும் வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தில் காங்கிரஸே தலைமையாய் நிற்கிறது. அந்த மாகாணம் காங்கிரஸ் மந்திரி சபையையும் பெற்றிருந்தது.

ஹிந்துக்கள், முஸ்லிம்கள் இரு வகுப்பாருமே தத்தமக்குச் சொந்தமான வகுப்பு ஸ்தாபனங்களை அமைத்துக்கொண்டிருக்கிறார்கள். முஸ்லிம் ஸ்தாபனம் அகில இந்திய முஸ்லிம்லீக். முஸ்லிம்லீக்கை நடத்திவருபவர்கள், பிற்போக்கான ராஜீய வாதிகள். அவர்கள் சென்ற இருபது வருஷ காலத்தில் நடந்திருக்கும் இந்திய சுதந்தரப் போராட்டத்தில் சிறிதே பங்கெடுத்துக் கொண்டவர்கள்; அல்லது அதுவுமே எடுத்துக் கொள்ளாதவர்கள். மேலும், அவர்கள் அந்தப் போராட்டத்தை அடிக்கடி எதிர்த்து வந்திருப்பவர்கள்; பிரிட்டிஷ் ஏகாதிபத்திய முறையின் பக்கமே சேர்ந்திருப்பவர்கள். முஸ்லிம்லீக்கையல்லாமல், வேறு மூன்று முக்கியமான முஸ்லிம் ஸ்தாபனங்களும் இருக்கின்றன. அவைகள் ராஜீயத்திலே மிகவும் முற்போக்கானவை. காங்கிரஸோடு அடிக்கடி அவைகள் ஒத்துழைத்திருக்கின்றன. இந்தியாவுக்குச் சுதந்தரமும் அரசியல் நிர்ணயசபையும் வேண்டும் என்ற காங்கிரஸ் கோரிக்கையையும், அவைகள் இன்று ஆதரிக்கின்றன.

அரசியல் அமைப்பில் ஜீவாதார உரிமைகள் பற்றிய சட்டங்களின்மூலம், சகல சிறுபான்மை வகுப்புகளின் உரிமைகளையும் பூரணமாய்ப் பாதுகாக்கவேண்டும் என்று காங்கிரஸ் திரும்பத் திரும்பக் கூறிவந்திருக்கிறது. சமயம், மனச்சாட்சி, கலாசாரம், பாஷை முதலிய நம் சிந்தனைக்கு எட்டக்கூடிய சகல சிறுபான்மை உரிமைகளையும் இவ்வாறு பாதுகாத்து விடலாம். இவைகளைத் தவிர, இதர பிரஜா உரிமைகள் அனைத்தும், எல்லாருக்குமே பிரயோகமாகும். இந்த உரிமைகளில் ஏதாவது பங்கம் செய்யப்படுமானால் நாடு முழுவதற்கும் பொதுவான நீதிஸ்தலத்திலே அது பற்றி வழக்குத் தொடரலாம்.

அரசியல் நிர்ணயசபைக் கோரிக்கையைச் செய்கையில், சிறுபான்மையோரின் உரிமைகள்பற்றி, காங்கிரஸ் விசேஷ கவனம் செலுத்தியிருக்கிறது. வயதுவந்த சகல மக்களுக்கும் ஓட்டுரிமை வழங்குவதன் மூலமே, அரசியல் நிர்ணயசபை தேர்ந்தெடுக்கப்படும். ஆனால், சிறுபான்மை வகுப்புகள் தங்களுடைய சொந்தப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்து அனுப்ப வசதியிருக்கும். அவர்கள் விரும்பினால், தனித் தொகுதிகளைப் பெற்றுக்கொள்ளலாம். இந்தப் பிளவு ஏற்பாட்டை நாங்கள் மிகவும் வெறுக்கத்தான் வெறுக்கிறோம். என்றாலும், இந்தக் காரியத்துக்காகத் தனித் தொகுதி ஏற்பாட்டுக்கு நாங்கள் சம்மதிக்கிறோம். மேலும், சிறுபான்மை வகுப்புகளின் நலன்களை நேரடியாகப் பாதிக்கும் சகல பிரச்னைகளையும், பரஸ்பர ஒப்பந்தத்தின் மூலமே தீர்த்துக்கொள்ளவேண்டும். பெரும்பான்மையோரின் அதிக ஓட்டுப் பலத்தைக்கொண்டு அவைகளைத் தீர்மானிக்கலாகாது. இவ்வாறும் நாங்கள் யோசனை கூறியிருக்கிறோம். எந்த ஒரு விஷயம்பற்றியாவது அப்படிப் பரஸ்பர ஒப்பந்தம் ஏற்படாவிட்டால்

அந்த விஷயத்தை ஒரு பஞ்சாயத்துக்கு விடலாம். சர்வ தேச சங்கத்தையோ, ஹேக் நகரில் உள்ள சர்வதேச நீதி ஸ்தலத்தையோ, இரு தரப்பாரும் சம்மதித்த பாரபட்சமற்ற வேறு ஏதாவது ஒரு சபையையோ, அப்படிப் பஞ்சாயத்துச் செய்யும்படி கேட்டுக்கொள்ளலாம்.

மனித அறிவுக்கு எட்டியமட்டில், சிறுபான்மை வகுப்புகளுக்கு இதைவிட என்னதாம் பாதுகாப்புகள் செய்யமுடியுமென்று தெரியவில்லை. ஆனால், இன்னும் எவையேனும் பாதுகாப்புகள் யோசனை கூறப்படுமானால், அவைகளைப்பற்றியும் ஆலோசிக்க, காங்கிரஸ் தயாராயிருக்கிறது. ஏனென்றால், இந்தப் பிரச்னையைச் சகல மானவருக்கும் திருப்திகரமாகத் தீர்க்க, காங்கிரஸ் ஆவல் கொண்டிருக்கிறது. என்றாலும், இந்திய சுதந்தரத்துக்கோ ஜனநாயகத்துக்கோ, விரோதமாயிருக்கும் எதையும், இந்தியாவைச் சிதைவுபடுத்தும் எதையும் காங்கிரஸ் ஒப்புக்கொள்ள முடியாது. எந்தச் சிறுபான்மையோரும், பெரும்பான்மையோர் மீது மேலாதிக்கம் செலுத்தவோ, சவாரிசெய்யவோ, இடம் கொடுக்கமுடியாது. என்னதான் இருந்தாலும், பெரும்பான்மையோருக்கும் சில உரிமைகள் உண்டு.

மூன்றாவது கட்சியார் புகுந்துகொண்டு, சதாகாலமும் நமது வகுப்புப் பிரச்னையைக் கிளறிவிட்டு, வகுப்புவாதிகளுக்கு ராஜீயப் பரிசுகளை ஆசைகாட்டிக்கொண்டே இருக்கிறார்கள். இல்லையானால், அந்தப் பிரச்னை எப்போதோ தீர்ந்துபோயிருக்கும். பிரிட்டிஷ் ஏகாதிபத்திய முறை எதுவரையில் இந்தியாவில் ஆதிக்கம் செலுத்தி வருகிறதோ அதுவரையில், உண்மையான வகுப்புச் சமரசம் ஒன்றைக் காண்பது மிகவும் துர்லபமாகும். பிரிட்டிஷ் சர்க்கார் ஏலங்கேட்கும் விலை, மற்றக்கட்சியார்

கொடுக்கக்கூடிய விலையைவிட எப்போதும் அதிகமாகவே இருக்கும். பிற்போக்குக் கோஷ்டிகள் இந்த உண்மையைப் பயன்படுத்திக் கொள்கின்றன; மேல்பகட்டான வகுப்பு வாத லாபங்களுக்காக, தேசத்தின் சுதந்தரத்தை விற்று விடுகின்றன. இந்தக் காரணத்தினால்தான், அரசியல் நிர்ணயசபை கூட்டவேண்டுமென்ற யோசனையை நாங்கள் கூறினோம். அரசியல் நிர்ணயசபையே முடிவான அதிகாரி என்றும் அதில் வெளியார் தலையிட மாட்டார்கள் என்றும் சகலரும் உணர்ந்துகொண்டால்தான், வகுப்புப் பிரச்னையில் சமரசம் ஏற்படும். அப்போது சம்பவங்களின் போக்கு, ஒரு சமரசம் ஏற்படவேண்டிய அவசியத்தை நிர்ப்பந்திக்கும். ஏனென்றால், சமரசம் ஏற்படாத பட்சத்தில், உள்நாட்டுச் சச்சரவுகள் விளைந்துவிடும்.

அரசியல் நிர்ணயசபைத் தேர்தலில், வயதுவந்த அனைவருக்கும் ஓட்டுரிமை அளிக்க வேண்டும்; அல்லது சற்று ஏறக்குறைய அதற்கு இணையான அளவு பெரும்பாலான மக்களுக்கு ஓட்டுரிமை அளிக்கவேண்டும். இப்படி ஒரு யோசனை கூறியிருக்கிறோம். இதற்குச் சில அரசியல் காரணங்கள் இருக்கின்றன. அவைகள் ஒரு புறமிருக்க, வகுப்புப் பிரச்னை ரீதியாக நோக்கினாலும், இந்த விரிவான ஓட்டுரிமை விரும்பத்தக்கதே யாகும். வகுப்புப் பிரச்னையானது, அடிப்படையிலே நடுத்தர வகுப்பாரின் பிரச்னையாகும்; மகாஜனங்களைப் பாதிப்பதல்ல. அரசியல் நிர்ணயசபையின் அங்கத்தினர்களை மகாஜனங்கள் தேர்ந்தெடுப்பார்களானால், அந்த அங்கத்தினர்கள் எதையும் பொருளாதார ரீதியிலேயே நோக்குவார்கள். மற்றவர்களுடைய பிரச்னைகளைவிட மகாஜனங்களின் பிரச்னைகளிலேயே அவர்களுக்கு அதிக அக்கறை இருக்கும். குடியானவன், தொழிலாளி, கடைக்காரன், ஆசாரி, வியாபாரி ஆகியவர்

கள் ஹிந்துவாயிருந்தாலும் சரி, முஸ்லிமாயிருந்தாலும் சரி, அவர்களுடைய பிரச்னைகளெல்லாம் ஒரே விதமானவை. அவர்களில் எவனும், தன் தொழில் அல்லது வியாபாரத்தில், வகுப்பு அல்லது மதவேற்றுமைகளைப் பற்றித் தொல்லைப்படுவதில்லை. இந்தக் காரணத்தினால் தான், குறுகிய தேர்தல் தொகுதிகளை நாங்கள் எதிர்க்கிறோம். வகுப்புவாத நோக்குள்ள கோஷ்டியார்களே தங்கள் சொந்த நலன்களைப் பாதுகாத்துக் கொள்ளும் குறுகிய எண்ணத்தோடு, அந்தக் குறுகிய தேர்தல் தொகுதிகளைப் பெரும்பாலும் ஆட்டிவைக்கிறார்கள்.

இந்தியாவில் வயது வந்தவருக்கெல்லாம் ஓட்டுரிமை அளித்தால், அளவிறந்த வாக்காளர்களும் ஏராளமான தேர்தல் தொகுதிகளும் ஏற்பட்டு விடுமே என்று ஓர் ஆட்சேபம் சொல்லுகிறார்கள். சர்வஜன ஓட்டுரிமையின் மூலம் பல இடைப்பட்ட தேர்தல் சபைகளைத் தேர்ந்தெடுத்து அவைகளின் ஓட்டைக் கொண்டு அரசியல் நிர்ணய சபையை அமைக்கும் மறைமுகத் தேர்தல் முறையை, நாம் கைக்கொள்ளலாம். இப்படிச் செய்தால் மேற்கண்ட சிரமம் தீரும்.

உலகத்தில் இன்று எத்தனையோ பிரச்னைகள் நிறைந்திருக்கின்றன. அவைகளில் சில, பரிகாரங் கிடைக்காத காரணத்தால், ஐரோப்பாவைச் சர்வநாச பயங்கரத்தில் கொண்டுபோய்த் தள்ளியிருக்கின்றன. எந்தப் பிரச்னையும் எளியதல்ல. ஒவ்வொரு பிரச்னையுமே, வேறு பல பிரச்னைகளுடன் பிணைந்திருக்கிறது. இந்தியாவில் நாம் சமாளிக்க வேண்டியிருக்கும் சங்கடங்களையெல்லாம் நம்மில் எவரும் குறைத்துப் பேசவில்லை. சில சங்கடங்கள் நாமே சிருஷ்டித்துக் கொண்டவை; அல்லது, நம்முடைய தவறுகளால் சிருஷ்டியானவை. சில சங்கடங்கள் பிரிட்டிஷ்

சர்க்கார் சிருஷ்டித்தவை. என்றாலும், உலகத்தின் பெரிய பிரச்னைகளை மனத்தில் வைத்துக்கொண்டால், இந்தியப் பிரச்னைகள் சமாதான முறையில் தீர்த்துக்கொள்ளக் கூடியவையேயாகும். அப்படித் தீர்த்துக்கொள்வதற்கு இடையூறா யிருப்பவர்கள், இங்கிலாந்திலும் இந்தியாவிலும் உள்ள சில பிற்போக்குக் கோஷ்டியார்களேயாவர். இதற்கிடையிலே அந்தப் பிரச்னைகள் வரவர வளர்ந்து கடுமையாகி வருகின்றன. ஏனென்றால், அவைகளுக்குப் பின்னே, பொருளாதாரப் போராட்டங்களும் நம் நாட்டின் பெரும் வறுமையும் குடியானவர் பிரச்னையும் பழம்பசலிச் சுதேசமன்னர் பிரதேசங்களும் விசேஷ நலன்களைப் பெற்றிருக்கும் பிரிட்டிஷாரின் மேலாதிக்கமும் இருந்து கொண் டிருக்கின்றன. பிரிட்டனோ, தன் ஏகாதிபத்திய முறையின் நலன்களைப் பாதுகாத்துக் கொள்வதற்காக, நாட்டைச் சிதைக்கும் பிற்போக்கான சக்திகளைத் தூண்டிவந்தது; தூண்டிக்கொண்டே இருக்கிறது. இது தான் துயரத்துக்குரிய விஷயம். ஆனால், தன் ஏகாதிபத்திய முறையின் நலன்களைப் பிரிட்டன் காப்பாற்றிக்கொள்ள முடியாது. ஏனென்றால், அவைகள் போய்த்தான் தீரும். ஆனால், அதற்குச் சௌஜன்யமான வழி காணுவிட்டால், குரோதம், சச்சரவு இவைகளோடு, அவைகள் போகும். இந்தியா வெளியாரின் ஆதிக்கத்துக்குப் பணிந்து கிடக்கும் காலம் மலையேறி விட்டது.

யுத்த நோக்கங்களையும் இந்திய சுதந்தரத்தையும் பற்றி அறிக்கை செய்யுமாறு இங்கிலாந்தை இந்தியாவின் சார்பாகக் காங்கிரஸ் அழைத்தது, தீரமான செயலாகும். இந்த அழைப்பு எந்த உணர்ச்சியுடன் விடுக்கப்பட்டதோ அதே உணர்ச்சியுடன் இதை இங்கிலாந்து அங்கீகரிக்குமானால், இரு நாடுகளுக்கும் இடையிலே பல தலைமுறை

களாய் நிகழ்ந்துவந்த சச்சரவும் போராட்டமும் எல்லாம் முடிவடைந்துவிடும். முதல் முதலாக, பரஸ்பரம் சமத்துவம் உள்ளவர்களுக்கிடையே ஏற்படும் மனம் ஒப்பிய ஓர் ஒத்துழைப்பும் தொடங்கும். இங்கிலாந்தின் செயல், உலகத்தையே பிரமிப்படையச் செய்யும். இங்கிலாந்து உண்மையிலேயே ஜனநாயகத்தையும் சுதந்தரத்தையும் ஆதரித்து நிற்கிறது என்றும் நிரூபணமாகும். யுத்தகளத்திலே பெறக்கூடிய எந்த வெற்றியையும்விடப் பெரிய வெற்றியைப் பிரிட்டன் சம்பாதித்துவிடும்; உலகத்தின் தார்மிக ஆதரவு அதன்பக்கம் இருக்கும்.

ஆனல், ஏகாதிபத்திய முறைகள் சுலபத்தில் சரவதில்லை. பிரிட்டிஷ் ஏகாதிபத்திய முறையோ பழமையானது; முரடானது. சேம்பர்லீன் சர்க்கார், யுத்த நிர்ப்பந்தத்திலேயாயினும், பிரிட்டிஷ் ஏகாதிபத்திய முறையை முடித்துவிடுமா என்று எதிர்பார்க்கமுடியாது. இந்த ஏகாதிபத்திய முறை வேலை செய்துகொண்டிருக்கிறது என்றும் தன்னைத்தானே பாதுகாத்துக்கொள்ள முயன்றுகொண்டிருக்கிறது என்றும் எங்களுக்குத் தெளிவாகத் தெரிகிறது. இத்துடன் இந்தியா கூட்டாளியாக இருக்க முடியாது. ஆகையால்தான், யுத்தத்திலே சேராமல் அது விலகி நிற்கிறது. ஒத்துழையாமையின் முதல்படியை நாங்கள் கைக்கொண்டிருக்கிறோம். அடுத்தபடியை மேற்கொள்ள, நாங்கள் அவசரப்படவில்லை. என்றாலும், சம்பவங்களின் போக்கு, நிவர்த்தியில்லாதவாறு மேற்கொண்ட போராட்டத்துக்கு எங்களை இழுத்துச் செல்கிறது.

இந்தியத் தேசியத்துடன் சமரசம் செய்துகொள்ள மீண்டும் பிரிட்டிஷ் சர்க்கார் முயலப்போவதில் சந்தேகமில்லை. ஆனல், இந்திய சுதந்தர விஷயத்தில் பாதி வழி இல்லை என்பதையும், பிரிட்டிஷ் ஏகாதிபத்திய

முறைக்கும் இந்திய சுதந்தரத்துக்கும் பொருத்தமில்லை என்பதையும், அவர்கள் உணர்ந்துகொள்ள வேண்டும். அப்படி உணர்ந்து கொண்டாலன்றி, அவர்கள் சமரச முயற்சிகளெல்லாம் வியர்த்தமாவது நிச்சயம். ஏகாதிபத்திய முறை ஒழியவேண்டும். இந்தியாவை ஒரு சுதந்தர நாடென்று அங்கீகரிக்கவேண்டும். குடியேற்ற நாட்டந்தஸ்து என்பதும் அதுபோன்ற பிறவும் அர்த்தமற்றுப் போயின. அது எவ்வாருயினும், இந்தியாவின் விஷயத்தில், அவைகள் பொருந்தமாட்டா. ஏகாதிபத்திய எண்ணத்தை விட்டு, உலக ஒத்துழைப்புப் பற்றிய நோக்கிலேதான் நாம் சிந்திக்கவேண்டும். அதனுல், எந்த அளவு உள்நாட்டுச் சுதந்தரம் இருந்தாலும் பரவாயில்லை. சர்வதேச ஒத்துழைப்பு நமக்கு அவசியமாகும். அந்த ஒத்துழைப்பு உலகை முழுவதையும் தழுவியதாக இருக்க வேண்டும். இத்தகைய சர்வதேச ஒத்துழைப்பு அல்லது உலக ஏற்பாட்டில் இந்தியா பூரணப் பற்றுதல் வைத்திருக்கிறது. அதில் இந்தியா சந்தோஷமாகச் சேர்ந்து கொள்ளும்.

எங்கள் சுதந்தரப் போராட்டத்தில் நாங்கள் அமைதியான வழிகளையே பின்பற்றிவந்திருக்கிருேம். தார்மிக நோக்கிலேயே, எங்கள் ராஜீயப் போராட்டங்களை நாங்கள் சிந்தித்து வந்திருக்கிருேம். என்ருலும், எங்கள் சிந்தனைப்படி நடப்பதில், நாங்கள் அநேக சமயம் தவறியிருக்கலாம். உலகத்தில் நமக்கு எத்தனையோ துரதிருஷ்டங்கள் நேரிட்டிருக்கின்றன. ஆனுல், இந்த யுத்தமும்கூட உயர்ந்த நோக்கங்களின்றிப் பழைய ஏகாதிபத்திய ரீதியிலேயே நடைபெறுமானுல், உலகத்துக்கோ மனித சுதந்தரத்துக்கோ அடிப்படையான மாறுதல் எதையும் இதுவும் செய்யவில்லையானுல், யுத்தம், மனிதனின் வீழ்ச்சி

இவைகளின் மூலகாரணங்கள் இதனாலும் ஒழியவில்லையானால், அது உண்மையிலேயே பெரிதும் துர்ப்பாக்கியமாகும். அந்தத் துர்ப்பாக்கியம் நேராமல் தடுக்க, இந்தியா மகிழ்ச்சியுடன் வேலை செய்யும். இந்த உணர்ச்சியோடுதான், நாங்கள் பிரிட்டிஷ் சர்க்காரைத் தங்கள் நோக்கங்களை அறிவிக்கும்படி அழைத்தோம். இன்னமும் தொடர்ந்து இந்த உணர்ச்சியோடேயே இருந்துவர, நாங்கள் முயல்வோம். எங்கள் மார்க்கம் பிரிட்டனுடன் வேறாடுவதில் கொண்டுபோய் விடுமானாலும், இந்த உணர்ச்சியை நாங்கள் கைவிடமாட்டோம். இன்றளவும் எந்த ஏகாதிபத்திய முறையின் தீமையை நாங்கள் எதிர்த்துப் போராடிவந்தோமோ அந்தத் தீமைக்கு இப்போது நாங்கள் பணிந்து விடுவோமானால், எங்கள் உள்ளத்திலே வைத்துப் போற்றிவரும் லட்சியத்துக்கே நாங்கள் ஊறு செய்தவர்களாவோம்.

—ஜனவரி 6, 1940.

# 4

# அரசியல் நிர்ணய சபை

இந்திய சுதந்தரத்தைப் பற்றிச் சிலர் கருதும் கருத்துக்கு, பிரிட்டிஷ் பார்லிமெண்டின் சித்தமும் விருப்பமுமே வரம்புகளாயிருக்கின்றன. புரட்சிகரமான மாறுதலுக்குச் சிலர் அஞ்சுகிறார்கள். இந்திய அரசியல் அரங்கத்தின்மீது மகாஜனங்கள் புகுந்து முன்னேறுவார்களென்றால், சிலருக்குப் பெருங்கிலியா யிருக்கிறது. இவர்களெல்லாம் நம்முடன் அடிப்படையிலே மாறுபட்டவர்கள். இவர்கள் நம்மைக் குறைகூறுவதை, நாம் பாராட்டவில்லை. இவர்கள் நம்மைக் குறை கூறுவது சகஜம். ஆனால், இந்திய சுதந்தரத்தைத் தாங்களும் ஆர்வத்தோடு தாங்கி நிற்பதாகப் பாத்தியங் கொண்டாடுவோரில் சிலர் இருக்கிறார்கள்; பலர் அல்ல. இந்தச் சிலரும், நம்மைக் குறை கூறுவோருடன் சேர்ந்து கொள்ளுவதைக் கண்டுதான், எனக்கு ஆச்சரியமாயிருக்கிறது.

உண்மையான ஜனநாயக சுதந்தரமே நமது குறிக்கோள் என்றால், அரசியல் நிர்ணயசபை அமைப்பதுதான் அதற்கு வழியாகும். வேறு வழி இல்லை. இதில் எனக்குத் திட நிச்சயம் ஏற்பட்டுவிட்டது. இந்த வழியைக் கடைப்பிடிக்காவிட்டால், பின் வருபவைகளில் ஒன்றுதான் நடக்கும்: (1) சற்றேறக்குறைய இப்போது உள்ளபடியே பிரிட்டிஷ் பார்லிமெண்டின் ஆதிக்கமே நீடிக்கும்; (2) ஏதோ ஒரு விதமான பாஸிஸ்டு அல்லது ராணுவ எதேச்சாதிகார ஆட்சி அல்லது ஆட்சிகள் ஏற்படும்; (3) இந்தியாவின்

சில பாகங்களில் ஸோவியத் கம்யூனிஸமும் இதர பாகங்களில் சீர்குலேவும் குழப்பமும் தலை தூக்கும்; (4) நாடு முழுவதுமே சீர் குலேவும் குழப்பமும் உண்டாகும்.

என் சம்பந்தப்பட்ட மட்டில், இந்தியா பூராவிலும் சோஷலிஸ்டு பொருளாதார ஏற்பாடு ஒன்று அமலுக்கு வருவதையே, நான் விரும்புவேன். ஸோவியத் அரசாங்க முறையில் சில மாறுதல்களேயும் இசைபாடுகளேயும் செய்துகொண்டால், அது நமக்கு மிகவும் பொருந்தும் என்றே, நான் நினேக்கிறேன். இதனல், ருஷ்ய முறையை அல்லது வழிகளே அப்படியே சமூலமாக நம் நாட்டில் நுழைத்துவிட வேண்டுமென்று நான் எண்ணுவதாக அர்த்தமில்லே. ஸோவியத் முறையிலே, உண்மையான ஜனநாயகத்துடன் பொருந்தக்கூடிய பல அம்சங்கள் உண்டு என்று நான் கருதுகிறேன். ஆயினும், இப்போதோ அல்லது இன்னும் கொஞ்சகாலத்துக்குள்ளேயோ, ஸோவியத் முறையை இந்தியாவுக்குள் நுழைக்க ஏதாவது முயற்சி நடக்குமானல், அதனல் பயங்கரமான சச்சரவுகளும் சீர்குலேவும்தான் விளேயும்.

ஆகையால், அவசியத்தை முன்னிட்டு, நமக்குள்ள ஒரே வழி அரசியல் நிர்ணய சபை அமைப்புத்தான் என்ற முடிவுக்கு நான் வந்திருக்கிறேன். ஆனல், இதற்கு அர்த்தம், குடியேற்ற நாட்டந்தஸ்து என்ற மோட்ச சாம்ராஜ்யத்தைப் படிப்படியாய் அடைவது என்பதல்ல; இதை நாம் நினேவில் வைக்கவேண்டும். அதற்கு மாருகப் புதிய ராஜ்யத்தை ஸ்தாபிப்பதென்றே இதற்கு அர்த்தமாகும். ஏகாதிபத்திய முறையின் பொருளாதார அஸ்திவாரங்களேயும் கட்டுக்கோப்பையும் விட்டு வெளியேறி விலகிச் செல்வதென்றே இதற்கு அர்த்தமாகும். மகா புத்திமான்களான லாயர்களெல்லாம் கூடி மந்திராலோசனே புரிவதன் மூலம்

இதைச் செய்யமுடியாது. சிறுசிறு கமிட்டிகள் கூடிப் பற்பல நலன்களுக்கும் இடையிலே துலாக்கோல் பிடித்துக்கொண்டு, 'இதுதான் அரசியல் அமைப்பு வேலை' என்று சொல்வதன் மூலம், இதைச் செய்ய முடியாது. வெளியார் புரியும் ஆதிக்கத்தின் நிழலிலே இருந்து கொண்டு, இதை ஒரு நாளும் செய்யமுடியாது. அரசியல் ரீதியிலும், மனத்தத்துவ ரீதியிலும் ஏற்ற நிலைமைகள் உண்டாகி யிருக்கவேண்டும். தூண்டுதலும் பின்பலமும் மகாஜனங்களிட மிருந்து கிடைக்கவேண்டும். அப்போது மாத்திரமே இதைச் செய்யமுடியும். ஆகையால்தான், வயது வந்தவருக்கெல்லாம் ஓட்டுரிமை தேவை.

அரசியல் ரீதியிலும் மனத்தத்துவ ரீதியிலும் ஏற்ற நிலைமைகள் இப்போது இருக்கின்றனவா ? இல்லை என்பது தெளிவு. இருக்குமானுல், இதற்கு முன்னேயே அரசியல் நிர்ணய சபையை, நாம் பெற்றிருப்போம். ஆனுல், நாளையோ, நாளை நின்றே எப்படியிருக்கும் என்று என்னுல் சொல்லமுடியாது. ஏனென்றுல், உத்வேகம் நிறைந்து வெகு வேகமாய் மாறிக்கொண்டிருக்கும் காலத்திலே நாம் வாழ்கிறேம். பற்பல விதமான சக்திகளும் இன்று மோதிக்கொண் டிருக்கின்றன.

அரசியல் நிர்ணய சபை வேண்டுமென்று நாம் ஏன் பிரிட்டிஷ் சர்க்காரைக் கேட்கிறேம் ? உண்மையைச் சொன்னுல், நாம் எத்தகைய தானமும் கேட்கவில்லை. 'நாங்கள் இன்னதை அடையப்போகிறேம் ; இன்றே என்றே அதை அடைந்தே தீருவோம்' என்பதையே நாம் அறிவிக்கிறேம். ஏற்ற பலம் நமக்கு உண்டானவுடனே, அதை நாம் அடைவோம். வெகு சீக்கிரத்திலே, அடைவோம். ஒருவேளை ஒரு போராட்டமும் அதற்காக நிகழலாம். இந்த நிமிஷத்திலே நம்மால் அதை

அடைய முடியவில்லை என்பதற்காக, நம் தேவையையும் குறிக்கோளையும் நாம் அறிவிக்காமல் இருக்கவேண்டுமா? ஆயத்தமாவதற்குக்கூட, நிச்சயமாய் அது வழியல்ல. மேலும் போராட்டமின்றியே நமது குறிக்கோளை நாம் அடையும் அதிசயமும் ஒருவேளை நிகழலாம். நமது பலமும் உலக சம்பவங்களின் போக்கும், அதைத் துரிதப் படுத்திவிடலாம். இந்த நம்பிக்கையைத்தான் நாம் ஏன் தள்ளவேண்டும்? இப்படி நடப்பது சாத்தியமே என்று நாம் நம்புவதனுல், நமக்கு ஒரு தீங்கும் இல்லை. ஆனுல், இந்த நம்பியைக்கொண்டு, நாம் ஆத்மதிருப்தி யடைந்து, போராட்ட எண்ணத்தைமட்டும் கைவிட்டுவிடலாகாது.

இந்திய சுதந்தரத்தை அங்கிகரிக்க வேண்டும் என்று, நாம் ஏன் பிரிட்டிஷ் சர்க்காரைக் கேட்கிறோம்? அதனுல் என்ன லாபம்? லாபம் இருக்கத்தான் இருக்கிறது. நமது சுதந்தரத்தை அவர்கள் அங்கீகரித்துவிட்டால், நமது குறிக்கோள் கிட்டிவிடும் என்றோ, தங்கள் வாக்கை அவர் கள் மீறமாட்டார்கள் என்றோ சொல்லமுடியாது. ஆனுலும், இப்படி அறிக்கை செய்ய அவர்கள் மறுக்கிறார் கள். இந்த அறிக்கைக்கு அவர்கள் என்ன மதிப்பு வைத்திருக்கிறார்கள் என்று காட்ட, இது ஒன்றே போதும். இந்திய சுதந்தரத்தைப் பற்றியும், எவ்விதமாகவும் வெளி யாரின் தலையீடில்லாமல் வயது வந்தவரெல்லாம் ஓட்டுச் செய்வதன் மூலம் தேர்ந்தெடுக்கப்படும் அரசியல் நிர்ணய சபையைக் கொண்டு தங்கள் அரசியல் அமைப்பைத் தாங்களே தயாரித்துக்கொள்ள இந்திய மக்களுக்குள்ள உரிமை பற்றியும் அத்தகைய தெளிவான ஓர் அறிக்கை பிறக்குமானுல், அதுவே மக்களின் மனோபாவத்திலே ஒரு புரட்சிகரமான மாறுதலை உண்டாக்கிவிடும். அதைக் கொண்டே நாம் நமது லட்சியத்தை அடைந்துவிட

முடியாது. ஆனால், அதன் மூலம் நமக்கு அபரிமிதமான பலம் ஏற்படும். மகா ஜனங்களெல்லாம் முன்னணிக்கு வந்துவிடுவார்கள்.

அரசியல் நிர்ணயசபையே, நம்மை யெல்லாம் பரிசோதிக்கும் உறைகல்லாகும். நம்மில் ஒவ்வொருவரும் எந்த நிலையில் இருக்கிறோம் என்பதை, அது வெளிக்காட்டுகிறது. பிரிட்டன் தனது ஏகாதிபத்திய முறையைக் கைவிட விரும்பாததால், அதை மறுக்கிறது. இந்திய மிதவாதிகள், முஸ்லிம் லீக், அல்லது பிறகோஷ்டியார்கள் அதை ஆட்சேபிப்பதன் காரணம், அவர்களுக்கு உண்மையான சுதந்தரத்தில் விருப்பம் இல்லாததேயாகும். புதுமையான ராஜ்யத்தைப் பற்றிய கற்பனையே அவர்களுக்கு இல்லை. கற்பனை இருந்தாலும், அதில் அவர்களுக்கு விருப்பமில்லை. இப்போதுள்ள நிலைமைகளை அவர்கள் எவ்வளவுதான் வெறுத்தாலும், புதிய சுதந்தர ராஜ்யத்தைவிட இந்த நிலைமைகளே மேல் என்று அவர்கள் நினைக்கிறார்கள். ஏனென்றால், புதிய சுதந்தர ராஜ்யத்தில், பொதுமக்கள் அல்லவா ஆக்கவும் அழிக்கவும் சக்தி பெற்றிருப்பார்கள்! ஆகையால்தான், வயது வந்தவருக்கெல்லாம் ஓட்டுரிமை வழங்குவதை, அவர்கள் ஆட்சேபிக்கிறார்கள். பெரும்பாலான மக்களாவது இந்த வேலையில் பங்கெடுத்துக்கொள்ளும்படி செய்வதைக்கூட அவர்கள் ஆட்சேபிக்கிறார்கள். அந்தஸ்து வாய்ந்த குறிப்பான சிலர் அடங்கிய சிறு சிறு கமிட்டிகளே போதும் என்று, அவர்கள் யோசனை கூறுகிறார்கள். அந்தச் சிறு கமிட்டிகள், பிரிட்டிஷ் சர்க்கார் கிழித்த கோட்டைத் தாண்டாமல் வெகு ஜாக்கிரதையாக நடந்துகொள்ளும். வகுப்புவாத பாத்தியங்களையும் எதிர்ப் பாத்தியங்களையும் பற்றி, மாளாத வாதம் நடத்திக்கொண் டிருக்கும்—இவைகள்

தாம், அந்தச் சிறு கமிட்டிகளின் முக்கிய வேலையாக இருக்கும்.

இந்திய சுதந்தரத்தைப் பற்றியும், நாம் நிர்மாணம் செய்ய விரும்பும் புதிய ராஜ்யத்தைப் பற்றியும், நாம் கொண்டிருக்கும் கருத்து இது அல்ல.

—மார்ச்சு 8, 1940

## 5

# வழிபிரியும் கட்டம்

இந்தியாவும் பிரிட்டனும் வழிபிரிய வேண்டிய கட்டம் வந்திருப்பதாகவும், இந்தியாவில் அப்படிப்பட்ட ஏதோ நிகழ்ச்சி நேர்ந்திருப்பதாகவும் சொல்வது சரியல்ல. ஏனென்றால், எதுவரையில் மேலாதிக்கம் செலுத்தும் ஏகாதிபத்திய அரசாக இங்கிலாந்தும், அதன் சித்தத்துக்கு அடிமைப்பட்ட நாடாக இந்தியாவும் இருந்து வருகின்றனவோ அதுவரையில் அவைகளின் வழிகளே வெவ்வேறானவை ; வெவ்வேறாகத்தான் இருந்து தீரும். இரு நாடுகளுக்கும் இருந்துவரும் அத்தகைய தொடர்பு, பலவந்தத்தையே அஸ்திவாரமாகக் கொண்டிருக்கும். பலவந்தம் இருக்கும்போது, இரண்டு நாடுகளும் நண்பர்களாய்க் கைகோத்துக்கொண்டு செல்லமுடியாது. மேலாதிக்கம் செலுத்தும் நாடு, மற்ற நாட்டுக்கு விலங்கிட்டு, அதை அதன் விருப்பத்துக்கு மாறாகப் பிடித்து இழுத்துக் கொண்டுதான் செல்லும்; அல்லது மற்ற நாடு அந்த விலங்கை முறித்தெறியும்.

ஆகையால், நம்முடைய வழிகள் வெவ்வேறு திசைகளிலே கிடக்கின்றன. ஓயாத போராட்டமும் விளைந்திருக்கிறது. அந்தப் போராட்டம் சில சமயம் மன உணர்ச்சிகளை வெளியிடும் வார்த்தைப் போராகவும், மற்றும் சில சமயம் கலகப் புரட்சியாகவும் நடைபெறுகிறது. 1857-ஆம் ஆண்டு அப்படி ரத்தம் சிந்தும் கலகம் ஒன்று நிகழ்ந்தது. அதை மகா கோரமான முறையில் ஆங்கிலேயர்கள்

அடக்கினார்கள். போராட்டம் தொடர்ந்து நடந்தது. மனக் கசப்போடும் இடைவிடாமலும் நடந்தது. ஆனால், மேலுக்கு அவ்வளவாகப் புலப்படவில்லை. அது தேசிய இயக்க ஸ்தாபனம் என்ற உருவம் எடுத்துக் கொண்டது. சில நாள் வரையில், தேசிய இயக்கக்காரர்கள் நயவார்த்தைகளைப் பேசிவந்தார்கள். அதன்பின்பு, அவர்கள் குரல் உக்கிரமாயிற்று. பொதுமக்களின் உண்மையான உணர்ச்சிகளைப் பிரதிபலிக்கத் தொடங்கியது. ஆதிக்க சர்க்காரை எதிர்த்து, மற்றொரு கலகப் புரட்சி உருவெடுத்தது. இது அமைதியான புரட்சி. இதிலே சகல பலாத்கார நெறிகளும் கைவிடப்பட்டன. ஆனால், முந்திய எந்தப் புரட்சியையும் விட, இது மிக அதிக வலிமை வாய்ந்தது; மிக விஸ்தாரமாகப் பரவியது. தாங்கள் நீண்ட காலமாய் அடிமைப்பட்டு, வறுமையில் ஆழ்ந்து, சுரண்டப்பட்டு வந்ததிலே, கோடிக்கணக்கான இந்திய மக்கள் சலித்துப் போனார்கள். அவர்களெல்லாம், பயத்தை உதறித் தள்ளினார்கள். மேலாதிக்கம் செலுத்தும் ஏகாதிபத்திய முறையை எதிர்த்து நின்றுகொண்டார்கள்; சுதந்தரம் கோரினார்கள்.

பல வெற்றி தோல்விகள் நிகழ்ந்தன. கோடிக்கணக்கான மக்களுக்கு மிகுந்த துன்பமும் துயரமும் நேர்ந்தன. ஆனால், அவர்கள் முன் வைத்தகாலைப் பின் வைக்கவில்லை. போராட்டம் பற்பல வழிகளிலே நடந்தது. இதற்கிடையிலே உலகம் தன்னைத்தானே அழித்துக் கொள்ளும் நாசப் படுகுழியில் போய் விழ விரைந்தது. இந்தியப் பிரச்னையை விசாலமான பகைப்புலத்திலே பொருத்திப் பார்க்கவேண்டி வந்தது; உலகத்தைச் சூழ்ந்திருக்கும் சங்கடங்களோடு சம்பந்தப்படுத்தி அதைக் கவனிக்கவேண்டியதாயிற்று. இவ்வாறாக, எங்கள் திருஷ்டி ஆழ்ந்து விரி

வடைந்தது. வருங்காலத்திலே என்ன நடக்கும் என்று நாங்கள் யோசித்துப் பார்த்தோம். அப்போதும் எங்கள் பிரச்னையின் மூலாதாரம் மாறவில்லை. அது இந்தியத் தேசீயத்துக்கும் பிரிட்டிஷ் ஏகாதிபத்திய முறைக்குமான விவகாரமாகவே தென்பட்டது. பரந்த உலகில் எங்கள் பங்கு சேவையைப் புரிய, இந்திய சுதந்தரமும் விடுதலையும் எங்களுக்கு முதல் தேவையாகும். அன்றியும், ஏகாதிபத்திய முறைக்குள் சிக்கிக்கொண்டபடியே அந்தப் பரந்த உலக அரங்கத்தில் போய், சுதந்தரத்தையும் ஜனநாயகத்தையும் பற்றி நாங்கள் பேசுவது வெறும் கேலிக்கூத்தாகும் என்று எங்களுக்குத் தோன்றியது.

பாஸிஸமும் நாஜிஸமும் எங்களுக்கு வேம்பாயிருந்தன. மத்திய ஐரோப்பாவில் நிகழ்ந்த கோரங்களெல்லாம் இந்தியரின் மனத்தில் பலத்த வெறுப்பை உண்டாக்கின. என்றாலும், இந்தியாவில் நாங்கள் கண்டுள்ள கோரங்களையெல்லாம் நினைவு கூர்ந்தோம். அவைகளை நாங்கள் எப்படி மறக்கமுடியும்? எங்கள் சொந்த ஜனங்கள் அன்றாடம் அவமதிக்கப் படுவதையும் சுரண்டப்படுவதையும் நாங்கள் கண்டோம். அவைகளை எங்கள் உள்ளத்தினுள்ளே உணர்ந்தோம். ஆனால், அதைப் புரிந்துகொள்ளும் ஞானமோ புத்திசாலித்தனமோ எங்களுக்கு இல்லாமல் போயிற்று. பாஸிஸமும் நாஜிஸமும் நிச்சயமாகக் கெட்டவை என்று புரிந்தது. ஏகாதிபத்திய முறையோ அவ்வளவு கெட்டதாக எங்களுக்குத் தோன்றவில்லை.

ஐரோப்பாவிலே யுத்தம் வந்தது. இந்தியப் பிரதிநிதிகளில் எவரையும் உபசாரத்துக்காகக் கூட ஒரு வார்த்தை கேட்கவில்லை. எவருக்கும் தகவலும் தெரிவிக்கவில்லை. ஆனால், இந்தியாவையும் யுத்தத்தில் சேர்ந்த நாடாக, பிரிட்டிஷ் சர்க்கார் அறிக்கை செய்துவிட்டது.

இதை நாங்கள் கண்டோம். காங்கிரஸை வேண்டுமானால், அதிகாரப் பொறுப்பற்ற ஸ்தாபனமாக அவர்கள் மதித்திருக்கலாம். ஆனால், மத்திய சட்டசபை இல்லையா? மாகாணச் சுயஆட்சி அனுபவிப்பதாகச் சொல்லப் படுகின்றனவே, அந்த மாகாண சர்க்கார்கள் இல்லையா? இவைகளில் எதற்கும் அவர்கள் தகவல் சொல்லவில்லை. எதையும் அவர்கள் அபிப்பிராயம் கேட்கவுமில்லை.

சுதந்தரத்தின் பெயரைச் சொல்லிக்கொண்டு, ஜன நாயகத்தின் புனிதத்தை வலியுறுத்தும் உரத்த கோஷங்கள் வானளாவ ஒலித்தன. நல்ல கோஷங்கள்தாம். ஆனால், முன்னே பல முறை இந்தக் கோஷங்களை நாங்கள் கேட்டிருக்கிறோம்; பின்னால் விளைந்த பலன்களையும் அனுபவித்திருக்கிறோம். இனி நாங்கள் எளிதிலே ஏமாற மாட்டோம். நாங்கள் ஜாக்கிரதைப்பட்டோம்; இரு மடங்கு ஜாக்கிரதை. ஏனென்றால், நாங்கள் திரும்பத் திரும்ப எச்சரித்திருந்தும், யுத்தத்தை எங்கள் மீது அவர்கள் சுமத்திய விதத்தைக் கண்டுதான் இருமடங்கு ஜாக்கிரதை. இந்தச் சுதந்தரமும் ஜனநாயகமும் எங்களுக்கும் உண்டா? அல்லது, அதிருஷ்டசாலிகளான ஐரோப்பிய மக்களுக்கும் அவர்கள் இனத்தாருக்கும் மட்டிலுமே அவைகள் உரிமையோ? சுதந்தரம், ஜன நாயகம் என்றால், ஏகாதிபத்திய முறை இங்கும் எங்கும் மாய்ந்தொழியுமா?

இதை நாங்கள் பிரிட்டிஷ் சர்க்காரிடம் விசாரித்தோம். நாங்கள் என்ன வழியைக் கடைப்பிடிப்பதென்று தீர்மானிப்பதற்காக, இந்த விஷயத்தை எங்களுக்கு விளக்கும்படி, அவர்களைக் கேட்டோம். எங்கள் கேள்விகள் பொருத்தமற்றவை, அதிகப் பிரசங்கித்தனமானவை என்று அவர்கள் எண்ணி விட்டார்கள். என்றாலும்,

அவர்கள் சில பதில்களை அளித்தார்கள். இந்தியாவில் உள்ள ஏகாதிபத்திய ஆட்சி அமைப்பை மாய்த்துவிட அவர்களுக்கு உத்தேசமில்லை. அவர்கள் சம்பந்தப்பட்ட மட்டில், அது சாத்தியமென்றே அவர்கள் நம்பவில்லை. ஜனங்களின் பிரதிநிதிகளுக்கு அதிகாரத்தை மாற்றித் தரும் யோசனையே அவர்களுக்கு இல்லை. இதையெல்லாம், அவர்களுடைய பதில்கள் போதிய அளவு தெளிவாய்ச் சுட்டிக் காட்டிவிட்டன. தேசியக் காங்கிரஸ் தனக்காக எதையும் கேட்கவில்லை. இந்திய சுதந்தரத்தையும், அரசியல் நிர்ணய சபையையும் பற்றிய அறிக்கை வேண்டுமென்றுதான் அது கேட்டது. அந்த அரசியல் நிர்ணய சபையை, ஜனங்களே தேர்ந்தெடுக்க வேண்டும். சுதந்தர இந்தியாவின் அரசியல் அமைப்பைத் தயாரிப்பதற்காகவே அந்தச் சபை. அப்படித் தயாரிக்கையில், சகல சிறுபான்மை உரிமைகளுக்கும், அது பூரணமான பாதுகாப்பு அளிக்கட்டும் என்றது காங்கிரஸ்.

இந்தியரின் அறிவிலும் உள்ளத்திலும் ஒரு போராட்டம் எழுந்தது. பாஸிஸம், நாஜிஸம் இரண்டையும் இந்தியர் கடுமையாய் வெறுத்தார்கள். அவைகள் ஜயிப்பதிலே இந்தியருக்கு விருப்பம் இல்லை. உலகத்திலே ஒரு புதிய ஏற்பாட்டை ஸ்தாபிக்கவும் உண்மையான சுதந்தரத்தைப் பாதுகாக்கவுமே இந்த யுத்தம் நடக்கிறது என்று இந்தியாவுக்குத் திருப்தி ஏற்படச் செய்ய வேண்டும். செய்தால், தன் முழுச் செல்வாக்கையும் பலத்தையும் எல்லாம், இந்த யுத்தத்திலே இந்தியா ஈடுபடுத்தும். ஆனால், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியவாதிகளுக்கும், எங்களுக்கும் நெடுநாள் பழக்கம். மிகப் பழமையான பழக்கம்; பல தலைமுறைகளாய்த் தொடர்பு. நாங்கள் ஒருவரை ஒருவர் அறிவோம்; ஒருவரிடம் ஒருவருக்குச்

சந்தேகம்; ஒருவரை ஒருவர் அடியோடு வெறுக்கிறோம். குரோதம், சுரண்டல், மனக் கசப்பு, நிறைவேறாத வாக்குத் தத்தங்கள், பிரிட்டிஷார் தூண்டிவிடும் சீரழிவான பிற்போக்கு இயக்கங்கள், இந்திய ஒருமையைச் சிதைக்கும் முயற்சிகள் இவையெல்லாம் நூற்றெண்பது வருஷங்களாய் நிகழ்ந்து வருகின்றன. இவைகளே நமக்குப் பகைப்புலமாயிருக்கின்றன. நாம் இந்தப் பிரம்மாண்டமான தடைகளைத் தாண்டுவதும், இவைகளால் நம்மிடம் வளர்ந்திருக்கும் மனமயக்கங்களை நீக்குவதும் எளிய காரியமல்ல. என்றாலும், இந்தக் காரியத்தை நாங்கள் செய்கிறோம் என்றோம். ஆனால், மக்களின் மனோபாவத்திலே ஓர் அதிர்ச்சியை உண்டாக்காவிட்டால், எங்களால் இவ்விஷயத்தில் ஒரு முயற்சிகூடச் செய்ய முடியாது. அந்த அதிர்ச்சி இன்பமான அதிர்ச்சியாக இருக்கவேண்டும். அத்தகைய அதிர்ச்சியால், இந்தியாவின் சூழ்நிலை திடீரென்று மாறிவிடும்; மக்களின் அச்சங்களும் மன மயக்கங்களும் எல்லாம் அகன்றுவிடும். இந்திய சுதந்தரத்தைப்பற்றிச் சந்தேகத்துக்கு இடமில்லாத ஓர் அறிக்கை செய்ய வேண்டும். அதோடுகூட, சர்க்கார் நிர்வாகத்தை ஜனங்களின் விருப்பப்படி நடத்துவதற்கான நடவடிக்கைகளையும் உடனே எடுத்துக்கொள்ளவேண்டும். இப்படிச் செய்தால் மட்டுமே, மேற்கண்ட அதிர்ச்சி உண்டாகும். இதைச் செய்தாலொழிய, இந்தியாவில் உள்ள எந்த மனிதனும் எந்தக் கோஷ்டியும், மனமொப்பி யுத்தத்திலே கலந்துகொள்ள முன்வரமாட்டார்கள்.

இந்தக் காலத்து யுத்தங்களில், மகாஜனங்களின் ஆதரவு அவசியமாக இருக்கிறது. எதேச்சாதிகார நாடுகளில்கூட, இடைவிடாத பிரசாரத்தின் மூலம், ஜனங்களைக் கிளப்பிவிடுகிறார்கள். பொது ஜனங்களின்

வெறுப்போ, அசட்டையோ சூழ்ந்திருக்கும் சூழ்நிலையில், ராணுவத்தை மாத்திரம் வைத்துக்கொண்டு எந்த யுத்தத்தையும் திறமையாக நடத்திவிட முடியாது. ஆகையால், இந்தியாவின் தற்காப்பு முஸ்தீப்பு அல்லது யுத்த முயற்சியில் இந்தியர் பங்கெடுத்துக்கொள்ளச் செய்ய வேண்டும் என்ற குறுகிய நோக்குடன் பார்த்தால்கூட, பொது ஜனங்களின் ஆதரவு பெற்ற பிரதிநிதித்துவ சர்க்கார் அவசியமாகும். ஏகாதிபத்திய முறையால், பொது ஜனங்களைப் பலவந்தம் செய்ய முடியும்; அவர்கள் ஆதரவையும் நல்லெண்ணத்தையும் சம்பாதிக்க முடியாது.

'இல்லை' என்ற பதிலை, வைஸ்ராயும் பிரிட்டிஷ் சர்க்காரும் எங்களுக்குச் சொல்லிவிட்டார்கள். எங்கள் வழி இன்னதுதான் என்று எங்களுக்குத் தெளிவாய்த் தோன்றியது. மாகாணங்களில் ஆட்சி புரிந்த காங்கிரஸ் சர்க்கார்கள் ராஜீநாமாச் செய்தன. சட்டசபை ரீதியான சர்க்கார்கள் அங்கெல்லாம் முடிவடைந்தன. ஏனென்றால், தாங்கள் எந்த மக்களின் பிரதிநிதிகளோ அந்த மக்களின் விருப்பத்துக்கு மாறாக, பிரிட்டிஷ் சர்க்காரின் தாக்கீதுக்குப் பணிய, அந்தச் சர்க்கார்கள் தயாரில்லை. முன் காலத்திலே அரசருக்கும் பார்லிமெண்டுக்கும் போராட்டம் நிகழ்ந்ததல்லவா? அதன் புதிய ரூபம் இது. வைஸ்ராயும் கவர்னரும் அரசரின் விசேஷாதிகாரத்தைக் குறிக்கும் பிரதிநிதிகள்; தேர்ந்தெடுக்கப்பட்ட எங்கள் மாகாணச் சட்ட சபைகள், மக்களின் விருப்பத்தைக் குறிக்கும் பிரதிநிதிகள். ஐரோப்பாவின் மேற்குப் பகுதியில், இந்தப் போராட்டம் பல நூற்றாண்டுகளுக்கு முன்னே நடந்துகொண்டிருந்தது. கடைசியில், பார்லிமெண்டின் அதிகாரமே ஸ்தாபிதமாயிற்று. இந்தப் போராட்டத்தினிடையே, இங்கிலாந்தில் ஒரு மன்னனின்

தலை போயிற்று. பிரான்ஸில் மற்றொரு மன்னனின் தலை போயிற்று. வெகு தூரத்திலே இருந்த மன்னரும் மந்திரிகளும் செலுத்திய அதிகாரத்தை, பெருமையும் சுதந்தர ஆர்வமும் படைத்த அமெரிக்க மக்கள் எதிர்த்தார்கள். நீண்ட போராட்டத்துக்குப் பின்பு, தங்கள் சொந்தச் சுதந்தரத்தை ஸ்தாபிதமும் செய்துகொண்டார்கள்.

ஆனால், இந்த இருபதாம் நூற்றாண்டில், அதுவும் ஏதோ புதிய உலக ஏற்பாடு ஒன்றை நிறுவப்போவதாக வாக்களிக்கப்படும் சமயத்தில், சுதந்தரத்தையும் ஜன நாயகத்தையும் ஆதரிக்கும் உரத்த கோஷங்கள் கிளம்பியுள்ள சமயத்தில், இந்தியாவிலே இது வரையிலும் மாகாணங்களில் இருந்த சட்டசபை ரீதியான பிரதிநிதித்துவ சர்க்கார்களுங்கூட நின்றுபோயின. வைஸ்ராயின் அதிகாரமே முடிவானதாயிருக்கிறது. அவருடைய இஷ்டப்படி, சட்டங்களைச் செய்யலாம்; தள்ளலாம். ஜனங்களுக்கு வரியெல்லாம் போடலாம். ஜனப் பிரதிநிதித்துவம் வாய்ந்த எந்தச் சபையையும் கேளாமலே, ஜனங்களை அவர் நிர்ப்பந்திக்கலாம்.

சட்டசபைகளில் மிகப் பெரும்பான்மையான அங்கத்தினர்களின் ஆதரவு தங்களுக்கிருந்தும், காங்கிரஸ் மந்திரிகள் ராஜீநாமாச் செய்துவிட்டார்கள் என்பது உண்மை. பிரிட்டிஷ் சர்க்காரின் கொள்கையைப் பின்பற்றி, வைஸ்ராய் போடும் கட்டளைகளை, காங்கிரஸ் மந்திரிகளால் ஒப்புக்கொள்ள முடியவில்லை. அதனாலேயே அவர்கள் ராஜீநாமாச் செய்தார்கள். ஆனால், சட்டசபைகள் மட்டும் அப்படியே இருக்கின்றன. வைஸ்ராயும் கவர்னர்களும் அவைகளைக் கலைத்துப் புதிய தேர்தல் நடத்தி யிருக்கலாம். ஆனால், அப்படிப் புதிய தேர்தல் நடத்தினால், மிக அபரிமிதமான பெரும்

பான்மை, ராஜீநாமாச் செய்த காங்கிரஸ் சர்க்கார்களுக்கே கிடைத்துவிடும். இதை வைஸ்ராயும் கவர்னர்களும் மிக நன்ருய் அறிவார்கள். வேறு எந்தக் கட்சி மந்திரி சபை அமைவதும் சாத்தியமல்ல. ஏனென்ருல், வேறு எதற்கும் பெரும்பான்மை அங்கத்தினர்களின் ஆதரவு கிடைக்காது. ஆகையால், ஒரே வழிதான் அவர்களுக்கு இருந்தது. புதிய தேர்தல் நடத்தாமலே மாகாணச் சட்டசபைகளைத் தாற்காலிகமாக நிறுத்தி வைத்தார்கள். வைஸ்ராயும் கவர்னர்களும் எதேச்சாதிகாரம் செலுத்தலானுர்கள். ஜனங்களும் ஜனப்பிரதிநிதி சபைகளும் ஒருபுறம்; அரசரின் பிரதிநிதிகள் மறுபுறம். இந்த இரு தரப்புக்கும் ஏற்பட்டிருக்கும் போராட்டமே இந்த விவகாரம் என்பது தெளிவாகும். ஒரு தரப்பாரை அமுக்கிவிடவேண்டும்; அல்லது அவர்கள் பணிந்து போக வேண்டும். ஜனப் பிரதிநிதி சபைகளை அமுக்கி விட்டார்கள். பார்லிமெண்டின் ஆதரவை நெவில் சேம்பர்லீன் பெற முடியவில்லை என்றும், அதனுல் பார்லிமெண்டை நிறுத்தி வைத்துவிட்டு அரசரே சட்டங்கள் பிறப்பித்து ஆளும்படி அரசருக்குச் சேம்பர்லீன் ஆலோசனை கூறுகிருர் என்றும் வைத்துக்கொள்வோம். அது எப்படியோ அப்படித்தான் இதுவும். அல்லது, ஜனுதிபதி ரூஸ்வெல்ட் இதே மாதிரி சங்கடத்தில் சிக்கியவராய், ஜனப்பிரதிநிதி சபையையும் செனேட் சபையையும் அலட்சியம் செய்துவிட்டு, தாமே சர்வாதிகாரியாய் அதிகாரம் செலுத்துவதாய் வைத்துக்கொள்வோம். அதுபோல்தான் இதுவும். எதேச்சாதிகாரம் பற்றியும் சர்வாதிகாரிகள் பற்றியும், பிரமாதமாய்க் கூச்சல் போடுகிருர்கள். எதேச்சாதிகாரத்தையும், சர்வாதிகாரிகளையும், இங்கிலாந்தின் தலைவர்கள், கடுமையான

பாஷையில் மிகவும் உரத்த குரல்பாய்ச்சிக் கண்டிக்கிறார்கள். என்றாலும், இந்தியாவில் இன்று பரிபூரண எதேச்சாதிகாரமும், சர்வாதிகாரிகளின் ஆட்சியுமே நடைபெறுகின்றன.

எங்கள் வழி தெளிவாயிருந்தது. எங்களில் பலருக்கு இதில் ஆத்திரம் மூண்டது. எங்கள் கொள்கையை ஜனங்களுக்கு விளக்கிச்சொன்ன குற்றத்துக்காக, எங்கள் சகாக்களில் பலர் சிறைபுகுந்தார்கள். இப்படியெல்லாம் இருந்துங்கூட, எங்களை நாங்களே அடக்கிக்கொண்டு நிதானமாயிருந்தோம். ஏனென்றால், இங்கிலாந்து சர்க்காரிலே, முற்போக்கான தொழிற் கட்சியார் சிலரும் இருக்கிறார்களே; இந்தக் கடும் சோதனையான நேரத்திலே, உயிர் குடிக்கும் தங்களுடைய ஏகாதிபத்திய முறையை, அந்தச் சர்க்கார் கைவிடமாட்டார்களா? தாங்கள் பறையடிக்கும் கொள்கைகளின்படி அவர்கள் நடக்கமாட்டார்களா? இப்படியெல்லாம், நாங்கள் நம்பினோம்; பின்னும் நம்பினோம். அதனால்தான், நாங்கள் தயங்கினோம். நாஜி ஆட்சி புரிவோருக்கு எந்த விதத்திலும் தைரியமூட்ட, நாங்கள் விரும்பவில்லை. ஐரோப்பாவிலும் வேறு இடங்களிலும் அவர்கள் மேலாதிக்கம் பெற்றுவிடுவார்களோ என்ற எண்ணமே எங்களுக்கு வேதனை தந்தது. அடிமை மக்களாக நாங்கள் பெற்றுள்ள அனுபவத்தினால், பிறருக்கு நாஜி ஆதிக்கம் எப்படி யிருக்கும் என்பதை, நாங்கள் நன்றாய் அறிந்திருந்தோம். நாஜிகளின் நிறபேதக் கொள்கைகளையும், பிற நிறத்தினரை அவர்கள் ஹிம்சிப்பதையும், வேறு எவர் சகித்தாலும் சரி; நாங்கள் சகிக்கமாட்டோம். ஹாலந்தையும் பெல்ஜியத்தையும் சூழ்ந்த பயங்கரத்தையும், பிரான்ஸுக்கு நேர்ந்த கடும் துயரத்தையும் கண்டு, நாங்கள் பரம துக்கம் அடைந்தோம். இங்கிலாந்தின் தலைக்குமேலே

தொங்கிக்கொண் டிருக்கும் அபாயத்தைக் கண்ட நாங்கள் அதன் சங்கடங்களை நாம் வேறே அதிகப்படுத்தக் கூடாது என்று எண்ணினோம். இங்கிலாந்தில் ஆட்சி புரியும் வகுப்பார் எங்களைக் கேவலமாய் நடத்துகிறார்கள். இங்கிலாந்தின் ஏகாதிபத்திய முறை எங்களை நசுக்கிவிட்டது. என்றாலும், தங்களுக்கு நேர்ந்துள்ள இடுக்கணையும் போர் அபாயத்தையும் தீரமாய் எதிர்த்து நிற்கும் இங்கிலாந்து மக்களிடம், எங்களுக்கு வன்மம் இல்லை. இங்கிலாந்து, இந்தியா இரண்டுக்குமே கௌரவமும் நன்மையுமான ஒரு சமரச வழியைக் கண்டுபிடிக்க, நாங்கள் பெரிதும் முயன்றோம். ராம்கட்டில் நடந்த சென்ற காங்கிரஸ் எங்களுக்கு விடுத்த கட்டளையையும் மீறி, புதிய திட்டங்களை நாங்கள் யோசனை கூறினோம். இந்தியாவின் தற்காப்பு முஸ்தீப்புக்கும், யுத்த முயற்சிக்கும் நாங்கள் உதவி புரிகிறோம் என்று வாக்களித்தோம். ஆனால், சுதந்தர மக்களாகவும் இந்தியாவின் கோடிக்கணக்கான ஜனங்களின் நல்லெண்ண ஒத்துழைப்பு இவைகளைப் பெற்றுமே நாங்கள் அவ்விதம் உதவமுடியும். அந்தச் சுதந்தரத்தை அங்கீகரித்து அறிக்கை செய்யவேண்டும். இந்தியாவின் ஒரு கட்சியைமட்டும் கொண்டதாக இல்லாமல், சகல முக்கியக் கட்சியார்களுக்கும் பிரதிநிதித்துவம் வாய்ந்த தாற்காலிகத் தேசிய சர்க்கார் ஒன்றையும் இந்தியாவில் அமைக்கவேண்டும். இந்தத் திட்டத்தின் மூலாதாரமான அடிப்படை என்னவென்றால், ஏகாதிபத்திய முறை போகவேண்டும் என்பதை அங்கீகரிப்பதுதான்.

'இல்லை' என்ற பதிலை, வைஸ்ராயும் பிரிட்டிஷ் சர்க்காரும் எங்களுக்கும் இந்தியாவுக்கும் முடிவாகச் சொல்லிவிட்டார்கள். பிரான்ஸ் விழப்போகும் தருணத்தில், சம்பிரதாயத்தை யெல்லாம் மீறி, இங்கிலாந்தும்

பிரான்ஸூம் இணைந்து ஒரு யூனியன் ஆகலாம் என்ற திட்டத்தைப் பிரிட்டிஷ் நிர்வாகிகள் யோசனை சொன்னார்கள். இது ஓர் அதிசயமான யோசனை. மிகவும் காலந் தாழ்த்து வந்தது. ஆனல், பிரிட்டிஷ் சர்க்கார் தங்கள் வழக்கமான சுவட்டை விட்டு வெளியேறிவிட்டார்கள் என்றும், அவசியம் ஏற்பட்டால் நிலைமைக்கு ஏற்ற பெரிய நடவடிக்கையையும் அவர்களால் கைக்கொள்ள முடியும் என்றும், இந்த யோசனை வெளிக்காட்டியது. ஆயினும், இந்தியாவில் அவர்களுக்கு இருப்பவை போன்ற சொந்த நலன்களை அடிப்படையிலே பாதிக்கக் கூடிய விஷயங்களில் மட்டும், அவர்கள் பழைய சுவட்டிலேயே உழலுகிறார்கள். யுத்த அபாயத்தால் ஏற்பட்ட பேரதிர்ச்சியுங் கூட, அவர்களை அந்தச் சுவட்டிலிருந்து கிளப்பவில்லை. ஏகாதிபத்திய முறையால், இந்தியாவில் அவர்களுக்கு ஒரு விசேஷ ஸ்தானம் கிடைத்திருக்கிறது. அதை அவர்கள் கைவிட்டால், இந்த யுத்தத்திலே அவர்களுக்கு ஒரு நன்மை ஏற்படுவது நிச்சயம் என்று தெரிந்தும், அந்த ஸ்தானத்தைக் கைவிட அவர்கள் தயாரில்லை. இன்னமும் தங்கள் ஏகாதிபத்தியம் பற்றியும் அதை வைத்துக் கொண்டே இருக்கத் தங்களுக்குள்ள ஆசைபற்றியுமே, ஆத்மதிருப்தியோடு அவர்கள் பேசிக்கொண் டிருக்கிறார்கள். ஏகாதிபத்தியம் என்ற வார்த்தை, அவர்களுக்கு மிகவும் இனிமையாக இருக்கலாம். நமக்கோ அது நமது அடிமைத்தனம், வீழ்ச்சி, வறுமை இவைகளின் சின்னமாகவே இருக்கிறது. இதை அவர்கள் மறந்துவிடுகிறார்கள்.

மீண்டும் சொல்கிறேன்: நாம் வழிபிரிய வேண்டிய கட்டம் புதிதாய் வந்திருப்பதாகச் சொல்வது சரியல்ல. ஏனென்றால், நம்முடைய வழிகள் என்றுமே ஒன்றாக

இருக்கவில்லை. ஆனால், நம் இருதரப்பாரின் மனசுகளையும் ஏதோ இரண்டோர் அல்ப பந்தங்கள் பிணைத்திருக்கின்றன. பிரிட்டிஷ் சர்க்கார் மேற்கண்ட அறிக்கையைச் செய்ய மறுப்பதால், இந்தப் பந்தங்களும் முடிவாக அறுபட்டுப் போகும்; நாம் இருதரப்பாரும் என்றேனும் ஒன்று சேர்ந்து முன்னேறுவோம் என்ற நம்பிக்கைக்குச் சிறிதும் இடமில்லாமல் போய்விடும். இது எனக்கு வருத்தமாயிருக்கிறது. ஏனென்றால், பிரிட்டிஷ் ஏகாதிபத்திய முறையிலும் சகல ஏகாதிபத்திய முறைகளிலுமே எனக்கு வெறுப்பு இருந்தாலுங்கூட, இங்கிலாந்திடம் எனக்கு மிக்க அன்பு உண்டு. இந்தியாவுக்கும் இங்கிலாந்துக்கும் இடையிலே சூட்சுமமான நேச பாந்தவ்யம் இருந்துவரவேண்டும் என்பதே என் ஆசை. இந்தியாவின் நன்மைக்காகவே, இந்திய சுதந்தரத்தை நான் வேண்டினேன் என்பது உண்மை ; ஆனால், இங்கிலாந்தின் நன்மைக்காகவுந்தான், அதை நான் வேண்டினேன். அந்த நம்பிக்கை சிதைந்து போயிற்று. வேறு விதமான வருங்காலத்தை, விதி நமக்குப் படைத்திருப்பதுபோல் தோன்றுகிறது. நாம் ஒத்துழைக்கக் கூடிய வழியைக் கண்முன்னே காணோம். நூறு வருஷமாக இருந்துவரும் குரோதமே நிலைக்கப்போகிறது. இனி வரும் போராட்டங்களில், அந்தக் குரோதம் வளரவும் போகிறது. பிளவு வந்துதான் தீரும். அது வரும்போது, நட்பு மிஞ்சாது ; குரோதமே மிஞ்சும்.

இதுவரையிலும் நாம் அமைதியாகவே இருந்து வருவதால், பிரிட்டிஷ் சர்க்காரின் கட்டளைகளுக்கு நாம் சாதுவாய்ப் பணிந்துவிடுவோம் என்று அவர்கள் நம்புகிறார்களாம். இவ்வாறு நான் கேள்விப்படுகிறேன். நம்மை நாமே அடக்கிக்கொண்டிருப்பதைக் கண்டு, நாம் எச் செயலுமே புரியச் சக்தியற்றவர்கள் என்று, அவர்கள்

எண்ணுவதாகத் தோன்றுகிறது. பலாத்காரம், குண்டு சொரியும் விமானங்கள், டாங்கிகள், ஆயுதம் தாங்கிய ராணுவம் இவைகளெல்லாம் நிறைந்த இந்த உலகத்தில், நாம் எவ்வளவு பலவீனர்கள்! நம்மைப்பற்றி என்ன கவலை? என்றாலும், ஆயுதம் தாங்கிய போர்கள் நடக்கும் இந்த உலகத்திலுங்கூட, மனித உணர்ச்சி என்ற ஒன்று உண்டு; தேச உணர்ச்சி என்ற ஒன்று உண்டு. அதற்கு அபகீர்த்தியில்லை; பலவீனமும் இல்லை. அதை அலட்சியம் செய்ய முடியாது. செய்தால், ஆபத்துத்தான்.

இந்திய அரசியலில் நெருங்கிய பழக்கமுள்ள நமக்கு, பிரிட்டிஷ் சர்க்காரின் பதிலை ஆராயவோ விளக்கவோ தேவையில்லை. இவ்விஷயத்தில் அவர்களைக் குறை சொல்லமுடியாது. போதிய அளவு தெளிவாகவும் சந்தேகத்துக்கு இடமில்லாமலுமே, அவர்கள் பதில் அளித்திருக்கிறார்கள். என்றாலும், பிறருக்கு ஒருவேளை அதன் அர்த்தம் விளங்காமலிருக்கலாம். அதன் தடபுடலான வார்த்தைகளிலே, அவர்கள் மயங்கிவிடலாம். ஏதோ பிரயோசனமான ஒரு திட்டத்தை அளிக்கப் பிரிட்டிஷ் சர்க்கார் முன்வந்திருப்பதாகவும், இந்திய மக்கள் இந்திய சர்க்காரில் ஏதோ அதிகாரம் பெறப் போவதாகவும், அவர்கள் எண்ணலாம்.

உத்தியோகஸ்தரல்லாத சில இந்தியரை, வைஸ்ராயின் நிர்வாக சபையில் அதிகப்படியாகச் சேர்த்துக் கொள்ளுவதாகவே, பிரிட்டிஷ் சர்க்கார் யோசனை சொல்லுகிறார்கள். அந்தச் சபை உண்மையான நிர்வாக சபையாகவோ மந்திரி சபையாகவோ இராது. உண்மையான அதிகாரம் வைஸ்ராயிடமே இருக்கும். அவர் தம்முடைய நிர்வாக சபை அங்கத்தினர்களிடம், எப்போதும் தமது அந்தரங்கத்தைச் சொல்லிக்கொண் டிருக்கமாட்டார்.

அங்கத்தினர்கள், தத்தம் இலாக்காக்களின் தலைவர்களாக இருப்பார்கள். அவரவருடைய பிரத்தியேக இலாக்காக்கள் சம்பந்தப்பட்ட மட்டிலுமே, வைஸ்ராய்க்கு அவர்கள் ஆலோசனை சொல்லுவார்கள். உண்மையைச் சொல்லப் போனால், பொறுப்பெல்லாம் வைஸ்ராயிடமே இருக்கும். இந்தியா மந்திரிக்கும் பிரிட்டிஷ் பார்லிமெண்டுக்குந்தான் அவர் ஜவாப்தாரியாக இருப்பார். சட்டபூர்வமாகவும் சம்பிரதாய ரீதியிலும் அரசியலமைப்பு மாறுதிருக்கும் வரையில், வைஸ்ராயின் நிர்வாக சபையில் யார் இருந்தால் என்ன? எவ்வளவு பேர் கூடினுல் என்ன? எல்லாம் ஒன்றுதான். அவர்களால் வைஸ்ராயின் அந்தஸ்திலோ, சக்தியிலோ, அதிகாரத்திலோ ஓர் இம்மியும் மாற்ற முடியாது. அவர்களுடைய வாத சாமர்த்தியத்தால், அவர் ஏதாவது மாறினுல்தான் உண்டு.

உத்தியோகஸ்தரல்லாத சிலரை வைஸ்ராயின் நிர்வாக சபையில் அதிகப்படியாகச் சேர்த்துக்கொள்வதனுல், இதையன்றி வேறே அடிப்படையான மாறுதல் எதுவும் ஏற்படாது. நிர்வாக சபையில், சர்க்காரின் நியமன அங்கத்தினர்களும் உத்தியோகஸ்தர்களுமே இன்னமும் பெரும்பான்மையாய் இருந்து வருவார்கள். அவர்களிடம் எத்தனையோ சிறப்புக்கள் இருக்கலாம். (ஆனுல், அவை வெளிப்படையாய்த் தெரியத்தான் காணும்.) என்ருலும், ஏகாதிபத்திய அதிகார வர்க்கத்தின் பரிபூரணப் பிரதிநிதிகளாகவே, அவர்கள் இருக்கிருர்கள். முற்றும் வைஸ்ராயையே, அவர்கள் சார்ந்திருக்கிருர்கள்; அவருக்கு இங்கிதமாகவே நடக்கிருர்கள். பொதுமக்களின் வாழ்வு, செயல், சிந்தனைகளிலிருந்து, அவர்களுக்கு அடியோடு தொடர்பு விட்டுப் போய்விட்டது. தங்கள் சொந்த உலகத்துக்குள்ளேயே, அவர்கள் வாழ்ந்துகொண்

டிருக்கிறார்கள். அவர்களுக்குள்ள திறமையெல்லாம், பழைய போலீஸ் ராஜ்யபாரம் நடத்துவதிலேதான் அடங்கி யிருக்கிறது. நவீன உலகமும் அதன் பிரச்னை களும், அவர்களுக்கு வெகு தூரம். இவைகள் அவர் களுக்குப் புரிவதே இல்லை. வேறு நாடுகளிலே மறைந்து போன ஓர் ஆட்சி முறையை இங்கே அவர்கள் நடத்திக் கொண் டிருக்கிறார்கள். இங்கேயும் அந்த முறை மறைந்தே தீரவேண்டும்.

மேலும், வைஸ்ராயின் நிர்வாக சபையில் சேர்த்துக் கொள்ளுவதாகச் சொல்லப்படும் 'இந்தியப் பிரதிநிதிகள்' என்போர் யாராய் இருக்கப் போகிறார்கள்? ஒன்றுக் கொன்று நேர் விரோதமான கோஷ்டிகளிலிருந்தே அவர் களைப் பொறுக்குவார்கள் என்று தோன்றுகிறது. அந்தக் கோஷ்டிகளில் சில, முற்றும் பிற்போக்கானவை. இந்தியாவின் முற்போக்குச் சக்திகளின் பிரதிநிதிகளாகக் கூட, அவர்கள் அனைவரும் இருக்கமாட்டார்கள். நிர்வாக சபையில் அவர்கள் ஒருவரை ஒருவர் பலவீனப்படுத்து வார்கள்; அல்லது, அதிகார வர்க்கத்தைப் பலப்படுத்தி விடுவார்கள். அவர்களை ஜனங்கள் தேர்ந்தெடுக்க மாட் டார்கள்; அவர்கள் யாருக்கும் பொறுப்புள்ளவர்களாய் இருக்கமாட்டார்கள். அவர்களுடைய தனிப்பட்ட ஹோதா வில், அவர்களை வைஸ்ராயே பொறுக்கி யெடுப்பார்.

எந்த விதமான தேசீய நோக்கில் பார்த்தாலும் சரி; ஜனங்களுக்கு எந்த அதிகாரமாவது மாற்றப்பட்டால் போதும் என்ற நோக்கில் பார்த்தாலும் சரி - இப்படி உதிரி யான இந்தியர் சிலரை வைஸ்ராயின் நிர்வாக சபையில் சேர்த்துக்கொள்வதனால், ஒரு லாபமும் இல்லை என்று வெள்ளிடையாய்த் தெரியும்.

இரண்டாவது திட்டம் ஒன்றையும் பிரிட்டிஷ் சர்க்

கார் யோசனை சொல்லியிருக்கிறார்கள். அதாவது யுத்த ஆலோசனை சபை என்ற ஒன்றையும் அவர்கள் அமைப்பார்களாம். அதில் உதிரியான பற்பல வகை மனிதர்கள் அங்கம் வகிப்பார்கள். பழம் பசலியைச் சேர்ந்த இந்திய சமஸ்தானப் பிரதிநிதிகள் சிலரும் அந்தச் சபையில் இருப்பார்கள். சபை கொஞ்ச காலத்துக்கு ஒரு தடவை கூடும். அதிகாரிகளின் புத்திமதியைக் கேட்டுக்கொள்ளுவதும், சேனைக்கு ஆள் சேர்க்கும் ஸார்ஜெண்டுகளாக வேலை பார்ப்பதும், அதுபோன்ற பிற அலுவல்களைப் புரிவதுமே, சபையோரின் உத்தியோகமாக இருக்கும் என்று தோன்றுகிறது. சபையோருக்கு எவ்வித நிர்வாக அதிகாரமோ, வேறு அதிகாரமோ இராது. சபை வெறும் வெளி ஆடம்பரச் சபையாகவே இருக்கும். வேறு பொருத்தமோ, பிராதான்யமோ, அதற்கு இராது.

இந்த இரண்டுந்தாம் தற்போதைக்கு அவர்கள் யோசனை சொல்லியுள்ள திட்டங்கள். உண்மையான எந்த அதிகாரத்தையோ, திட்டமான பொறுப்பையோ, இந்தியருக்கு மாற்றிவிட பிரிட்டிஷ் சர்க்காருக்கு உத்தேசம் இல்லை. இதை வைஸ்ராய் முற்றும் தெளிவாய்க் கூறிவிட்டார். மேலும், இந்தியா மந்திரி, ‘இந்திய தேசிய வாழ்க்கையின் முக்கியப் பகுதியினர்’ என்று குறிப்பிடும் போது, இந்தியாவில் விசேஷ உரிமைகள் படைத்த ஐரோப்பியரையும் சேர்த்துத்தான் தாம் குறிப்பிடுவதாகச் சொல்லிவிட்டார். இந்தியாவில் விசேஷ உரிமைகள் படைத்த பிரிட்டிஷ்காரர், பழம் பசலி இந்திய மன்னர்கள், பெரிய மிட்டாதார்கள், வகுப்புவாதிகள், பிற்போக்காளர்கள் இவர்களே முக்கியமாய் அடங்கியது தான், ஒருவேளை மிஸ்டர் ஏமெரியின் கற்பனையிலும் வைஸ்ராயின் கற்பனையிலும் உள்ள தேசிய இந்திய வாழ்க்

கையாக இருக்கும்போல் தோன்றுகிறது. அவர்களுடைய கருத்துப்படி, தேசத்தில் இந்த உரிமைகளைப் படைத்தவர்கள்தாம், நமது தேசிய வாழ்வின் பாவும் ஊடுமாவார்கள். இவர்களே சகலமான பாதுகாப்புகளும், பிரதிநிதித்துவமும் பெறத் தகுந்தவர்கள். ஏதோ ஒரு விதமாய் வாழ்க்கை நடத்திக்கொண்டு, உழைத்து, அநேக சமயம் பட்டினியிலும் உழன்றுகொண் டிருக்கிறார்களே, அந்த முப்பது அல்லது நாற்பது கோடி பொதுமக்களெல்லாம், வெறும் துச்சம்!

தற்போதைக்கு இவ்வளவுதான்; யுத்தம் முடியும் வரையில், இதுவே கதி. நாம் கனவு காணும் அற்புத வருங்காலம் இருக்கிறதே அது - நாம் காது செவிடுபடக் கேள்விப்படுகிறோமே புதிய சுதந்தர ஏற்பாடு அது - எப்படி? அதைப் பின்வருமாறு பிரிட்டிஷ் சர்க்கார் வர்ணிக்கிறார்கள். யுத்தம் முடிந்த பின்பு, 'இந்திய தேசிய வாழ்க்கையின் முக்கியப் பகுதியினருக்கெல்லாம் பிரதிநிதித்துவம் வாய்ந்த ஒரு சபை' அமைக்கப்படுமாம்; அது இந்தியாவின் புதிய அரசியல் அமைப்புக்கான திட்டத்தைத் தயாரிக்குமாம். மிஸ்டர் ஏமெரி, வைஸ்ராய் இவர்களின் அபிப்பிராயத்தில், இந்திய தேசிய வாழ்வின் பகுதியினர் எனப்படும் இவர்கள் யாவர் என்பதை, ஏற்கனவே நாம் கண்டுகொண்டோம். செல்வச் சீமான்கள் அடங்கிய சபை ஒன்று நமக்குக் கிடைக்கும். (அல்லது, இது அவர்களின் உத்தேசம்; விதியின் விளையாட்டு வேறாய் முடியலாம்.) மணிகள் தரித்த மகாராஜாக்கள், வார்க்கச்சை யணிந்த பட்டப் பிரபுக்கள், ஐரோப்பிய ஆலை முதலாளிகள், ஐரோப்பிய வர்த்தகர்கள், பெரிய மிட்டாதார்கள், ஜமீன்தார்கள், இந்திய ஆலை முதலாளிகள், ஏகாதிபத்திய அதிகார வர்க்கத்தின் பிரதிநிதிகள், இவர்களே யெல்

லாம் கொண்டிருக்கும் அந்தச் சபை. இவர்களோடு சில சாமான்ய நபர்களும் இருக்கக்கூடும். இவர்கள் அனைவரும் கூடி உட்கார்ந்து, இந்தியாவின் அரசியல் அமைப்பைத் தயாரிப்பார்கள். இவர்களுக்கு அநேகமாய் வைஸ்ராயே அக்கிராசனம் வகிக்கலாம். இந்தப் பிரகாரமாக, இந்தியா தன் சுய நிர்ணய உரிமையை அமல் செய்யும். இந்தச் சபையிலிருந்து பிறக்கும் அரசியல் அமைப்பு அழகான ரகமாய்த்தான் இருக்கும். விசேஷ உரிமை வாய்ந்த ஒவ்வொரு கோஷ்டியும், பழம்பசலி எச்சமான ஒவ்வொரு ஸ்தாபனமும், ஆளுக்கு ஒரு பூவாய்ச் சூடிக்கொண்டு போய்விடும். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியமும் பகைப்புலத்திலே இருந்தபடி இருக்கும். இவை எல்லாவற்றிற்கும் மேலாக, இந்தியத் தேசிய வாழ்வுக்கு, பிரிட்டிஷ் விசேஷ உரிமையாளர்கள் மிக்க அவசியமானவர்கள் அல்லவா? அவர்களைப் பாதுகாத்து, அவர்களுக்குரிய நியாயமான பங்கையும் அவர்களுக்கு அளிப்பார்கள். இதில் எல்லாருக்கும் திருப்தி ஏற்படவேண்டுமே; அதற்காக, 'குடியேற்ற நாட்டு அந்தஸ்து' என்று இதற்குப் பெயர் சூட்டிவிடுவார்கள்.

ஆனால், ஒரு விஷயத்தை மறக்க வேண்டாம். இந்தச் சபையுங்கூட, தன் இஷ்டப்படியெல்லாம் காரியம் செய்ய முடியாது. பிரிட்டிஷ் விசேஷ உரிமைகளைப் பாதுகாக்கும் உன்னதமான பொறுப்பு, பிரிட்டிஷ் சர்க்காருடையதாகும். என்ன நடந்தாலும் சரி; அந்தப் பொறுப்பை, பிரிட்டிஷ் சர்க்கார் கைவிட முடியாது. ஆகையால், இந்தச் சபை என்ன முடிவுகள் செய்தாலும் சரிதான்; அந்த முடிவுகள் ஒரு ஷரத்துக்கு உட்பட்டவையாகவே இருக்க வேண்டும். அதாவது, "இந்தியாவுடன் நீண்டகாலமாகப் பிரிட்டனுக்கு இருந்து வரும்

தொடர்பினால், பிரிட்டன்மீது சில கடமைகள் சுமந் திருக்கின்றன. அந்தக் கடமைகளின் விஷயத்தில், மாட் சிமை தாங்கிய மன்னர்பிரானின் சர்க்கார் தங்களுக்குள்ள பொறுப்பைக் கைவிட முடியாது. அந்தக் கடமைகளைச் சரிவர நிறைவேற்றுவதற்கு உட்பட்டே, சபை தன் முடிவுகளைச் செய்யவேண்டும்.

இதற்கிடையிலே, பிரதிநிதித்துவம் வாய்ந்த இந் தியர்கள், நட்பு முறையில் ஓர் ஒப்பந்தத்துக்கு வர, முயற்சிகள் செய்யவேண்டும் என்றும், ஒரு யோசனை யைப் பிரிட்டிஷ் சர்க்கார் கூறுகிறார்கள். யுத்தத்துக்குப் பின்னாலே ஏற்படப்போகிற பிரதிநிதித்துவ சபை எந்த ரூபம் எடுக்க வேண்டும்? அரசியல் அமைப்பின் கொள் கைகள் என்ன? ஸ்தூலமாக அதன் அம்சங்கள் என்னவா யிருக்க வேண்டும்? இந்த விஷயங்களைப் பற்றித்தான், அந்த இந்தியர்கள் ஒப்பந்தத்துக்கு வர முயல வேண் டும். அந்தரங்க சுத்தியோடும் அனுபவ ரீதியிலும் நடக் கும் அப்படிப்பட்ட எந்த முயற்சியையும், பிரிட்டிஷ் சர்க்கார் வரவேற்பார்களாம். இந்தப் பிரதிநிதித்துவம் வாய்ந்த இந்தியர்கள், யாராக இருக்கவேண்டும் என்று சொல்ல வேண்டுமோ? மேலே விளக்கியிருக்கும் இந்தியத் தேசீய வாழ்வின் முக்கியப் பகுதியார்களின் பிரதிநிதி களாய்த்தான் இருக்க வேண்டும்.

நம்மில் சிலர், நம்மைச் சூழ்ந்திருக்கும் அறியாமை இருளால், இந்தச் சுதந்தர ராகத்தை அங்கீகரியாதுபோனால் அல்லது இந்தச் சித்திரத்தைக் கற்பனை செய்யாது போனால், சந்தேகமின்றி, அது நம்முடைய துரதிருஷ் டமேயாகும். மாறுதலும் புரட்சியும் நடந்துகொண் டிருக் கும் இந்த நாளிலே, உலகெங்கும் ஏகாதிபத்தியங்கள் மறைந்து வரும் இந்த நாளிலே, பழைய அமைப்புக்க

ளெல்லாம் இடிந்து விழும் இந்த நாளிலே, இந்திய மக்களுக்கு இந்தத் திட்டத்தை ஒரு பிரிட்டிஷ் சர்க்கார் அளிக்கத் துணிகிறார்களே! இதென்ன ஆச்சரியம் என்று சில சமயம் நாம் அதிசயிப்போமானால், அது நமது மௌட்டீகத்தையும் வெகுளித்தனத்தையுந்தான் காட்டும். ஏகாதிபத்திய முறைகள், தங்கள் அதிகாரத்தைத் தாமாகத் துறப்பதில்லை. இதை நாம் அறிந்திருக்க வேண்டும். அதிகாரத்தை விடாமல் பிடித்துக்கொண்டிருப்பது பரம முட்டாள்தனம் என்று நன்றாய்த் தெரியும்போது கூட, அவைகள் அதை விடுவதில்லை. ஆனால், பிரிட்டிஷ் தொழிற்கட்சித் தலைவர்கள் இருக்கிறார்களே, சுதந்தரத்தையும் சோஷலிஸத்தையும் தாங்கி நிற்கும் அந்த வீரர்களும்கூட, இந்தியாவுக்குப் பிரிட்டன் அளிக்க முன் வந்திருக்கும் இந்தத் 'திட்டத்'துக்குக் கூட்டுப் பொறுப்பு வகிக்கிறார்கள்! இதைக் கண்டு மட்டில், நமது வெகுளித்தனத்தால், நாம் சிறிது ஆச்சரியப்படாதிருக்க முடியவில்லை. ஆனால், உண்மையில் இது அவர்கள் நமக்கு அளிக்க முன்வந்திருக்கும் ஒரு திட்டமல்ல. அவர்கள் செய்துள்ள ஒரு முடிவு இது. அந்த முடிவை அவர்கள் அறிக்கை செய்திருக்கிறார்கள். நமக்கு இஷ்டம் இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி; நம்மீது இதைச் சுமத்த, அவர்கள் உத்தேசம் கொண்டிருக்கிறார்கள்.

காங்கிரஸ் மற்றொரு வழியை யோசனை சொல்லத் துணிந்தது: வயது வந்தவருக்கெல்லாம் ஓட்டுரிமை அளிப்பதன் மூலம் தேர்ந்தெடுக்கப்படும் ஓர் அரசியல் நிர்ணய சபையைக் கொண்டு இந்திய அரசியல் அமைப்பைத் தயாரிக்க வேண்டும் என்பதுதான் அந்த யோசனை. இது ஜனநாயக ரீதியானவழி. ஒவ்வொரு நபருக்கும் இது சமமான முக்கியத்துவம் அளிக்கிறது. இப்படி இருப்

பதே, இதன் துரதிருஷ்டமாகும். வைஸ்ராயும் இந்தியா மந்திரியும் கருத்தில் கொண்ட "இந்தியத் தேசீய வாழ்வின் முக்கியப் பகுதியினர்கள்" இந்த வழியிலே நடக்கும் தேர்தலில் வெற்றி பெறுவது சற்றுக் கஷ்டந்தான். ஜன நாயக ரீதியில் நடக்கும் தேர்தல்களில், பிரிட்டிஷ் அல்லது இந்திய விசேஷ உரிமையாளர்களுக்கு எப்போதுமே நியாயம் கிடைப்பதில்லை.

வைஸ்ராய் மேலும் பின் வருமாறு சொல்லியுள்ளார்: "இந்தியாவின் அமைதியையும் க்ஷேமத்தையும் பாதுகாக்கும் பொறுப்புக்கள், தற்போது பிரிட்டிஷ் சர்க்காருக்கு இருந்துவருகின்றன. இந்தியத் தேசீய வாழ்வில் சக்திமிக்க பெரும்பான்மையான பகுதியினர் நேரிடையாய் ஆட்சேபிக்கும் எந்த முறையான சர்க்காரிடமும், அந்தப் பொறுப்புக்களைப் பிரிட்டிஷ் சர்க்கார் மாற்றிவிட முடியாது. அன்றியும், அத்தகைய பகுதியினரை, அத்தகைய இந்திய சர்க்காருக்குப் பணிந்து நடக்கும்படி பலவந்தம் செய்யவும் பிரிட்டிஷ் சர்க்கார் சம்மதிக்க மாட்டார்கள்."

இந்தக் கூற்றைக் கொஞ்சம் கூர்ந்து கவனிக்கவேண்டும். இந்தியாவில் எந்த முறையான சர்க்காரை அமைக்க உத்தேசித்தாலும் சரிதான். உதிரியான பற்பல கோஷ்டிகளும் பற்பல உரிமையாளர்களும், அதை ஆட்சேபித்துக் கொண்டுதான் இருப்பார்கள். இது இயற்கை. இந்தச் சகல கோஷ்டிகளும் சகல உரிமையாளர்களும் நாற்பது கோடி மக்களும் சேர்ந்து ஏகமனதாய் ஒப்புக்கொள்ளும் ஓர் அரசியல் முறையை வகுப்பது சாத்தியமே அல்ல. விவசாயிகளுக்கு நன்மையான என்ன சட்டங்கள் செய்தாலும் சரி, மிராசுதாருக்கும் குடியானவருக்கும் இடையே இயற்கையாக உள்ள போராட்டங்களே, அவை சமாளித்தாகவேண்டும். தொழிலாளருக்கு நன்மையான என்ன

சட்டங்கள் செய்தாலும் சரி ; அவற்றை ஆலே முதலாளி கள் வெறுப்போடுதான் நோக்குவார்கள். இந்தியாவில் தொழில் செய்யும் ஆலே முதலாளிகளுக்குள்ளேயே, விசேஷ உரிமைகள் படைத்த பிரிட்டிஷ் முதலாளிகளுக் கும் இந்திய ஆலே முதலாளிகளுக்கும் இடையில் ஒரு போராட்டம் தொடர்ந்து நடந்துவருகிறது. இந்திய ஆலேத் தொழில்கள் இப்போதுதான் முளைத்துக் கிளம்பிவருகின் றன. இவை வளர்ந்து விரிந்துவிட்டால் பிரிட்டிஷ் விசேஷ உரிமையாளர்களுக்கு நஷ்டம் உண்டாகுமே என்பதற்காக, இந்த இந்திய ஆலேத் தொழில்களை வளரவிடாமல் வேண்டுமென்றே தடுக்கிறார்கள். இவ்வாறாக, இந்தியா வின் தேசீய வாழ்வு இன்று அமைந்துள்ள நிலேயில், அந்த வாழ்வு பூராவிலுமே பற்பல உரிமை நலன்களுக்கும் இடை யில் போராட்டங்கள் நடந்தவண்ணம் இருக்கின்றன. ஏனென்றால், ஒன்றுக்கொன்று முரண்பட்ட பற்பல உரி மைகள் இங்கே இருந்துவருகின்றன. வர்க்கப் பிரிவினை களே இல்லாத ஒரு சமுதாயத்தை அமைக்க நம்மில் சிலர் விரும்புகிறோம். இறுதியிலே அத்தகைய சமுதாயம் அமைந்துதான் தீரும் என்பதிலும் எனக்குச் சந்தேக மில்லே. அதற்கிடையிலே, இந்தப் போராட்டங்களே யெல் லாம் தீர்ப்பதற்கு, பலாத்காரமும் பலவந்தமும் இல்லாத ஒரே வழி, ஜனநாயக ரீதியான வழியேயாகும். அரசியல் துறையிலோ பொருளாதாரத் துறையிலோ மாறுதல் வேண்டுமென்று மிகப் பெரும்பான்மையான மக்கள் விரும்பும்போதுகூட, அந்த மாறுதலே எந்தக் கோஷ்டி யாவது தடை செய்துகொண்டு நிற்குமானல், ராஜ்யமே சீரழிந்துபோகும் ; உள்நாட்டுப் போரும் நிகழக்கூடும்.

அரசியல் துறையிலோ பொருளாதாரத் துறையிலோ, பெரும்படியான மாறுதல்கள் எவற்றையும் செய்ய

முடியாது என்றே, பிரிட்டிஷ் சர்க்கார் அறிக்கைக்கு அர்த்த மாகும். ஏனென்றால், அப்படிப்பட்ட மாறுதல்களை ஏதாவதொரு கோஷ்டி ஆட்சேபிப்பது நிச்சயம். அந்த வேலையைச் செய்யத் தேவையான பிற்போக்குக் கோஷ்டி கள் இந்தியாவிலேயே இருக்கின்றன. இந்தியக் கோஷ்டி கள் எவையும் ஆட்சேபிக்காவிட்டாலும், விசேஷ உரிமை கள் படைத்த பிரிட்டிஷார் அந்த வேலையைச் செய்வார் கள். ஆகையினால், தற்போதுள்ள நிலைமையே பெரும் பாலும் உள்ளபடி இருந்துவரும். அதனால், பிரிட்டிஷ் ஏகாதிபத்திய முறைக்குத்தான் பெருத்த லாபமாகும். தற்போதுள்ள ஏற்பாட்டைச் சாசுவதப் படுத்தவே, இந்தியாவைப் பிரிட்டிஷ் விசேஷ உரிமையாளர்களுக்குப் பத்திரப்படுத்தி வைக்கவே, இது வழியாகும்.

எந்தக் கோஷ்டியையேனும் பலவந்தம் செய்யும்படி பிரிட்டிஷ் சர்க்காரை நாம் கேட்டுக்கொள்ளுவோம் என்ற கருத்தே, சுத்த அபத்தமாகும். பிற்போக்காளர்களையும் வகுப்புவாதிகளையும் தவிர, வேறே யாரும் ஒருபோதும் இப்படிக் குறிப்பிட்டதே இல்லை. பிற்போக்காளர்களும் வகுப்புவாதிகளும்தாம், முற்போக்குச் சக்திகளைப் பிரிட் டிஷ் சர்க்கார் பலவந்தம் செய்யவேண்டும் என்று விரும்பு கிறார்கள். பிரிட்டிஷ் சர்க்கார் தற்போது செய்துவரும் சகல பலவந்தத்தையும் கைவிடவேண்டும் என்றே நாம் சொல்லுகிறோம். உண்மையைச் சொன்னால், பிரிட்டிஷ் சர்க்கார் இந்தியாவைவிட்டே வெளியேற வேண்டும் என்று நாம் கேட்கிறோம். அப்போதுதான், இந்தியா வின் பற்பல பகுதியார்களும் தங்களுக்குள்ளேயே ஓர் ஒப்பந்தத்துக்கு வர வழி தேடத் தேவையான நிலைமை ஏற்படும். ஏனென்றால், அப்படி அவர்கள் ஒப்பந்தத்துக்கு வரவில்லையானால், உள்நாட்டு யுத்தம் மூண்டுவிடும். பிரிட்

டிஷ் சர்க்கார் எதுவரையில் இங்கே இருந்து வருகிறதோ அதுவரையில், அது ஒருவருக்கு விரோதமாக ஒருவரைக் கிளப்பி விட்டுக்கொண் டிருக்கும்; தங்கள் தேசத்தின் சொந்தச் சகோதரர்களுக்கு விரோதமாக, தன் தயவை நாடும்படியும், சிலருடைய மனத்தில் அது ஆசை எழுப்பிக் கொண்டிருக்கும்.

தாங்கள் எந்த ஒரு முக்கியமான கோஷ்டியையும் பலவந்தம் செய்யப் போவதில்லை யென்றும், அது விரும் பாத அரசியல் முறை ஒன்றை அதன்மீது சுமத்தப் போவதில்லை என்றும், பிரிட்டிஷ் சர்க்கார் சொல்லுகிறார் கள். இதற்கு மாற்று என்ன? குறிப்பிட்ட அந்த அர சியல் முறையை விரும்பும் இதர கோஷ்டிகளை யெல்லாம் அவர்கள் நிச்சயமாகப் பலவந்தம் செய்வார்கள். இந்தியா வில் பிரிட்டிஷ் சர்க்கார் இதுவரையில் செய்துகொண் டிருந்த வேலை என்ன? இன்று செய்யும் வேலைதான் என்ன? இந்திய மக்கள் அனைவரையுமே, சகல கோஷ்டி களையுமே, பலவந்தம் செய்து, தங்கள் பிடியையும் விசேஷ ஸ்தானத்தையும் பாதுகாத்துக் கொள்வதே, அவர் கள் வேலையாக இருந்துவருகிறது. பிரிட்டிஷ் கைத் தொழில்களுக்குச் சாதகமாக இந்தியக் கைத்தொழில்களை அமுக்குவது அவர்கள் வேலை; இந்திய மக்களைப் பல வந்தப்படுத்துவதையே முக்கியக் கடமையாகக் கொண்ட ஆக்கிரமிப்பு ராணுவத்தை நிர்வகித்து வருவது அவர்கள் வேலை; சுதேச சமஸ்தானப் பிரஜைகளைப் பலவந்தப்படுத்தி இந்திய மன்னர்களுக்குப் பணிந்து கிடக்கச் செய்வது அவர்கள் வேலை. பிரிட்டிஷ் சர்க்கார் பலவந்தம் செய்ய விரும்பவில்லை என்று சொல்லுவதைக் கேட்க, விசித்திரமாக இருக்கிறது. இந்தியாவில் அவர்கள் பலவந்தம் செய்வதை யன்றி, வேறே என்ன செய்துகொண் டிருக்கிறார்கள்?

அது கிடக்கட்டும். ஒரு முக்கியமான கோஷ்டியார், குறிப்பிட்டதோர் அரசியல் முறையை விரும்புகிறுர்களா இல்லேயா என்பதைத்தான் எப்படிச் சொல்வது? சாதாரணமாக, அந்தக் கோஷ்டியார் ஒட்டுச் செய்யவேண்டும்; இதர கோஷ்டியார்களும் ஒட்டுச் செய்யவேண்டும். பற்பல கோஷ்டியார்களின் உணர்ச்சிகளும் நோக்கங்களும் எப்படியிருக்கின்றன என்று அறிவது அப்போது சாத்தியமாகும். அவர்கள் பரஸ்பரம் சம்மதித்து ஓர் ஏற்பாட்டைச் செய்து கொள்ளலாம். எல்லாருக்கும் பொதுவான ஓர் ஒப்பந்தத்துக்கு வர, அவர்கள் முயலலாம். துரதிருஷ்ட வசமாக, அவர்கள் அப்படி ஓர் ஒப்பந்தத்துக்கு வராவிட்டால், அவர்களுடைய வேற்றுமையை, பாரபட்சமற்ற மத்தியஸ்தம் போன்ற ஜனநாயக ரீதியான வழிகளால் தீர்த்துக் கொள்ளலாம்.

எந்த முன்னேற்றத்தையும் பெரும்படியான எந்த மாறுதலேயும் தடைசெய்துகொண் டிருக்க, கன அருமையாகப் பயன்படக்கூடியது பிரிட்டிஷாரின் திட்டம். எது எப்படியானுலும் சரி. பிரிட்டிஷ் உரிமையாளர்கள், கட்டாயம் வழிமறைத்துக் கொள்ளுவார்கள். உண்மையைச் சொல்லப்போனுல், பிரிட்டிஷ் சர்க்கார் இன்னும் ஒரு படி மேலே போய்விட்டார்கள். என்ன நடந்தாலும் சரி, இந்தப் பிரிட்டிஷ் உரிமையாளர்களேப் பாதுகாக்கத் தங்களுக்குள்ள பொறுப்புக்களேத் தாங்கள் கைவிட முடியாதென்று, அவர்கள் கூறியிருக்கிறுர்கள். என்ன நடந்தாலும் சரி; இந்தப் பிரிட்டிஷாரின் உரிமைகள் மட்டில் அப்படியே இருந்துவரும். ஆகவே, என்ன நிகழ்ந்தாலும் சரி; இந்தியாவில் பிரிட்டிஷாரின் பொருளாதார ஆதிக்கமும் கைத்தொழில் ஆதிக்கமும் நிலேயாயிருக்கும். ஆனுல், நாம் விரும்புவதோ, இந்த ஆதிக்கங்களிலிருந்து தப்பித்

துக் கொள்ளவேண்டு மென்பதையே. இதில் நாம் வெற்றி பெற்றாலன்றி, எவ்வித முன்னேற்றமும் இராது. இந்தியாவின் கொடிய வறுமையும் குறையாது. மற்ற விஷயமெல்லாம் அடுத்தபடிதான்.

குடியேற்ற நாட்டு அந்தஸ்து என்ற சித்திரத்தைக் காட்டி, நம்மை மயக்கப் பார்க்கிறார்கள். அந்தக் குடியேற்ற நாட்டுஅந்தஸ்தின் மகிமைகளை யெல்லாம், தமது அறிக்கை யிலே, வைஸ்ராய் நமக்கு மிகவும் அந்தரங்கமாக விளக்குகிறார். என்றாலும், நம்மில் பெரும்பாலோரை, இந்தச் சித்திரம் கவரவில்லை.

பெரும்பான்மையான எந்தப் பகுதியாராவது ஓர் அரசியல் முறையை அங்கீகரிக்கா விட்டால், அவர்களைப் பலவந்தம் செய்யமாட்டோம் என்று வைஸ்ராய் தமது அறிக்கையில் குறிப்பிட்டிருக்கிறாரே; இது முக்கியமாக மத ரீதியான சிறுபான்மை வகுப்புக்களுக்கே பிரயோக மாகும் என்று சொல்லலாம். அத்தகைய பலவந்தம் கூடா தென்று நாமும் நிச்சயமாக ஒப்புக்கொள்ளுகிறோம். பிரிட்டிஷ் சர்க்கார் எக்காரணம் பற்றியும் பலவந்தம் புரிய லாகாது. மற்றவர்களும்தான் பலவந்தம் புரியலாகாது. ஆனால், பலவந்தம் என்பது எங்கே வந்தது? யார் அதைக் குறிப்பிட்டார்கள்?

காங்கிரஸுக்கோ வேறு எந்தக் கட்சிக்கோ அல்லது மதரீதியான எந்தக் கோஷ்டிக்கோ அதிகாரத்தைக் கொடுக்க வேண்டுமென்று, காங்கிரஸின் திட்டம் சொல்லவில்லை. இந்திய மக்கள் அனைவருக்குமே அதிகாரத்தைக் கொடுக்க வேண்டும் என்றுதான் காங்கிரஸ் கேட்டது. இந்திய மக்கள் தாங்கள் விரும்புவதை ஜனநாயக முறையில் தீர்மானித்துக் கொள்ளவேண்டும் என்றே காங்கிரஸ் விரும்பியது. சகல சிறுபான்மை வகுப்புக்களின் உரிமை

களேயும் பாதுகாக்கத் தனக்குள்ள விருப்பத்தால், காங்கிரஸ் இன்னும் ஒரு படி மேலேகூடப் போயிற்று. தனித் தொகுதிகள் வேண்டும் என்று விரும்பும் சிறுபான்மை வகுப்புக்களுக்கு, அவ்வாறே தனித் தொகுதிகள் வழங்க, காங்கிரஸ் சம்மதித்தது. சிறுபான்மை வகுப்பு உரிமைகள் சம்பந்தப்பட்ட விஷயங்களே, பெரும்பாலோருடைய ஓட்டைக் கொண்டு தீர்மானிக்கலாகாது என்றும், காங்கிரஸ் ஒப்புக்கொண்டது. அப்படிப்பட்ட விஷயங்களே, பரஸ்பர ஒப்பந்தத்தின் மூலமே தீர்த்துக் கொள்ளவேண்டும் என்றும், எந்த விஷயம் குறித்தாவது துரதிருஷ்டவசமாக அவ்வித ஒப்பந்தம் சாத்தியப்படாவிட்டால், பாரபட்சமற்ற பஞ்சாயத்து மூலம் அதைத் தீர்த்துக்கொள்ள வேண்டும் என்றும் காங்கிரஸ் சொல்லியது. சிறுபான்மை வகுப்புக்களேப் பாதுகாக்க இதைவிட அதிக விரிவாகவும் திறமையாகவும் வேறு என்ன வழி இருக்க முடியும் என்றே தெரியவில்லே. ஜனநாயகம் என்ற பாசாங்கையெல்லாம் உதறித் தள்ளிவிட்டு, சிறுபான்மை வகுப்புக்களே சர்வாதிகாரம் செலுத்தும்படி வேண்டுமானல் விட்டுவிடலாம்.

இந்தியாவில் உள்ள முஸ்லிம்கள் சம்பந்தப்பட்டமட்டில், பெயரளவில்தான் அவர்கள் சிறுபான்மையினர். எண்ணிக்கையில் அவர்கள் ஏராளமாயிருக்கிருர்கள். வேறு வழிகளிலும் அவர்கள் வலுவுள்ளவர்களாக இருக்கிருர்கள். ஹிந்துக்களே எப்படி அவர்களுடைய இஷ்டத்துக்கு விரோதமாகப் பலவந்தம் செய்ய முடியாதோ அதேபோல்தான், முஸ்லிம்களேயும் அவர்களுடைய இஷ்டத்துக்கு விரோதமாகப் பலவந்தம் செய்ய முடியாது என்பது தெளிவு. கட்டுப்பாடான கோஷ்டிகளாக, ஹிந்துக்களும் முஸ்லிம்களும் ஒற்றுமைப்படா

விட்டால், அது இந்தியாவின் துர்ப்பாக்கியமேயாகும். அதன் விளைவு என்ன ஆகும் என்று யாரும் சொல்ல முடியாது. ஆனால், அரசியல் விஷயங்களிலும் பொருளாதார விஷயங்களிலும், மக்கள் மத ரீதியான கோஷ்டிகள் என்ற முறையில் செயல் புரிவதில்லை. அந்த விஷயங்களில் ஏற்படும் பிரிவினைகள் வேறு விதமானவை.

சிறுபான்மை வகுப்புக்களின் பாதுகாப்பு என்ற பிரச்னையை, ஹிந்துக்களின் நன்மைக்காகவோ முஸ்லிம்களின் நன்மைக்காகவோ பிரிட்டிஷார் கிளப்பவில்லை. வேறு கோஷ்டியார்களின் நன்மைக்காகவே கிளப்பியிருக்கிறார்கள். ஓர் இந்தியன்-அவன் ஹிந்து, முஸ்லிம், சீக்கியன், கிருஸ்தவன், வேறெந்த மதத்தைச் சேர்ந்தவனாயிருந்தாலும் சரி-தன் தேச சகோதரர்களிட மிருந்தே தனக்குப் பாதுகாப்பு வேண்டுமென்று ஓர் அந்நிய சர்க்காரைக் கேட்பான் என்றால், அது எனக்கு ஆச்சரியமாய் இருக்கிறது. உண்மையைச் சொல்லப் போனால், அவர்களில் எவரோ ஒரு சிலரைத் தவிர, மற்றவர் அப்படிப் பாதுகாப்புக் கேட்கவில்லை. அந்த ஒரு சிலரும் மதம் காரணமாகப் பாதுகாப்புக் கேட்கவில்லை; தாங்கள் விசேஷ உரிமைகளைப் படைத்திருப்பது காரணமாகவே கேட்கிறார்கள்.

இந்த விஷயத்தை, நாம் தெளிவாய்த் தெரிந்து கொள்ள வேண்டும். இந்த வகுப்புப் பிரச்னை என்பது, அடிப்படையிலே, விசேஷ உரிமை படைத்தவர்கள் கோரும் பாதுகாப்புப் பற்றியதே யாகும். மதம் என்பது அதை மறைக்க எப்போதும் மிக்க உபயோகமாயிருந்து வரும் ஒரு மேல் போர்வை. பழம் பசலியைச் சேர்ந்த சலுகைகளையும் விசேஷ உரிமைகளையும் படைத்தோர், மாறுதலுக்கு 'அஞ்சுகிறார்கள். பிரிட்டிஷ் ஏகாதிபத்திய

முறைக்கு வால்பிடிக்கிறார்கள். பிரிட்டிஷ் சர்க்காரோ, வகுப்பு வாதத்தைக் கண்டு, பேரானந்தம் கொள்ளுகிறது. சுதந்தரம், ஜனநாயகம், அல்லது பெரும்படியான வேறு எந்த மாறுதலையும் நமக்கு மறுப்பதற்கும், இந்தியாவில் தங்கள் அதிகாரத்தையும் சலுகைகளையும் விடாமல் பிடித்துக்கொண் டிருப்பதற்கும், இந்த வகுப்பு வாதத்தை, பிரிட்டிஷ் சர்க்கார் உபயோகித்துக் கொள்ளுகிறது. இந்தியாவில் வகுப்புவாதம் இருந்து வருவதற்கு இதுதான் காரணம் ; இது தான் நியாயம். இந்திய மன்னர் களைப் பிரிட்டனின் ஐந்தாம் படையினர் என்று, சில நாளைக்கு முன்பு யாரோ வர்ணித்தார்கள். அது சரியான வர்ணனை. வகுப்புவாதிகளையும், அவர்களுக்கு வக் காலத்து வாங்குவோரையும், இந்த ஐந்தாம் படையிலே தான் சேர்க்க வேண்டும். ஆகையால், வகுப்புவாதிகளும் இந்திய மன்னர்களும் கூட்டுச் சேர்ந்துகொள்வதும், அவர்கள் ஒருவருக் கொருவர் ஒத்துழைப்பதும், ஆச்சரிய மல்ல. அந்த இரு கோஷ்டியார்களுக்கும் பொதுவான ஒரு நோக்கம் இருக்கிறது. விசேஷ உரிமைகளைப் படைத் தோர் செழிப்பதற்காக, இந்தியச் சுதந்தரத்தைத் தடை செய்வதுதான் அந்த நோக்கமாகும்.

வகுப்புவாதத்துக்கு மூல காரணம் என்ன என்று கேட்டால், அதற்கு இதுதான் சமாதானம். என்றாலும், இப்படிச் சுலபமாய் விளக்கம் செய்வதனால் மட்டும், வகுப்பு வாதத்தைத் தீர்த்துவிட முடியாது. வேறு பற்பல அம்சங்களையும் கவனிக்கவேண்டும். மகாஜனங்களிலும் பலர் வகுப்பு வாதத்துக்கு ஆட்பட்டிருக்கிறார்கள். விசேஷ உரிமைகளோ, பிரிட்டிஷ் ஏகாதிபத்திய முறையிடம் அன்போ, அவர்களுக்கு இல்லை என்பது முற்றும் உண்மை. ஆயினும், அவர்கள் எப்படி வகுப்புவாதத்துக்கு ஆளாகி

ருர்கள்? தங்கள் சொந்த நலன்களுக்கே கேடாக அடிக் கடி அவர்கள் நடந்துகொள்ளுகிருர்களே; அது எப்படி? இதை நாம் அறிந்துகொள்ள வேண்டுமானல், ஜெர்மன் மகாஜனங்களை ஹிட்லர் எப்படி ஆட்டிவைத் தார் என்பதைக் கவனிக்கவேண்டும். இந்த உதாரணம் பூரணமானதல்ல; என்றாலும், ஓரளவு உதவியாக இருக்கும். ஜனங்களுக்குப் பிரியமாக இருக்கத்தக்க சூத்திரங்களைக் கோஷித்தால், அவர்கள் தம்மை மறந்து போகிருர்கள். பின்பு அவர்களுக்கு முற்றும் மாறுபட்ட வேறு காரி யங்களுக்கு அவர்கள் பயன்படுத்தப் பெறுகிருர்கள். இந் திய வகுப்பு வாதிகள் அனுஷ்டித்துவரும் தந்திரத்தில் சமீப காலத்தில் ஏற்பட்டுள்ள மாறுதல்களுக்கும், நாஜிகள் அனுஷ்டித்து வந்த முறைகளுக்கும் இடையிலே, அதிசய மான ஒற்றுமை காணப்படுகிறது.

சர்க்கார் உத்தியோகங்களிலும் சட்டசபை ஸ்தானங் களிலும் குறிப்பிட்ட ஒரு பங்கு வேண்டும் என்ற கோரிக் கையைச் சொல்லிக்கொண்டு, இந்தியாவில் வகுப்புவாதம் தோன்றியது. இப்போதோ, தேசியத்துக்கும் ஜனநாயகத் துக்கும் விரோதமான இயக்கமாக, அது வளர்ந்துவிட் டது. இந்தியாவையே துண்டுபோடவேண்டும் என்றும், வகுப்புவாதிகள் கோருகிருர்கள். வெகுகாலம் வரையிலும், வகுப்பு வாதிகளுக்கு, நிர்மாண ரீதியிலோ வேறு வகை யிலோ, எவ்விதத் திட்டமும் இல்லை. திட்டுவது, துராகிரு தம் செய்வது, எல்லாரையும் பழிப்பது இவைகளைக் கொண்டே, அவர்கள் வாழ்ந்தார்கள். நமது பொது ஜன சேவை வாழ்க்கையை, அவர்கள் எவ்வளவு ஆபாசப் படுத்தி விட்டார்கள்! மதிப்பரியதென்று தாங்கள் சென்ற காலத்தில் எண்ணி வந்த தனித்தொகுதி முறையால் பயனில்லை என்று, வகுப்புவாதிகள் கண்டுகொண்டார்கள்.

தாங்கள் பின்பற்றிவந்த பகைமை, பிரிவினை இந்த வழிகளின் நிவர்த்தியற்ற முடிவாக, இந்தியாவையே துண்டு போடு என்ற மிதமிஞ்சிய கோரிக்கைவரையில் அவர்கள் போய்விட்டார்கள். மதரீதியான கோஷ்டிகளே அரசியல் சமூகம் ஆகின்றன என்பது பழம் பசலிச் சித்தாந்தம். ஐரோப்பாவில் முன்னேறிவந்த தேசியத்துக்கு முன்னே இந்தச் சித்தாந்தம் விழுந்துவிட்டது. இப்படி விழுந்து போன சித்தாந்தத்தை, இங்கே வகுப்புவாதிகள் மீண்டும் உயிர்ப்பித்திருக்கிறார்கள். கிருஸ்தவ மதத்தினர்களுக்கும் இஸ்லாம் மதத்தினர்களுக்கும் இடையிலே நடந்த சமய யுத்தங்கள் போன்ற ஒரு கருத்தும் (பிரிட்டிஷாரின் தூண்டுதல் பெற்று என்று சொல்லப்படுகிறது) திடீரென்று இங்கே தோன்றியுள்ளது. இப்படி நம்மைப் பின்னாலே பிடித்துத் தள்ளுவது மகா விசித்திரமாயிருக்கிறது. இதனால், யார் சுகம் அடைந்தாலும் சரி; யார் கஷ்டப்பட்டாலும் சரி, பிரிட்டிஷ் ஏகாதிபத்திய முறைக்கு மட்டில் முற்றும் லாபமே யாகும்.

இந்திய சரித்திரத்தின் பூர்வ காலத்திலும் இடைக் காலத்திலும்கூட, இந்தச் சித்தாந்தம் மேல்நாட்டு ரீதியில் இங்கே அனுஷ்டிக்கப்படவில்லை. அயல் மதங்களை இந்தியர்கள் வரவேற்று, அவைகளுக்கு இடமும் கொடுத்தார்கள். கி. பி. முதல் நூற்றாண்டில், கிருஸ்தவர்கள் இங்கே வந்து குடியேறினார்கள். யூதர்களுக்கு இந்தியாவில் இடங்கிடைத்தது. முஸ்லிம்களையும் இந்தியர்கள் வரவேற்றார்கள். முஸ்லிம்களுடைய படையெடுப்பினால் ராஜீயப் போராட்டங்கள் நேரும் வரையில், முஸ்லிம்கள் தங்கள் மதத்தைப் பரப்பவும் இங்கேயே குடியேறவும், இந்தியர்கள் இடங்கொடுத்தார்கள். பார்சிகள் வந்தார்கள். அவர்களையும் இந்தியா ஏற்றுக்கொண்

டது. புதிதாய் வந்த முஸ்லிம்களையும் ஹிந்துக்களையும் பிறரையும் கொண்ட ஒரே ராஜ்யத்தை நிர்மாணம் செய்ய வேண்டுமென்று, பிறகாலத்திய முஸ்லிம் மன்னர்கள் எண்ணினார்கள். மகா அக்பர் இதற்கு அஸ்திவாரம் கோலினார். புதிய கலாசார அம்சங்களை யெல்லாம் ஜீர்ணம் செய்துகொண்டு, பொதுவான கலாசார மொன்று, முக்கியமாக வட இந்தியாவில், மெல்ல மெல்ல உருவாயிற்று.

ஆனால், இப்போது நம்மை அக்பர் காலத்துக்கும் பின்னால் போகச் சொல்கிறார்கள். இது சரித்திரப் போக்கையே தலை கீழாய்ப் புரட்டிவிடும் காரியமாகும்; பழம் பசலி ரீதியில் சிந்திக்கும் சிந்தனையாகும்.

தேசியக் கொள்கை போய், சர்வதேசக் கொள்கை வந்துகொண்டிருக்கும் காலத்தில், தேசியக் கொள்கையையும் விடக் குறுகிய ஒரு கொள்கையை எடுத்து ஓதுகிறார்கள். நம்மை ஆளும் பிரிட்டிஷ்காரர்கள் இதற்கு ஆதரவும் பாதுகாப்பும் அளிக்கிறார்கள். உண்மையான சர்வதேச சமஷ்டி ஒன்றை அமைக்க, உலகம் இருளிலே வழி தடவிக்கொண் டிருக்கும் காலத்தில், இந்தியாவைப் பல் வேறு பகுதிகளாகத் துண்டு போடவேண்டும் என்ற யோசனை கிளம்பியிருக்கிறது.

துருக்கி, எகிப்து, இராக்கு, சிரியா, பாரசீகம் ஆகிய முஸ்லிம் நாடுகளெல்லாம், வெகு காலத்துக்கு முன்பே இந்தப் பழம்பசலிச் சித்தாந்தத்தை ஒதுக்கித் தள்ளி விட்டன. தீவிரமான தேசியத்தை அவைகள் கடைப்பிடித் திருக்கின்றன. தங்கள் புராதனமான கலாசாரத்திலே பெருமையும் கொள்ளுகின்றன. இஸ்லாம் தங்கள் நாட்டுக்கு வருவதற்கு முந்திய நாட்களிலிருந்தே, தங்கள் கலாசாரத்துக்குத் தூண்டுதல் பெறக்கூட, அந்த முஸ்

லிம் நாடுகளில் சில வேண்டுமென்றே முயல்கின்றன. சீன முஸ்லிம்கள், தங்கள் சீனத்துக் கலாசாரத்திலே பெருமை கொள்ளுகிறார்கள்; சீனாவின் சுதந்தரத்துக்காகப் போராடுகிறார்கள். இதுதான் சரித்திரம் போகிற பாதை. உண்மையில், இந்தப் பாதை கூட ஒரு முடிவுக்கு வந்து விட்டது. இன்று உலகத்திலே ஒரு மகத்தான புரட்சி நிகழ்ந்துகொண் டிருக்கிறது. அந்தப் புரட்சி மற்றொரு பாதையை வகுக்கப் போகிறது. அது தேசிய சுதந்தரத்தையும், இப்போதையும் விட நியாயமான பொருளாதார ஏற்பாடொன்றையும் அஸ்திவாரமாகக் கொண்ட ஒரு சர்வ தேச சமஷ்டிக்கு வழியாயிருக்கும். அதிலே சலுகைகளும் விசேஷ உரிமைகளும் தொலைந்துபோகும்.

இந்தியாவின் லட்சியமும் அதுவேயாகும். தான் ஐக்கியமான, சுதந்தரமான ஜனநாயக நாடாக இருந்து கொண்டு, உலக சமஷ்டியில் சேர்ந்து, பிற சுதந்தர நாடுகளுடன் நெருங்கிய தோழமை கொள்ளவேண்டும் என்பதே அந்த லட்சியம். நாம் சுதந்தரம் வேண்டுகிறோம். ஆனால், குறுகிய, பிறர் சம்பந்தமே இல்லாத, பழைய ரகமான சுதந்தரம் அல்ல நாம் வேண்டுவது. தனித் தனியே இருந்துகொண்டு ஒன்றுடன் ஒன்று யுத்தம் புரிந்து வரும் தேசிய ராஜ்யங்களின் காலம் முடியவேண்டும் என்றே நாம் கருதுகிறோம்.

நாம் வேண்டுவது சுதந்தரமே; குடியேற்ற நாட்டு அந்தஸ்தையோ வேறு எந்த அந்தஸ்தையோ அல்ல. குடியேற்ற நாட்டு அந்தஸ்து என்ற கருத்து, சென்ற கால சரித்திரத்தைச் சேர்ந்ததாகும். வருங்காலத்தில் அதற்கு இடம் இல்லை. சிந்தனா சக்தியுள்ள எந்த மனிதனும் இதை அறிவான். இந்த யுத்தத்தின் விளைவுகள் என்னவானாலும் சரி தான்; குடியேற்ற நாட்டு அந்தஸ்து என்ற கருத்து, இந்த

யுத்தத்துக்குப் பின்னே உயிர்த்திருக்க முடியாது. அது உயிர்த்திருக்கிறதோ இல்லையோ, எப்படியானாலும் சரி; எங்களுக்கு அது வேண்டியதே இல்லை. எங்கள் மீது மேலாதிக்கம் செலுத்தி, எங்களைச் சுரண்டி வந்த ஒரு கோஷ்டி நாடுகளுடன் எங்களைப் பிணைத்துக்கொள்ள, நாங்கள் விரும்பவில்லை. எந்த ஏகாதிபத்தியத்தின் சில பகுதிகள் எங்களைத் தொழும்பர்களைப்போல் நடத்துகின்றனவோ, எதன் சில பகுதிகளில் கொடிய நிற வேற்றுமை தாண்டவமாடுகிறதோ, அந்த ஏகாதிபத்தியத்துக்குள்ளே நாங்கள் இருக்க மாட்டோம். லண்டன் நகரம் எங்கள் மீது செலுத்திவரும் நிதி மேலாதிக்கத்திலிருந்து, நாங்கள் வெட்டிக்கொள்ள விரும்புகிறோம். எந்த விதமான அதிகாரங்களையும் ஒதுக்காத, எந்த விதமான விலக்குகளும் இல்லாத பரிபூர்ண சுதந்தரத்தையே நாங்கள் விரும்புகிறோம். ஆனால், சர்வதேச சமஷ்டி ஒன்றை அமைப்பதற்காக அல்லது புதிய உலக ஏற்பாடு ஒன்றை ஸ்தாபிப்பதற்காக, மற்ற நாடுகளோடு கூடி, நாங்களாகச் சில அதிகாரங்களை ஒதுக்கிக் கொடுக்கவும் சில விலக்குகளைச் செய்யவும் சம்மதிப்போம். இந்தப் புதிய உலக ஏற்பாடு அல்லது சர்வ தேச சமஷ்டி சமீபகாலத்திலே தோன்றவில்லையானால், எங்கள் அண்டை நாடுகளான சீனா, பர்மா, இலங்கை, ஆப்கானிஸ்தானம், பாரசீகம் ஆகியவைகளோடு நெருங்கிய உறவு கொள்ளும் ஒரு சமஷ்டியில் நாங்கள் சேர விரும்புவோம். கஷ்டநஷ்டங்களுக்கும் அபாயங்களுக்கும் துணிய, நாங்கள் தயாராக இருக்கிறோம். பிரிட்டிஷாரின் சேனையும் கடற்படையும் எங்களை ஏதோ பாதுகாப்பதாகச் சொல்லப் படுகிறதே, இந்தப் பாதுகாப்பு எங்களுக்கு வேண்டாம். நாங்களே எப்படியோ தத்தளித்து நிமிர்ந்துகொள்ளுகிறோம்.

சென்ற காலம் எங்களுக்குப் படிப்பினை புகட்டி இரா

விட்டால்கூட, தற்கால அனுபவமே எங்களை இந்த முடிவான தீர்மானத்துக்கு வரச் செய்திருக்கும். ஏனென்றால், யுத்தமும் அபாயமும் சூழ்ந்திருக்கும் தற்காலத்திலும்கூட, பிரிட்டிஷ் ஏகாதிபத்திய முறை எங்கள் மக்களை நடத்தும் தோரணையில் மாறுதலைக் காணோம். பிரிட்டிஷ் ஏகாதிபத்திய முறையிடம் பாதுகாப்புப் பெற விரும்புவோர், அது போகிற வழியிலே போகட்டும்; நாங்கள் எங்கள் வழியிலே போகிறோம்.

—அலஹாபாது. ஆகஸ்டு 10, 1940.

## வானொலிச் செய்தி

**பண்டித ஜவாஹர்லால் நேரு, முதல் முதலாக, இந்தியத் தேசீய இடைக்கால சர்க்காரின் தலைவராக 1946-ஆம் ௵ செப்டம்பர் ௴ 2௳ தம் சகாக்களோடு பதவி ஏற்றார். 8-ஆம் தேதி, டில்லி அகில இந்திய ரேடியோவில், தேசத்துக்கும் உலக நாடுகளுக்கும் செய்தி அளிக்கும் முறையில் ஒரு பிரசங்கம் செய்தார். அந்தப் பிரசங்கத்தின் மொழி பெயர்ப்பை, ரேடியோ நிலையத்தாரின் அனுமதியுடன் கீழே தந்திருக்கிறோம்.**

நண்பர்களே! தோழர்களே! ஜே ஹிந்த்! ஆறு தினங்களுக்கு முன்பு நானும் என்னுடைய சகாக்களும் இந்திய சர்க்காரின் உயர்ந்த பதவிகளில் அமர்ந்தோம். இந்தப் புராதனமான நாட்டில் ஒரு புதிய சர்க்கார் ஏற்பட்டிருக்கிறது. இடைக்கால அல்லது தற்காலிக சர்க்கார் என்று இதைச் சொல்லுகிறோம். இந்தியாவின் பூரண சுதந்தரத்துக்கு இது முதல் படி. இந்தியாவின் ஒவ்வொரு மூலை முடுக்கிலிருந்தும், உலகம் முழுவதிலிருந்தும், ஆயிரக் கணக்கான வாழ்த்துச் செய்திகள் எங்களுக்கு வந்திருக்கின்றன. என்றாலும், சரித்திர பூர்வமான இந்தச் சம்பவத்தைக் கொண்டாடும்படி, நம் மக்களை நாங்கள் கேட்டுக் கொள்ளவில்லை. அதற்குப் பதிலாக, மக்களின் பரவசத்தைக் கட்டுப்படுத்தி வைக்கும்படிகூட, நாங்கள் கேட்டுக்கொண்டோம். ஏனென்றால், இன்னமும் நாம் நம் லட்சியத்தை அடையும் பாதையில் போய்க் கொண்டிருக்கிறோமே யல்லாமல், அந்த லட்சியத்தை அடைந்து விட

வில்லை. இதை நம் மக்கள் உணரவேண்டும் என்று நாங்கள் விரும்பினோம். வழியில் இன்னும் எத்தனையோ இன்னல்களும் தடைகளும் இருக்கின்றன. ஆகையால், ஜனங்கள் நினைக்கிறபடி அந்த லட்சியத்தை அடைவது அவ்வளவு சுலபமாக இல்லாமலும் இருக்கலாம். எனவே, இந்தச் சமயத்தில், நாம் எவ்விதப் பலவீனமோ ஆத்ம திருப்தியோ காட்டினால், அது நமது லட்சியத்துக்கே தீமையாக முடியும்.

கல்கத்தாவில் நடந்த அக்கிரமமான சம்பவத்தால், எங்கள் மனம் அதிக வேதனை அடைந்திருக்கிறது. சகோதரன் மீது சகோதரன் முட்டாள்தனமாகப் பகைமை கொண்டிருப்பதே எங்கள் மன வேதனைக்குக் காரணம். நாம் சுதந்தரத்தை அடைய விரும்பி அதைப் பெறுவதற்காகப் பல தலைமுறைகளாக எவ்வளவோ பாடுபட்டுக் கஷ்டங்களையும் அனுபவித்து வந்திருக்கிறோம். அந்தச் சுதந்தரம் இந்தியர் எல்லோருக்கும் உரியதே யல்லாமல், ஒரு கோஷ்டியினருக்கோ ஒரு மதத்தினருக்கு மாத்திரமோ உரியதல்ல. வாழ்க்கைக்குப் பெருமையும் பொருளும் தரும் சகல விஷயங்களிலும் சந்தர்ப்பங்களிலும் எல்லா மக்களுக்கும் சம பங்கு இருக்கக் கூடிய கூட்டுறவான ஓர் ஐக்கிய ஆட்சியை அமைக்கவே, நாங்கள் நோக்கங் கொண்டிருக்கிறோம். அப்படியிருக்க, ஒருவர் மீது ஒருவருக்கு ஏன் இந்தப் பகைமையும், பயமும், சந்தேகமும்?

நான் இன்று உங்களுக்கு வருங்காலம் குறித்த எந்தப் பெரிய கொள்கையைப் பற்றியும் வேலைத் திட்டத்தைப் பற்றியும் சொல்லப் போவதில்லை. அப்படிச் சொல்லுவதற்குக் கொஞ்ச நாள் போக வேண்டும். நீங்கள் எங்கள்மீது சொரிந்துள்ள நிறைந்த அன்புக்கும் வாஞ்சைக்

கும் நன்றி தெரிவிக்கவே, நான் இன்று விரும்புகிறேன். அந்த வாஞ்சையும் ஒத்துழைப்பு உணர்ச்சியும் என்றுமே அவசியமாகும். ஆனால், நாங்கள் சமாளிக்க வேண்டிய தாயிருக்கும் எங்கள் முன்னுள்ள கஷ்டமான இந்த நாட்களில், அந்த வாஞ்சையும் ஒத்துழைப்பும் மிகவும் தேவையாகும். ஒரு நண்பர் எனக்குக் கீழ்க்கண்ட செய்தியை அனுப்பியிருக்கிறார்:

"சர்க்கார் என்ற கப்பலின் முதல் தலைவரே! எந்தப் புயலையும் சமாளிக்கும் ஆற்றல் உங்களுக்கு இருப்பதாக! யாத்திரை வெற்றி பெறுக!"

இது மிகவும் உத்ஸாகத்தை அளிக்கும் செய்திதான். ஆனால், சமாளித்து ஆகவேண்டிய புயல்கள் நம் முன்னால் எவ்வளவோ இருக்கின்றன. நமது சர்க்காராகிய கப்பலும் பழையது; பளு நிறைந்தது; மந்தகதி கொண்டது. துரிதமான மாறுதல்கள் நிகழும் இந்தக் காலத்துக்கே ஏலாதது. இந்தக் கப்பலைப் போட்டுவிட்டு மற்றொன்றைப் புதிதாகக்கட்டியாக வேண்டும். ஆனால், கப்பல் எவ்வளவுதான் பழையதாக இருந்தாலும், அதன் மாலுமி எவ்வளவோ கிழவனாக இருந்தாலும், மனமுவந்து உதவி செய்யக் கோடிக் கணக்கான உள்ளங்களும் கைகளும் தயாராக இருக்கின்றன. ஆகையால், புயலைச் சமாளித்து எதிர்காலத்தைத் தைரியமாக வரவேற்கும் நம்பிக்கை எங்களுக்கு உண்டாகிறது.

அந்த எதிர்காலம் இப்போதே உருவாகிக் கொண்டு வருகிறது. இந்தியா நமது அருமையான புராதன நாடு. இந்தப் புராதன நாடு, மீண்டும் குழப்பமும் துயரமும் தன்னைச் சூழ்ந்திருக்கக் காண்கிறது. தீரமான செயல் புரி

யத் தயாராக இருக்கும் பிரகாசமான கண்களுடன், இந்தியா மறுபடியும் இளமை அடைந்திருக்கிறது; தன் லட்சியத்திலும் தன்னிடமுமே நம்பிக்கை கொண்டிருக்கிறது. இந்தியா அநேக வருஷகாலமாகத் தனக்குள் தானே குறுகி அடைபட்டுக் கிடந்து விட்டது; குருட்டு யோசனையில் மூழ்கி இருந்து விட்டது. இன்றோ பரந்த உலகத்தை அது நிமிர்ந்து பார்க்கிறது. உலகத்தில் இன்னும் சச்சரவுகளும் யுத்த எண்ணங்களுமே அதிகமாக இருந்தபோதிலும், தான் உலக மக்களுடன் சிநேக பாவத்தோடு இருக்கத் தயாராக இருப்பதாக, இந்தியா தன் கையை நீட்டுகிறது.

இந்த இடைக்கால சர்க்காரானது ஒரு பெரிய திட்டத்தின் ஒரு பகுதியேயாகும். அந்தத் திட்டத்தில் அரசியல் நிர்ணய சபை அமைப்பும் அடங்கியிருக்கிறது. சுதந்தரமான, சுயேச்சையான இந்தியாவுக்கு வேண்டிய அரசியலை அமைப்பதற்காக, சீக்கிரத்தில் அந்த அரசியல் நிர்ணய சபை கூடும். சீக்கிரத்தில் பூரண சுதந்தரம் ஏற்படும் என்ற இந்த நம்பிக்கையின் பேரிலேயே, நாங்கள் இந்தச் சர்க்காரை ஏற்றிருக்கிறோம். நம் உள்நாட்டுக் காரியங்களிலும் வெளிநாட்டு உறவுகளிலும் நடை முறையில் அந்தச் சுதந்தரத்தைப் பெறும் வகையில் நடப்பதே எங்கள் நோக்கம். மற்றொரு தேசத்துக்கு அடிமைப் பட்ட ஒரு நாடு என்ற முறையில் இல்லாமல், ஒரு சுதந்தர நாடு என்ற வகையிலே நமக்கென்று தனிக் கொள்கையுடன் சர்வ தேச மகாநாடுகளில் முழுப்பங்கையும் நாங்கள் எடுத்துக் கொள்ளுவோம். உலக சமாதானத்தையும் சுதந்தரத்தையும் வளர்ப்பதற்கு மற்றத் தேசங்களோடு நெருங்கிய தொடர்பை வளர்த்துக்கொண்டு அவைகளுடன் நாங்கள் ஒத்துழைப்போம்.

ஒரு நாடு மற்றொரு நாட்டுக்கு எதிராகப் பலம் திரட்டும் சூழ்ச்சியினாலேயே இதற்கு முன்னால் யுத்தங்களெல்லாம் மூண்டிருக்கின்றன. திரும்பவும் அதே போக்கே இன்னும் பெரிய அனர்த்தங்களை உண்டாக்கி விடக்கூடிய நிலைமையில் இருந்துவருகிறது. ஆகையால், இந்தப் பலம் திரட்டும் கோஷ்டிகளில் எதனுடனும் சேர்ந்து கொள்ளாமல், சாத்தியமான வரையில் தனியாக இருப்பது என்று நாங்கள் உத்தேசித்திருக்கிறோம். சமாதானமும் சுதந்தரமும், பின்னமாய்ப் பகுக்க முடியாதவை என்பதே எங்கள் நம்பிக்கை. ஓர் இடத்தில் சுதந்தரத்தை மறுத்தால் மற்றோர் இடத்திலும் அதனால் சுதந்தரத்துக்கு ஆபத்து உண்டாகும். அது தகராறிலும் யுத்தத்திலும் போய் முடியும். முக்கியமாக, காலனிகள், சார்பு நாடுகள் ஆகியவைகளின் எல்லா மக்களுக்கும் சமத்துவமான உரிமை உண்டு என்ற கொள்கை காரியாம்சத்திலே அனுஷ்டிக்கப் படவேண்டும் என்று நாங்கள் விரும்புகிறோம். நாஜிகளின் கொள்கையான இன உயர்வுக் கொள்கை எங்கே இருந்தாலும், அது எந்த முறையில் அனுஷ்டிக்கப் பட்டாலும், அதை நாங்கள் முற்றும் வெறுக்கிறோம். பிறர் மீது ஆதிக்கம் செலுத்துவதை நாங்கள் விரும்பவில்லை. மற்றவர்களைவிட அதிகச் சலுகையும் உயர்ந்த அந்தஸ்தும் நமக்கு வேண்டும் என்றும் நாங்கள் ஆசைப்படவில்லை. ஆனால், நம் மக்கள் எங்கே போனாலும் அங்கே சமத்துவமான முறையில் நடத்தப் படுவதோடு கௌரவமாகவும் நடத்தப் படவேண்டும் என்றே நாங்கள் கேட்கிறோம். இவர்களைக் கேவலமாக நடத்தினால், அதை நாம் சகித்துக்கொள்ள முடியாது.

உலகத்தில் போட்டா போட்டிகளும், துவேஷங்களும், உள்ளுக்குள் தகராறுகளும் இருந்தபோதிலும்,

நெருங்கிய ஒத்துழைப்பை நோக்கியே உலகம் போய்க் கொண்டிருக்கிறது. உலகப் பொது நல ஆட்சி ஒன்றை அமைத்துக் கொள்ளவே, உலகம் முயன்று வருகிறது. எந்த ஒரு நாடோ மக்களோ மற்ற எந்த ஒரு நாட்டையோ மக்களையோ தங்கள் நன்மைக்காகச் சுரண்டுவது என்ற சங்கதியே இல்லாத சுதந்தர மக்களைக் கொண்ட இந்த ஒரே உலக அமைப்புக்காகவே, சுதந்தர இந்தியா பாடுபடும்.

இந்தியாவுக்கும் இங்கிலாந்துக்கும் இடையே உள்ள பழைய சரித்திரத்தில் சச்சரவுகளே நிறைந்திருந்த போதிலும், இங்கிலாந்துடனும் பிரிட்டிஷ் சாம்ராஜ்ய நாடுகளோடும் சுதந்தர இந்தியா சிநேக பாவத்துடனேயே இருந்துவரும். ஆனால், இதே சாம்ராஜ்யத்தில் ஒரு நாட்டில் இப்போது என்ன நடந்துகொண்டு வருகிறது என்பதை ஞாபகத்தில் வைக்கவேண்டியதாகிறது. தென்னுப்பிரிக்காவில் நிறத் துவேஷமே சர்க்காரின் முக்கியக் கொள்கையாக இருந்துவருகிறது. நிறத்திமிர் பிடித்த ஒரு சிறுபான்மையோருடன் அவர்களுடைய கொடுமையை எதிர்த்து அங்கே இந்தியர் வீரப் போர் நடத்தி வருகிறார்கள். இந்த நிறத் திமிர்க் கொள்கையைச் சகிப்பதாக இருந்தால், இது பெரும் சச்சரவுகளை உண்டாக்கி, உலக நாசத்திலேயே கொண்டுபோய் விடும்.

சர்வதேசக் காரியங்களில் முக்கியமான ஸ்தானத்தை வகிக்கும் பெருமை, விதியின் செயலால் அமெரிக்காவுக்குக் கிடைத்திருக்கிறது. அமெரிக்க மக்களுக்கு எங்கள் வாழ்த்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம். அமெரிக்கா தனக்கிருக்கும் இந்த மகத்தான பொறுப்பை, எங்கும் மனித வர்க்க சுதந்தரமும் சமாதானமும் வளரும்படி செய்வதில் உபயோகிக்கும் என்றே நாங்கள் நம்புகிறோம்.

தற்கால உலகத்தின் மற்றொரு பெரிய நாடாக இருக்கும் ருஷியாவும், உலக காரியங்களின் அமைப்பை ஒழுங்கு படுத்துவதில் பெரும் பொறுப்பை வகித்திருக்கிறது. அதற்கும் எங்கள் வாழ்த்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம். ஆசியாவில் ருஷியா நமக்குப் பக்கத்து நாடு. நம் இரண்டு நாடுகளுக்கும் நன்மையான அநேக காரியங்களை நாம் சேர்ந்து செய்யவேண்டி யிருப்பதுடன், பரஸ்பரம் செய்துகொள்ள வேண்டிய உதவிகளும் அநேகம் இருக்கின்றன.

நாம் ஆசியாவைச் சேர்ந்தவர்கள். எனவே, மற்றவரை விட ஆசிய மக்களே நமக்கு அதிகமான நெருக்கமும், சம்பந்தமும் உள்ளவர்கள். மேற்கு, தெற்கு, தென் கிழக்கு ஆசியாவின் கேந்திர ஸ்தானத்தில் இந்தியா அமைந்திருக்கிறது. ஆதி காலத்தில் இநதியாவின் கலாசாரம் இந்த நாடுகள் எல்லாவற்றிலும் பரவியது. இந்தக் கலாசாரம் பல வழிகளில் இந்தியாவுக்கு வந்தது. இந்தச் சம்பந்தங்கள் இப்போது புதுப்பிக்கப் பெறுவதுடன், எதிர் காலத்தில் ஒரு பக்கம் இந்தியாவுக்கும் தென்கிழக்கு ஆசியாவுக்கும், மற்றொரு பக்கம் மேற்கிலிருந்து அரபு உலகமான ஆப்கானிஸ்தானம், ஈரான் முதலிய நாடுகளுக்கும் நெருங்கிய ஐக்கியமும் உண்டாகும். சுதந்தர நாடுகளின் இந்த நெருங்கிய பந்தத்தை அதிகரிப்பதற்கான வழியில் நாம் கவனஞ் செலுத்த வேண்டும்.

சுதந்தரத்துக்காகப் போராடி வரும் இந்தொனேசிய மக்களின் முயற்சியை, இந்தியா கவலையுடனும் ஆவலுடனும் கவனித்து வருகிறது. அவர்களுக்கும் எங்கள் வாழ்த்தைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

அந்த மகத்தான தேசமான சீனா, மகத்தான புராதனப் பெருமையை உடையது. நமது பக்கத்து நாடான

சீனுவுக்குத் தொன்றுதொட்டு நம்முடன் சிநேக பாவம் இருந்துவந்திருப்பதுடன், அதே சிநேகம் தொடர்ந்து இருந்துகொண்டு வளர்ச்சியும் அடையும். சீனுவுக்கு இப்போது இருக்கும் கஷ்டங்களெல்லாம் சீக்கிரத்தில் நீங்கி, ஒன்றுபட்ட ஜனநாயக ஆட்சி அமைந்து, உலக சமாதானத்துக்கும் அபிவிருத்திக்கும் சீனு உதவும் என்றே, மனப் பூர்வமாக நாங்கள் நம்புகிறோம்.

உள்நாட்டு விஷயத்தில் நாங்கள் அனுஷ்டிக்கப் போகும் கொள்கையைப் பற்றி, நான் ஒன்றுமே சொல்லவில்லை; இந்தச் சமயத்தில் அதைச் சொல்லவேண்டும் என்று நான் விரும்பவும் இல்லை. ஆனால், இத்தனை வருஷங்களாக எந்தக் கொள்கைக்காகப் பாடுபட்டு வந்திருக்கிறோமோ அந்தக் கொள்கையை அனுசரித்தே நாங்கள் நம் உள்நாட்டுக் காரியங்களைப் புரிவோம். சாதாரணப் பொது மக்களையே நாம் முதலில் கவனிக்க வேண்டும். அவர்களுக்குக் கஷ்ட நிவாரணம் தேடி, அவர்களுடைய வாழ்க்கை நிலையை உயர்த்தவேண்டும். தீண்டாமையையும் இதர நிர்ப்பந்த வேற்றுமைகளையும், நாங்கள் தொடர்ந்து எதிர்த்துப் போராடி வருவோம். பொருளாதாரத்திலோ மற்ற விஷயங்களிலோ பிற்போக்காக இருப்பவர்களுக்கு உதவி செய்வதில் முக்கியமாகக் கவனம் செலுத்துவோம்.

இன்று கோடிக்கணக்கானவர்கள். போதிய சாப்பாடும் துணியும் இல்லாமல் கஷ்டப்படுகிறார்கள். அநேக ஜனங்கள் வீடற்றுத் திண்டாடுகிறார்கள். ஏராளமான மக்கள் பட்டினி கிடக்கும் தருவாயில் இருக்கிறார்கள். இந்த அவசரமான தேவையைக் கவனிப்பது முக்கியமும் கஷ்டமுமான பிரச்னை. மற்ற நாடுகள் உணவுப் பொருள்களை நமக்கு அனுப்பி உதவி செய்யும் என்றே நாங்கள் நம்புகிறோம்.

இதே போல மற்ருேர் அவசர காரியமும் இருக்கிறது. இந்தியாவில் தோன்றியிருக்கும் துவேஷங்களே உடனே வெல்லுவதே அந்தக் காரியம். நாம் இவ்வளவு காலமாக எந்த இந்திய சுதந்தர மாளிகையைப் பற்றிக் கனவு கண்டு வந்தோமோ அந்த மாளிகையை, பரஸ்பாம் பகைமைப் புத்தியுடன் நாம் கட்டி முடிக்க முடியாது. பின்னல் ஏற்படப் போகும் ராஜீய நிலைமை எதுவாணுலும் சரி; நாம் எவ்லோருமே இந்த நாட்டில் வாழ்ந்து ஒன்றுபட்டு வேலே செய்ய வேண்டியவர்கள். துவேஷமோ பலாத்காரமோ, இந்த அடிப்படையான உண்மையை மாற்றிவிட முடியாது. அதோடு, இந்தியாவில் ஏற்பட்டு வரும் மாறுதல்களேத் தடுத்துவிடுவது என்பதும் அவற்ருல் முடியாத காரியம்.

அரசியல் நிர்ணய சபையில் அனுஷ்டிக்க வேண்டிய பகுதிகள், தொகுதிகள் பற்றிப் பலத்த விவாதங்கள் நடந்துவருகின்றன. பகுதிகளாக உட்கார்ந்து, மாகாணக் கோஷ்டிகள் அமைவதைப் பற்றி யோசிக்க, நாங்கள் முற்றும் தயாராக இருக்கிருேம்; அதை ஒப்புக்கொண்டும் இருக்கிருேம். என் சார்பிலும் என் சகாக்களின் சார்பாகவும் நான் இன்னும் ஒன்றையும் உறுதியாகவும் தெளிவாகவும் கூற விரும்புகிறேன். சச்சரவுக்கு ஓர் அரங்கமாகவோ ஒருவர் கருத்தை மற்ருெருவர் ஒப்புக்கொள்ளும்படி வற்புறுத்தும் ஓர் இடமாகவோ அரசியல் நிர்ணய சபையைப் பயன்படுத்தவேண்டும் என்று நாங்கள் எதிர்பார்க்கவில்லே. திருப்தியோடு கூடிய ஐக்கியப் பட்ட இந்தியாவை அமைப்பதற்கு அது வழியும் அல்ல. பரஸ்பர நல்லெண்ணத்துடன் எல்லாரும் ஒப்புக்கொள்ளும் பரிகாரங்களேப் பெறவே, நாங்கள் விரும்புகிருேம். தகராறில் இருக்கும் எல்லா விஷயங்

களிலும் சமரசமான முடிவைக் காண்பது என்ற திடமான உறுதியுடனேயே, நாம் 'அரசியல் நிர்ணய சபைக்குச் செல்லுவோம். ஆகையால், இதுவரையில் என்ன நடந்திருந்தாலும் சரி; என்ன கடுமையான வார்த்தைகள் உபயோகிக்கப் பட்டிருந்தாலும் சரி, இன்று நாங்கள் ஒத்துழைப்பையே நாடுகிறோம். ஆகையால், நம்முடன் மாறுபட்ட அபிப்பிராயங் கொண்டிருப்பவர்களும் நம்முடன் சமத்துவமாக, சம பங்காளிகளாக, நிர்ப்பந்த நிபந்தனை எதுவும் இல்லாமலே, அரசியல் நிர்ணய சபைக்குள் ஒத்துழைக்க வரும்படி, அவர்களை அழைக்கிறோம். நாம் அனைவரும் கூடிப் பொதுவான காரியங்களைச் சமாளிக்க முற்படும்போது, நம்முடைய இப்போதைய கஷ்டங்கள் எல்லாம் தாமே மறைந்து போகவும் கூடும்.

இந்தியா முன்னேறிக்கொண் டிருக்கிறது; பழமையும் நலிந்து மறைந்து ஓடுகிறது. சம்பவங்களைச் சும்மா இருந்து பார்த்துக்கொண் டிருப்பவர்களாகவும் மற்றவர்களின் விளையாட்டுக்கு உதவும் கருவிகளாகவும், நாம் நீண்ட காலமாக இருந்து வந்திருக்கிறோம். தாமே காரியங்களைச் செய்யும் சந்தர்ப்பம் இப்போதுதான் நம் மக்களுக்கு வாய்த்திருக்கிறது. ஆகவே, இனி நம் விருப்பப்படி சரித்திரத்தை உருவாக்குவோம். இந்த மகத்தான காரியத்தில் எல்லோரும் ஒத்துழைத்து, இந்தியாவை நாம் பெருமை கொள்ளத்தக்க நாடாகச் செய்வதுடன், உலக நாடுகளிடையேயும் மிகச் சிறந்ததாக்கி, சமாதானம், அபிவிருத்தி ஆகியவற்றில் முதன்மை பெற்றதாகவும் செய்வோமாக. கதவு திறந்திருக்கிறது; முடிவான லட்சியமும் எல்லோரையும் அழைக்கிறது. நாம் எல்லோரும் ஒன்றுபட்டே முன்னேற வேண்டியிருப்பதால், இதில் ஜயிப்பவர் இன்னார், தோற்பவர் இன்னார் என்பதற்கே

இடமில்லை. ஜயித்தால் எல்லோரும் ஜயிக்கிறோம்; தோற்றால் எல்லோருக்கும் தோல்வியே. ஆனால், இதில் தோல்வி என்பதே இல்லை. வெற்றி, சுயேச்சை, நாற்பது கோடி மக்களின் சுதந்தர சுகங்கள் இவைகளை அடையும் திசையில் நாம் முன்னோக்கியே செல்கிறோம். ஜே ஹிந்த்!

# அனுபந்தம்.

## பிரிட்டிஷ் மந்திரிகளின் தூதுக் கோஷ்டித் திட்டம்.

பிரிட்டிஷ் சர்க்காரில் இந்தியா மந்திரி பெத்விக் லாரென்ஸ், கடற்படை மந்திரி ஏ. வி. அலெக்ஸாண்டர், வர்த்தக மந்திரி ஸர் ஸ்டாபோர்டு கிரிப்ஸ் இந்த மூவரும் 1946-ஆம் வருஷம் ஏப்ரல் மாதம் பிரிட்டிஷ் சர்க்காரின் தூதுக் கோஷ்டியாக இந்தியாவுக்கு வந்தார்கள். இந்திய அரசியல் கட்சிகளுடன், ஏப்ரல், மே மாதங்களில் பேச்சு வார்த்தைகள் நடத்தினர்கள். காங்கிரஸுக்கும் முஸ்லிம் லீக்குக்கும் இந்திய அரசியல் பிரச்னை குறித்து ஒற்றுமை ஏற்படாததால், மத்தியஸ்தமாக, தாங்களே ஒரு திட்டத்தை வகுத்து, மேமீ 16உ, அறிக்கை செய்தார்கள். அந்த அறிக்கையின் வாசகம் பின் வருமாறு:

1. மந்திரி சபைத் தூதுக் கோஷ்டியை இந்தியாவுக்கு அனுப்புவதற்குச் சற்று முன்பு, மார்ச்சுமீ 15-ஆம் தேதியன்று பிரிட்டிஷ் பிரதம மந்திரி மிஸ்டர் ஆட்லி பின்வருமாறு சொன்னர்:

"என் சகாக்கள் இந்தியாவுக்குச் செல்கிருர்கள். எவ்வளவு சீக்கிரமாகவும் பூரணமாகவும் முடியுமோ அவ்வளவு சீக்கிரமாகவும் பூரணமாகவும் இந்தியா சுதந்தரம் அடையவேண்டும். இந்த விஷயத்தில் தங்களால் இயன்ற முழுமுயற்சியோடு இந்தியாவுக்கு உதவி புரிவதே, என் சகாக்கள் அங்கே செல்வதன் நோக்கமாகும். தற்போதைய ஆட்சி போகவேண்டும். இதற்குப் பதிலாக, எத்தகைய

சர்க்கார் ஏற்பட வேண்டும் என்பது இந்தியரே தீர்மானிக்க வேண்டிய விஷயம். ஆனல், அந்தத் தீர்மானத்தைச் செய்வதற்கு, ஒரு ஸ்தாபனத்தை இந்தியா உடனே அமைத்துக் கொள்ளவேண்டும். இந்த விஷயத்தில், இந்தியாவுக்கு ஒத்தாசை புரிவதே எங்கள் விருப்பம்.''

* * *

"இந்தியாவும் அதன் மக்களும் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்துக்குள்ளேயே இருப்பது என்று தீர்மானிப்பார்கள் என்றே நான் நம்புவேன். அப்படிச் செய்வதால், தங்களுக்குப் பெரிய அனுகூலங்கள் உண்டு என்று அவர்கள் காண்பார்கள். இது எனது நிச்சயம்."

* * *

"ஆனல், இந்தியா அப்படித் தீர்மானிப்பதானல் அந்தத் தீர்மானம் இந்தியா தன்னிச்சையாகத் தீர்மானித்ததாகவே இருக்கவேண்டும். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியமும் சாம்ராஜ்யமும் வெளியாரின் நிர்ப்பந்தத்தால் ஒன்று கூட்டித் தளைக்கப்பட் டிருக்க வில்லை. பிரிட்டிஷ் சாம்ராஜ்யம், சுயேச்சையான பல நாடுகளின் மக்கள் சுயேச்சையாக ஒன்று சேர்ந்திருக்கும் கூட்டுறவேயாகும். மேற் சொன்னபடி இல்லாமல், இந்தியா சுயேச்சையாகப் பிரிந்து போவதென்று தீர்மானிக்குமானல், அப்படித் தீர்மானிக்கவும் அதற்கு உரிமை உண்டு என்று நாங்கள் கருதுகிறோம். அந்த மாறுதல் எவ்வளவு நயமாகவும் சுலபமாகவும் நடக்க முடியுமோ அவ்வளவு நயமாகவும் சுலபமாகவும் நடப்பதற்கு ஒத்தாசை புரிவது நமது கடமையாகும்."

2. பிரிட்டிஷ் மந்திரி சபையைச் சேர்ந்த மந்திரிகளும் வைஸ்ராயுமான எங்கள் வேலை, சரித்திரத்தில் ஏறத்

தக்க இந்த வார்த்தைகளின் மூலம் எங்களிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. இந்தியா ஒரே இந்தியாவாக இருப்பதா, அல்லது அதைப் பிரிவினை செய்வதா என்பதே அடிப்படையான பிரச்னை. அந்தப் பிரச்னை விஷயத்தில், இரண்டு பிரதம அரசியல் கட்சிகளையும் ஓர் உடன்பாட்டுக்கு வரச் செய்ய, எங்களால் ஆனமட்டும் அவைகளுக்கு நாங்கள் ஒத்தாசை புரிந்தோம். புது டில்லியில் பல நாள் பேச்சு வார்த்தைகள் நடந்தன. அதன் பிறகு, காங்கிரஸையும் லீக்கையும் ஸிம்லாவில் ஒரே மகாநாட்டில் கூடச் செய்வதில் வெற்றிபெற்றோம். மகாநாட்டில் அபிப்பிராயங்களைப் பரிபூரணமாகப் பரிமாறிக்கொண்டோம். முயன்று, ஒரு சமரசத்துக்கு வருவதற்காக, இரண்டு கட்சியாரும் எவ்வளவோ விட்டுக் கொடுக்கத் தயாராயிருந்தார்கள். ஆனால், கடைசியில் இரண்டு கட்சிகளுக்கும் இடையிலே மிச்சமிருந்த வேற்றுமையை அகற்றுவது சாத்தியமில்லாமல் போயிற்று. ஆகையால், எவ்வித உடன்பாடும் எற்பட முடியவில்லை. உடன்பாடுதான் ஏற்படவில்லை. புதிய அரசியல் அமைப்பைத் துரிதமாக ஸ்தாபிக்கச் சாத்தியமான சிறந்த ஏற்பாடுகள் யாவை என்று எங்கள் யோசனையில் பட்டதை, எடுத்துச் சொல்வது எங்கள் கடமை என்று நாங்கள் கருதுகிறோம். பிரிட்டிஷ் மன்னர் சர்க்காரின் பூர்ண அங்கீகாரத்துடனேயே இந்த அறிக்கையை வெளியிடுகிறோம்.

3. இந்தியாவின் எதிர்கால அரசியல் அமைப்பை இந்தியர்களே தீர்மானித்துக் கொள்ளுவதற்காக, உடனடியாக ஏற்பாடுகள் செய்யவேண்டும்; புதிய அரசியல் அமைப்பு அமலுக்கு வரும்வரையில், பிரிட்டிஷ் இந்தியாவின் நிர்வாகத்தை நடத்திவருவதற்காக, ஓர் இடைக்கால சர்க்காரை உடனே அமைக்கவேண்டும். இவ்விதம், நாங்கள்

தீர்மானித்தோம். இந்திய மக்களில் பெரும்பான்மைப் பிரிவுகளுக்கும் சிறுபான்மைப் பிரிவுகளுக்கும் நியாயமாய் நடந்துகொள்ள, நாங்கள் முயன்றிருக்கிறோம். ஒரு பரிகாரத்தை ஏற்பாடு செய்யவேண்டும். அந்த ஏற்பாடு, எதிர்கால இந்தியாவை ஆளுவதற்குக் காரியசாத்தியமான ஒரு வழியைக் கோலுவதாக இருக்கவேண்டும்; தற்காப்புக்கு நல்ல அடிப்படை வகுப்பதாக இருக்கவேண்டும்; சமூகம், அரசியல், பொருளாதாரம் இந்தத் துறைகளில் முன்னேற்றம் பெற நல்ல சந்தர்ப்பம் அளிப்பதாக இருக்க வேண்டும். இத்தகைய ஏற்பாடு ஒன்றைச் சிபார்சு செய்யவும் நாங்கள் முயன்றிருக்கிறோம்.

4. தூதுக் கோஷ்டியாரிடம் ஏராளமான சாட்சியங்கள் சமர்ப்பிக்கப்பட் டிருக்கின்றன. அவைகளை யெல்லாம் இந்த அறிக்கையில் விமர்சனம் செய்வதாக உத்தேசமில்லை. ஆனால், ஒரு விஷயத்தை நாங்கள் இங்கே குறிப்பிடுவது பொருத்தமாகும். அதாவது, முஸ்லிம் லீக்கை ஆதரிப்போர் நீங்கலாக, மற்றவர்களெல்லாம் இந்தியா ஐக்கியமா யிருக்கவேண்டும் என்றே கிட்டத்தட்ட ஒருமுகமாக விரும்புகிறார்கள்; இதை இந்தச் சாட்சியங்கள் காட்டி யிருக்கின்றன.

5. ஆயினும், இந்தியாவைப் பிரிப்பது சாத்தியமா என்பதைப் பாரபட்சமில்லாமலும் தீர்க்கமாகவும் நாங்கள் ஆராய்ந்தோம். இந்தச் சாட்சியங்களுக்காக, அதை நாங்கள் ஆராயாமல் விடவில்லை. ஏனென்றால், முஸ்லிம்களுக்கு உண்மையிலேயே ஆழ்ந்த கவலை ஒன்று இருக்கிறது. ஹிந்துக்களே பெரும்பான்மை படைத்த ஓர் ஆட்சிக்கு, தாங்கள் நிரந்தரமாய் உட்பட்டிருக்க நேருமோ என்று, முஸ்லிம்கள் கவலைப்படுகிறார்கள். இந்த விஷயம் எங்கள் மனத்தில் நன்றாகப் பதிந்தது.

இந்தக் கவலே மிகவும் பலமாகவும் விஸ்தாரமாகவும் முஸ்லிம்களிடையே பரவியிருக்கிறது. ஆகையால், வெறும் காகிதப் பாதுகாப்புக்களால் மட்டும் இதைக் குறைக்கமுடியாது. முஸ்லிம்களின் கலாசாரம், மதம், பொருளாதாரம், இதர நலன்கள் ஆகியவைகளுக்கு ஜீவாதாரமாக இருக்கக்கூடிய விஷயங்களில், முஸ்லிம்களுக்கு ஆதிக்கம் இருக்கவேண்டும். அப்படி ஆதிக்கம் அளிக்கக் கூடிய ஏற்பாடுகளேச் செய்தால்தான், இந்தியாவில் உள் நாட்டு அமைதி நிலவும்.

6. ஆகவே, முஸ்லிம் லீக்கின் பாகிஸ்தான் கோரிக்கைபற்றி நாங்கள் முதலில் பரிசீலனை செய்தோம். பிரத்யேகமான, பூரண சுதந்தரத்துடன் கூடிய, சர்வாதிகாரம் உள்ள பாகிஸ்தான் ராஜ்யம் வேண்டும் என்பது முஸ்லிம் லீக்கின் கோரிக்கை. அத்தகைய பாகிஸ்தானில் இரண்டு பிரதேசங்கள் அடங்கியிருக்கும். வடமேற்கில் பஞ்சாப், சிந்து வடமேற்கு எல்லேப்புறம் ஆகிய மாகாணங்களும், பிரிட்டிஷ் பலுசிஸ்தானும் அடங்கியது ஒரு பிரதேசம்; வடகிழக்கில் வங்காளம், அஸ்ஸாம் ஆகிய மாகாணங்கள் அடங்கியது மற்ருெரு பிரதேசம். எல்லே நிர்ணய விஷயத்தை, பின்னுல் ஒரு கட்டத்தில் கவனிக்க லீக் சித்தமாயிருந்தது. ஆனுல், பாகிஸ்தான் செய்வது என்ற கொள்கையை முதலில் ஒப்புக்கொள்ள வேண்டும் என்று அது வற்புறுத்தியது. பாகிஸ்தான் வேண்டும் என்ற வாதத்தை, இரண்டு விஷயங்களே அடிப்படையாகக்கொண்டு செய்தார்கள்; முஸ்லிம் பெரும்பான்மைப் பிரதேசங்களில் உள்ள முஸ்லிம்களுக்குத் தாங்கள் விரும்புகிறபடி தங்கள் ஆட்சிமுறையைத் தீர்மானித்துக்கொள்ளும் உரிமை இருக்கவேண்டும் என்பது ஒரு விஷயம். அந்தப் பாகிஸ்தான், நிர்வாக ரீதியிலும் பொருளாதார ரீதியிலும் காரியசாத்தியமாக இருக்கும்படி

செய்யவேண்டுமே? அதற்காக, முஸ்லிம்கள் சிறுபான்மை யாயுள்ள பெருவாரியான பிரதேசங்களை, அந்தப் பாகிஸ் தானில் சேர்க்கவேண்டும் என்பது இரண்டாவது விஷயம்.

மேலே சொன்ன ஆறு மாகாணங்கள் பூராவும் அடங்கிய பாகிஸ்தானில், முஸ்லிம்கள் அல்லாத சிறு பான்மையினரின் தொகை, மிகவும் அதிகமாயிருக்கும் என்பதைக் கீழ்வரும்* புள்ளி விவரங்களிலிருந்து அறிய லாம்:

வடமேற்குப் பிரதேசம்—

| | முஸ்லிம்கள் | முஸ்லிம் அல்லாதார் |
|---|---|---|
| பஞ்சாப் ... | 1,62,17,242 | 1,22,01,577 |
| வடமேற்கு எல்லைப்புற மாகாணம் | 27,88,797 | 2,49,270 |
| சிந்து ... | 32,08,325 | 13,26,683 |
| பிரிட்டிஷ் பலுசிஸ்தானம்... | 4,38,930 | 62,701 |
| | 2,26,53,294 | 1,38,40,231 |
| | 62·07 % | 37·93 % |

வடகிழக்குப் பிரதேசம்—

| | | |
|---|---|---|
| வங்காளம் ... | 3,30,05,434 | 2,73,01,091 |
| அஸ்ஸாம் ... | 34,42,479 | 67,62,254 |
| | 3,64,47,913 | 3,40,63,345 |
| | 51·69 % | 48·31 % |

பாக்கியுள்ள பிரிட்டிஷ் இந்தியாவில் இருக்கும் முஸ் லிம் சிறுபான்மையினர் சுமார் 2 கோடி பேர். 18 கோடியே

*இந்த அறிக்கையில் கொடுக்கப் பட்டுள்ள ஜனத்தொகைப் புள்ளி விவரங்களெல்லாம் சமீபத்தில் 1941-ஆம் வருஷத்தில் எடுத்த ஜன சங்கியைக் கணக்கிலிருந்து எடுக்கப் பட்டவை.

80 லட்சம் பேர் உள்ள மொத்த ஜனத் தொகைக் கிடையில் இவர்கள் சிதறிக்கிடக்கிறார்கள்.

சர்வாதிகாரம் உள்ள பிரத்தியேகமான பாகிஸ்தான் வேண்டும் என்பது முஸ்லிம் லீக்கின் கோரிக்கை. அப் படிப்பட்ட பாகிஸ்தானை அமைப்பதால், சிறுபான்மை வகுப்புப் பிரச்னை தீர்ந்துவிடாது. அதை இந்தப் புள்ளிவிவரங்கள் காட்டுகின்றன.

பஞ்சாப், வங்காளம், அஸ்ஸாம் ஆகிய மாகாணங் களில், முஸ்லிம் அல்லாதாரின் ஜனத் தொகையே பிர தானமாயிருக்கும் ஜில்லாக்களும் இருக்கின்றன. அந்த ஜில்லாக்களை, சர்வாதிகாரம் உள்ள பாகிஸ்தானில் சேர்ப்பதற்கு, எவ்வித நியாயமும் இருப்பதாக எங்களுக் குத் தோன்றவில்லை. பாகிஸ்தான் வேண்டும் என்பதற் குப் பற்பல வாதங்கள் சொல்லுகிறார்களே. அந்த ஒவ் வொரு வாதத்தையும், முஸ்லிம் அல்லதாரின் பிரதேசங் களைப் பாகிஸ்தானிலிருந்து ஒதுக்க வேண்டும் என்பதற் கும் ஆதாரமாகச் சொல்லலாம் என்பது எங்கள் அபிப் பிராயம். இந்த விஷயம் முக்கியமாகச் சீக்கியரின் நிலை மைக்குப் பொருந்தும்.

7. ஆகவே, முஸ்லிம் பெரும்பான்மைப் பிர தேசங்கள் மட்டும் அடங்கிய, சர்வாதிகாரம் உள்ள, சிறியதொரு பாகிஸ்தானை, ராஜிக்கு ஆதாரமாகக் கொள்ள முடியுமா? இதைப்பற்றி நாங்கள் ஆலோ சித்தோம். அத்தகைய பாகிஸ்தான் சற்றும் காரிய சாத் தியமல்ல என்று முஸ்லிம் லீக் கருதுகிறது. ஏனென்றால், (எ) பஞ்சாபில் உள்ள அம்பாலா, ஜாலந்தர் ஆகிய டிவிஷன்கள் பூராவையும், (பி) சில்ஹட் ஜில்லா நீங்க

லாக அஸ்ஸாம் முழுவதையும், (லி) மொத்த ஜனத் தொகையில் முஸ்லிம்கள் 23. 6 சதவிகிதமே உள்ள கல்கத்தா நகரம் உள்பட மேற்கு வங்காளத்தில் ஒரு பெரும் பகுதியையும், பாகிஸ்தானிலிருந்து அப்போது ஒதுக்கி விட வேண்டியிருக்கும். இந்த ஏற்பாட்டின்படி பஞ்சாபையும் வங்காளத்தையும் அடியோடு துண்டாடியாக வேண்டும். அப்படித் துண்டாடும் எந்த ஏற்பாடும் இந்த மாகாணங்களின் குடிகளில் மிகப் பெரும்பகுதியினரின் விருப்பத்துக்கும் நலன்களுக்கும் விரோதமாயிருக்கும். இது எங்களுக்கே நிச்சயப்பட்டுவிட்டது. வங்காளத்துக்கும் பஞ்சாபுக்கும் தனித்தனியே சொந்தமான ஒரு பொதுப் பாஷையும் நீண்டகால சரித்திரமும் பழம் பெருமையும் இருக்கின்றன. மேலும், பஞ்சாபை எப்படிப் பிரித்தாலும், சீக்கியர்களைப் பிரித்தே ஆகவேண்டியிருக்கிறது. பிரிக்கப்பட்ட இரண்டு பகுதிகளிலும் கணிசமான அளவில் சீக்கியர்கள் இருந்துகொண்டிருப்பார்கள். ஆகையால், பெரியதாகவோ சிறியதாகவோ சர்வாதிகாரம் உள்ள ஒரு பாகிஸ்தான் ராஜ்யத்தை ஏற்படுத்துவதால், வகுப்புப் பிரச்னைக்கு எல்லோரும் ஒப்பத்தகுந்த ஒரு பரிகாரம் கிடைக்காது.

8. மேற்சொன்ன மிகவும் பலமான காரணங்கள் ஒருபுறம் இருக்கட்டும். முக்கியமான நிர்வாக, பொருளாதார, ராணுவ காரணங்களும் இருக்கின்றன. இந்தியாவில் போக்கு வரத்து ஏற்பாடுகள், தபால் - தந்தி ஏற்பாடுகள் முழுவதும் ஐக்கியமான ஒரே இந்தியா என்ற அடிப்படையில்தான் அமைந்திருக்கின்றன. இவைகளைச் சிதைப்பது, இந்தியாவின் இரண்டு பகுதிகளுக்குமே பெருங் கேடு விளைவிப்பதாகும். ஐக்கியமான தற்காப்பு இருக்கவேண்டும் என்பது இதைவிடப்

பலமான நியாயமாகும். இந்தியச் சேனை, இந்தியா முழுவதற்கும் பாதுகாப்பளிப்பதற்காக, ஒரே முழுமையாக அமைக்கப்பட்டிருக்கிறது. அதை இரண்டாகப் பிளந்தால், நீண்டகாலமாக இந்தியச்சேனைக்கு இருந்துவரும் பிரதாபமும் உயர்ந்த திறமையும் சீர்குலைந்து போகும். இதுவுமன்றி, பிரமாதமான ஆபத்துக்களும் விளைய ஹேதுவாகும். இந்தியக் கடற்படையும் இந்திய விமானப்படையும் பெரிதும் திறங்குன்றிப் போகும். தற்போது யோசனை கூறப்படும் பாகிஸ்தானின் இரண்டு பிரிவுகளிலும், இந்தியாவின் மிகவும் ஊனமான இரண்டு எல்லைகள் அடங்கியிருக்கின்றன. எல்லையிலிருந்து உள்நாட்டில் வெகுதூரம் வரையில் அடுக்காக அரண்கள் அமைத்துத் தற்காப்பு நடத்துவது சாத்தியமாக இருக்கவேண்டுமானல், அதற்குப் பாகிஸ்தான் பிரதேசத்தின் நிலப்பரப்புப் போதிய விஸ்தீர்ணம் உள்ளதல்ல.

9. முக்கியமான மற்றொரு விஷயம் என்னவென்றால், பிளவுபட்ட இந்தியாவோடு இணைந்து வேலை செய்வது, இந்திய சமஸ்தானங்களுக்கு இன்னும் அதிகக் கஷ்டமாக இருக்கும்.

10. கடைசியாக, பூகோள அமைப்புரீதியில் ஒரு விஷயத்தைக் கவனிக்கவேண்டும். தற்போது உத்தேசிக்கப்படும் பாகிஸ்தான் ராஜ்யத்தின் இரண்டு பகுதிகளும் (மேற்குப் பாகிஸ்தான் பகுதியும் கிழக்குப் பாகிஸ்தான் பகுதியும்) சுமார் 700-மைல் தூரத்துக்கு அப்பால் பிரிந்துகிடக்கின்றன. இந்த இரண்டு பகுதிகளுக்கும் இடையிலே போக்கு வரத்து நடக்கவேண்டும். அந்தப் போக்குவரத்து, யுத்தகாலத்தில் மட்டுமென்றிச் சமாதான காலத்திலும், ஹிந்துஸ்தானத்தின் நல்லெண்ணத்தைப் பொறுத்ததாகத்தான் இருக்கும்.

11. ஆகையால், தற்சமயம் பிரிட்டிஷ் சர்க்காரின் கையில் இருந்துவரும் அதிகாரத்தை, அடியோடு பிரிந்த சர்வாதிகாரம் உள்ள இரண்டு ராஜ்யங்களிடம் ஒப்படைக்கவேண்டும் என்று பிரிட்டிஷ் சர்க்காருக்கு யோசனை கூற, எங்களால் இயலவில்லை.

12. இந்த முடிவைச் செய்ததால், நாங்கள் முஸ்லிம்களின் மிகவும் வாஸ்தவமான ஒரு பயத்தை அறியாமல் போகவில்லை. முற்றும் ஒருமைப்பட்ட இந்தியாவில் ஹிந்துக்களே பெருவாரியான எண்ணிக்கையாக இருப்பார்களாதலால் அவர்களே மேலாதிக்கம் வகிப்பார்கள் என்றும், அதனுல் தங்களுடைய கலாசாரமும் அரசியல் சமுதாய வாழ்வும் அமுங்கிப்போகும் என்றும், முஸ்லிம்கள் பயப்படுகிருர்கள். இந்தப் பயத்தைச் சமாளிப்பதற்காக, காங்கிரஸ் ஒரு திட்டத்தைச் சமர்ப்பித்திருக்கிறது. அதன்படி, மாகாணங்களுக்கு முழுச் சுய ஆட்சி இருக்கும். வெளிநாட்டு விவகாரம், தற்காப்பு, போக்குவரத்து ஆகியவை போன்ற குறைந்த பட்சமான சில இனங்கள் மட்டுமே மத்திய சர்க்காரின் நிர்வாகத்துக்குரிய விஷயங்களாக இருக்கும்.

இந்தத் திட்டத்தின் கீழே, பெருத்த அளவில் வகுக்கப்படும் பொருளாதாரத் திட்டங்களிலும் நிர்வாகத் திட்டங்களிலும் மாகாணங்கள் கலந்துகொள்ள விரும்பினுல், மேலே சொன்ன கட்டாயமான விஷயங்கள் போக, தாங்களாக இஷ்டப்பட்டு வேறு விஷயங்களையும், மத்திய சர்க்காரின் அதிகாரத்துக்கு மாகாணங்கள் விட்டுக் கொடுக்கலாம்.

13. இத்தகைய ஒரு திட்டத்தினுல், அரசியல் அமைப்புக்கு மிகுந்த அசௌகரியங்களும், முரண்பாடுகளும் ஏற்படும் என்று நாங்கள் அபிப்பிராயப்படுகிறோம்.

இந்தத் திட்டத்தின் பிரகாரம், மத்திய சர்க்காரில் கட்டாய விஷயங்களை நிர்வகிக்கும் சிலமந்திரிகள் முழு இந்தியாவுக்கும் பொறுப்புடையவர்களாக இருப்பார்கள். இஷ்ட விஷயங்களை நிர்வகிக்கும் வேறு சில மந்திரிகளோ, அத்தகைய விஷயங்களில் கூட்டாகச் சேர்ந்து உழைக்க இசைந்த மாகாணங்கள் எவையோ அவைகளுக்கு மட்டுமே பொறுப்புடையவர்களாக இருப்பார்கள். இந்த நிலையில், மத்திய நிர்வாக சபையையும் சட்டசபையையும் நடத்தி வருவது மிகவும் கஷ்டமாக இருக்கும். இந்தக் கஷ்டம், மத்திய சட்டசபை விஷயத்தில், மிகவும் கடுமையாகப் போய்விடும். ஏனென்றால், சில மாகாணங்களுக்குச் சம்பந்த மில்லாத விஷயங்கள், மத்திய சட்டசபையில் சர்ச்சைக்கு வரலாம். அப்போது, அந்த மாகாணங்களைச் சேர்ந்த அங்கத்தினர்களை, பேசக்கூடாதென்றும் ஓட்டுச் செய்யக் கூடாதென்றும் ஒதுக்கவேண்டிய அவசியம் நேரும்.

இத்தகைய ஒரு திட்டத்தை நடத்துவதில் உள்ள கஷ்டம் ஒருபுறம் இருக்கட்டும். இஷ்ட விஷயங்களை மத்திய சர்க்காருக்கு விட்டுக்கொடுக்க விரும்பாத வேறு மாகாணங்கள் இருக்குமே. அவைகள் இதே போன்ற ஒரு காரியத்துக்குத் தங்களுக்குள்ளே கூட்டுச் சேர்ந்துகொள்ளும் உரிமையை, அவைகளுக்கு மறுப்பதும் நியாயம் அல்ல என்று நாங்கள் கருதுகிறோம். அவைகள் இப்படிக் கூட்டுச் சேருமானால், அது தங்கள் சுய ஆட்சி அதிகாரத்தை ஒரு குறிப்பிட்ட வழியில் அவைகள் உபயோகிப்பதாகுமே தவிர, வேறில்லை.

**14.** எங்கள் சிபார்சைச் சொல்லு முன்பு, இந்திய சமஸ்தானங்களுக்கும் பிரிட்டிஷ் இந்தியாவுக்கும் உள்ள தொடர்பைப் பற்றிக் கொஞ்சம் குறிப்பிட விரும்புகிறோம்.

பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்துக்குள்ளேயோ அல்லது அதற்கு வெளியேயோ, பிரிட்டிஷ் இந்தியா சுதந்தரம் அடைந்து விடப் போகிறது. அதன் பின்பு, இதுவரையிலும் சமஸ்தான மன்னர்களுக்கும் பிரிட்டிஷ் அரசருக்கும் இருந்து வந்த அதே தொடர்பு நீடிப்பது சாத்தியம் அல்ல என்பது தெளிவு. சமஸ்தானங்களின்மீது பிரிட்டிஷ் அரசருக்கு இருந்துவரும் மேலதிகாரத்தை, அவரே வைத்துக் கொள்ளவும் முடியாது; புதிய இந்திய சர்க்காருக்கு மாற்றிக் கொடுக்கவும் முடியாது. இந்திய சமஸ்தானங்களின் சார்பாக எங்களைக் கண்டு பேசியவர்கள், இந்த விஷயத்தைப் பூரணமாக உணர்ந்திருக்கிறார்கள். அது மட்டும் அன்றி, இந்தியாவில் அமைய இருக்கும் புதிய ஏற்பாட்டில் ஒத்துழைக்க, சமஸ்தானங்கள் விருப்பத்தோடு தயாராக இருப்பதாகவும் அவர்கள் எங்களிடம் உறுதி கூறியிருக்கிறார்கள். அவர்களது ஒத்துழைப்பு என்ன உருவத்தில் இருக்கும் என்பதை, புதிய அரசியல் அமைப்பை உருவாக்கும்போது பேச்சுவார்த்தைகள் நடத்துவதன் மூலமே தீர்மானிக்கவேண்டும். எல்லாச் சமஸ்தானங்களின் ஒத்துழைப்பும் ஒரே மாதிரி உருவத்தில் இருக்கும் என்றும் சொல்லமுடியாது. ஆகையால், நாங்கள் பின்வரும் பாராக்களில் பிரிட்டிஷ் இந்திய மாகாணங்களைப் பற்றி விவரமாய்ச் சொல்லி யிருப்பதுபோல், அவ்வளவு விவரமாகச் சமஸ்தானங்களைப்பற்றிச் சொல்லவில்லை.

15. இனி, எங்கள் திட்டத்தை விவரிக்கிறோம். இது சகல கட்சிகளின் முக்கியக் கோரிக்கைகளையும் திருப்திப்படுத்தும் நியாயமான திட்டமாகும் என்றும், அதே சமயத்தில் அகில இத்தியாவுக்கும் உறுதியும் காரிய சாத்தியமுமான ஓர் அரசியல் அமைப்பு இதனுல் ஏற்படும் என்றும், நாங்கள் கருதுகிறோம்.

இந்திய அரசியல் அமைப்பு, பின்வரும் அடிப்படை அம்சங்களைக் கொண்டதாக அமையவேண்டும் என்று நாங்கள் சிபார்சு செய்கிறோம்:

(1) ஓர் இந்திய யூனியன் இருக்கவேண்டும். பிரிட்டிஷ் இந்தியாவும் இந்திய சமஸ்தானங்களும் அதில் சேர்ந்திருக்க வேண்டும். வெளிநாட்டு விவகாரம், தற்காப்பு, போக்குவரத்து இந்த மூன்று விஷயங்களையும் அந்த யூனியன் நிர்வகிக்க வேண்டும். இவைகளுக்குத் தேவைப்படும் நிதியை வசூலித்துக் கொள்ள அவசியமான அதிகாரங்கள், அந்த யூனியனுக்கு இருக்கவேண்டும்.

(2) அந்த யூனியனுக்கு ஒரு நிர்வாக சபையும் ஒரு சட்ட சபையும் இருக்கவேண்டும். பிரிட்டிஷ் இந்தியாவின் பிரதிநிதிகளையும் சமஸ்தானங்களின் பிரதிநிதிகளையும் கொண்டு, அந்த நிர்வாக சபையும் சட்ட சபையும் அமையவேண்டும். யூனியன் சட்ட சபையில், வகுப்பு சம்பந்தமான ஏதாவது பெரிய பிரச்னையைக் கிளப்பும் எந்த விஷயமாவது ஆலோசனைக்கு வரலாம். அப்படி வரும்போது, இரண்டு பிரதான சமூகங்களுள் ஆஜராகியிருக்கும் பிரதிநிதிகளில் ஒவ்வொரு சமூகத்தையும் சேர்ந்த பெரும்பான்மையோரின் ஓட்டுக்களை மட்டுமென்றி, ஆஜராகியிருக்கும் மொத்த அங்கத்தினர்களில் பெரும்பான்மையோரின் ஓட்டுக்களையும் பெற்றே, அந்த விஷயத்தை முடிவு செய்யவேண்டும்.

(3) யூனியன் விஷயங்கள் தவிர, இதர சகல விஷயங்களும் எஞ்சிநின்ற சகல அதிகாரங்களும் மாகாணங்களிடமே இருக்கும்.

(4) யூனியனிடம் சமஸ்தானங்கள் விட்டுக் கொடுத்தவைகளைத் தவிர, இதர சகல விஷயங்களும் அதிகாரங்களும் சமஸ்தானங்களிடமே இருக்கும்.

(5) நிர்வாக சபைகளும் சட்ட சபைகளும் உள்ள தொகுதி வட்டங்களாகச் சேர்ந்து கொள்ள, மாகாணங்களுக்குச் சுதந்தரம் இருக்க வேண்டும். ஒவ்வொரு தொகுதி வட்டமும், மாகாண விஷயங்களில் எவைகளைப் பொது விஷயங்களாக எடுத்துக் கொள்வது என்று தீர்மானிக்கலாம்.

(6) யூனியனின் அரசியல் அமைப்பிலும், தொகுதி வட்டங்களின் அரசியல் அமைப்பிலும், பின்வரும் ஷரத்து இருக்க வேண்டும்: அதாவது, முதல் பத்து வருஷத்துக்குப் பின்பும், பிற்பாடு பத்து வருஷத்துக்கு ஒரு தடவையும், எந்த மாகாணமும் தனது சட்ட சபையின் பெரும்பான்மை ஓட்டுக்களின் மூலம், தனது அரசியல் அமைப்பின் ஷரத்துக்களைப் புனராலோசனை செய்யக் கோரலாம்.

16. மேலே சொன்ன ரீதியில் ஓர் அரசியல் அமைப்பின் உள் விவரங்களை வகுத்துச் சொல்வது எங்கள் நோக்கம் அல்ல. இந்தியர்களே இந்தியர்களுக்குத் தேவையான ஓர் அரசியல் அமைப்பை நிர்ணயித்துக் கொள்ளச் சாதனமான ஒரு ஸ்தாபனத்தை ஆரம்பித்து வைப்பது தான் எங்கள் நோக்கம்.

ஆயினும், எதிர்கால அரசியல் அமைப்பின் பொதுவான அடிப்படை குறித்து, நாங்கள் இந்தச் சிபார்சைச் செய்யும் அவசியம் ஏற்பட்டது. ஏனென்றால், நாங்கள் இப்படிச் செய்யாத வரையில், அரசியல் நிர்ணய ஸ்தாபனத்தைத் தொடங்கும் காரியத்தில் இரண்டு பிரதான சமூகங்களையும் ஒத்துழைக்கச் செய்யலாம் என்ற நம்பிக்கைக்கு இடமில்லை. நாங்கள் நடத்திய பேச்சு வார்த்தைகளின் போது, இது தெளிவாகத் தெரிந்தது.

17. புதிய அரசியல் அமைப்பை வகுப்பது சாத்திய

மாவதற்காக, நாங்கள் உத்தேசித்துள்ள அரசியல் நிர்ணய ஸ்தாபனத்தை உடனடியாக ஏற்படுத்த வேண்டும். அந்த ஸ்தாபனத்தைப் பற்றி, இப்போது குறிப்பிடுகிறோம்.

18. ஒரு புதிய அரசியல் அமைப்பை நிர்ணயிப்பதற்கான எந்த ஒரு சபையை அமைக்கும்போதும், சாத்தியமான மட்டில் மக்கள் அனைவருக்கும் விரிந்த அடிப்படையில் சரியான பிரதிநிதித்துவம் அளிக்க வேண்டும். இது முதலாவது பிரச்னையாகும். வயது வந்தவர்களுக்கெல்லாம் ஓட்டுரிமை வழங்கித் தேர்தல் நடத்துவதுதான், இதற்கு மிகவும் திருப்திகரமான வழி என்பது தெளிவு. ஆனால், இத்தகைய ஏற்பாட்டை இப்போது செய்ய முயன்றால், புதிய அரசியல் அமைப்பை வகுப்பதில் தாமதம் ஏற்படும். அந்தத் தாமதத்தை யாரும் சகிக்கமாட்டார்கள். காரிய சாத்தியமான ஒரே ஒரு மாற்று வழிதான் இதற்கு உண்டு. அதாவது, சமீபத்தில் தேர்ந்தெடுக்கப்பட்ட மாகாண சட்ட சபைகளையே, பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கும் சபைகளாக உபயோகித்துக் கொள்ளலாம். ஆனால், அவைகளின் அமைப்பில் உள்ள இரண்டு அம்சங்கள், இதில் சிரமங் கொடுக்கின்றன. முதலாவதாக, மாகாண சட்ட சபை அங்கத்தினரின் எண்ணிக்கைக்கும் மாகாண மொத்த ஜனத்தொகைக்கும் உள்ள விகிதாசாரம், எல்லா மாகாணங்களிலும் ஒரே விதமாயில்லை. உதாரணமாக, ஒரு கோடி ஜனத்தொகை உள்ள அஸ்ஸாமில், 108 அங்கத்தினர்களைக் கொண்ட சட்ட சபை இருக்கிறது. ஆனால், அதைப்போல் ஆறு மடங்கு ஜனத் தொகையுள்ள வங்காளத்திலோ, 250 அங்கத்தினரை மட்டிலுமே கொண்ட சட்ட சபை இருக்கிறது. இரண்டாவதாக, வகுப்புத் தீர்ப்பின்படி சிறுபான்மை வகுப்புக்களுக்கு அதிகப்படியான பிரதிநிதித்

துவம் அளிக்கப்பட் டிருக்கிறது. இதனுல், ஒவ்வொரு மாகாணச் சட்ட சபையிலும் உள்ள பற்பல வகுப்புப் பிரதிநிதிகளின் விகிதாசாரம் அந்தந்த மாகாணத்தின் பற்பல வகுப்பு ஜனத்தொகைகளின் விகிதாசாரப்படி இல்லை. உதாரணமாக, வங்காள மாகாணச் சட்ட சபையில், முஸ்லிம்களுக்கு, ஒதுக்கி வைக்கப்பட்டுள்ள ஸ்தானங்கள் 48o/o தான். ஆனுல் அந்த மாகாண ஜனத்தொகையில் முஸ்லிம்கள் 55o/o இருக்கிருர்கள், இந்த ஏற்றத் தாழ்வுகளைச் சரி பண்ணுவதற்காக, பற்பல முறைகளை மிகவும் ஜாக்கிரதையாக, நாங்கள் பரிசிலனை செய்தோம். அதன்மேல், பின் கண்ட திட்டந்தான் மிக்க நியாயமும் காரிய சாத்தியமுமாக இருக்கும் என்ற முடிவுக்கு வந்திருக்கிறோம். அதாவது:

(எ) ஒவ்வொரு மாகாணத்துக்கும் அதனதன் ஜனத்தொகை விகிதாசாரப்படி மொத்த ஸ்தானங்களை ஒதுக்கி விடவேண்டும். இவ்விதமாக, சுமார் பத்து லட்சம் பேருக்கு ஒரு பிரதிநிதி விகிதம் இருக்கலாம். வயது வந்தவர்களுக்கெல்லாம் ஓட்டுரிமை வழங்குவதற்குப் பதில் இயன்ற மட்டில் பொருத்தமான முறை இதுவேயாகும்.

(பி) மாகாணங்களுக்கு ஒதுக்கப் பட்ட இந்த ஸ்தானங்களை, அந்த அந்த மாகாணத்தில் பிரதான வகுப்புக்களின் ஜனத்தொகை விகிதாசாரப்படி, அந்த வகுப்புகளுக் கிடையே பிரித்துக் கொடுக்கவேண்டும்.

(ஸி) ஒரு மாகாணத்தில் ஒரு வகுப்புக்கென்று வழங்கிய ஸ்தானங்களுக்கு, அந்த மாகாணச் சட்டசபை (அசெம்பிளி) யில் உள்ள அந்த வகுப்பு அங்கத்தினர்களே, பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கவேண்டும் என்று விதிக்க வேண்டும்.

இந்தக் காரியங்களுக்காக, இந்தியாவில் மூன்று

பிரதான வகுப்புகள் மட்டும் இருப்பதாக வைத்துக் கொள்வது போதும் என்று நாங்கள் கருதுகிறோம். பொது, முஸ்லிம், சீக்கியர் என்று அவைகளைக் குறிப் பிடலாம். முஸ்லிம்களும் சீக்கியரும் போக, மற்ற எல் லோரும் 'பொது' வகுப்பில் அடங்குவார்கள். குறைந்த ஜனத் தொகையுள்ள சிறுபான்மை வகுப்புகளுக்கு, ஜனத்தொகை அடிப்படையில் சொற்பப் பிரதிநிதித் துவம் கிடைக்கலாம். அல்லது பிரதிநிதித்துவமே கிடைக் காமல் போகலாம். ஏனென்றால், சிறுபான்மை வகுப்பு களுக்கு ஏற்கனவே அதிகப்படியான பிரதிநிதித்துவம் வழங்கியிருந்ததால், மாகாணச் சட்டசபைகளில் அந்த வகுப்புக்களுக்கு நிச்சயமாய் ஸ்தானங்கள் கிடைத்து வந்தன. இந்த அதிகப்படிப் பிரதிநிதித்துவத்தை, அவைகள் இப்போது இழந்துவிடும். ஆகையால், அந்தச் சிறுபான்மை வகுப்புகளுக்கு விசேஷ அக்கறையுள்ள சகல விஷயங்களிலும், அந்த வகுப்புகளுக்குப் பூரணப் பிரதிநிதித்துவம் கிடைக்குமாறு செய்வதற்காக, கீழே 20-ஆவது பாராவில் நாங்கள் ஓர் ஏற்பாட்டைச் சொல்லி யிருக்கிறோம்.

19-(1) ஆகவே, ஒவ்வொரு மாகாண சட்டசபை யும் பின்கண்ட எண்ணிக்கையுள்ள பிரதிநிதிகளைத் தேர்ந் தெடுக்க வேண்டும் என்பது எங்கள் யோசனை. சட்ட சபையில் உள்ள பொது, முஸ்லிம், சீக்கியர் ஆகிய ஒவ் வொரு பகுதியும் தன்தன் பிரதிநிதிகளை விகிதாசாரப் பிரதிநிதித்துவ ரீதியில் ஒற்றைமாற்று ஓட்டுமுறை மூலம் தேர்ந்தெடுக்க வேண்டும்.

## பிரதிநிதித்துவ அட்டவணை

(ஏ) பிரிவு

| மாகாணம் | பொது | முஸ்லிம் | மொத்தம் |
|---|---|---|---|
| சென்னை | 45 | 4 | 49 |
| பம்பாய் | 19 | 2 | 21 |
| ஐக்கிய மாகாணம் | 47 | 8 | 55 |
| பீஹார் | 31 | 5 | 36 |
| மத்திய மாகாணம் | 16 | 1 | 17 |
| ஒரிஸ்ஸா | 9 | 0 | 9 |
| மொத்தம் | 167 | 20 | 187 |

(பி) பிரிவு

| மாகாணம் | பொது | முஸ்லிம் | சீக்கியர் | மொத்தம் |
|---|---|---|---|---|
| பஞ்சாப் | 8 | 16 | 4 | 28 |
| வடமேற்கு எல்லைப் புறம் | 0 | 3 | 0 | 3 |
| சிந்து | 1 | 3 | 0 | 4 |
| மொத்தம் | 9 | 22 | 4 | 35 |

(ஸி) பிரிவு

| மாகாணம் | பொது | முஸ்லிம் | மொத்தம் |
|---|---|---|---|
| வங்காளம் | 27 | 33 | 60 |
| அஸ்ஸாம் | 7 | 3 | 10 |
| மொத்தம் | 34 | 36 | 70 |

| | | |
|---|---|---|
| பிரிட்டிஷ் இந்தியாவுக்கு மொத்தம் | ... | 292 |
| இந்திய சமஸ்தானங்களுக்கு உயர்ந்தபட்சம் | ... | 93 |
| மொத்தம் | ... | 385 |

குறிப்பு: பிரதம கமிஷனர்கள் ஆளும் மாகாணங்களுக்குப் பிரதிநிதித்துவம் அளிப்பதற்காக, பின்வரும ஏற்பாடு செய்யப்படும்: மத்திய அசெம்பிளியில் டில்லியின் பிரதிநிதியாக இருக்கும் அங்கத்தினர், அதே

அசெம்பிளியில் அஜ்மீர் - மேர்வாடாவின் பிரதிநிதியாக இருக்கும் அங்கத்தினர் இந்த இருவரும், குடகு சட்டசபை தேர்ந்தெடுக்கும் ஒரு பிரதிநிதியும் ஏ - பிரிவில் சேர்த்துக் கொள்ளப் படுவார்கள்.

பி - பிரிவில் பிரிட்டிஷ் பலுசிஸ்தான் பிரதிநிதியொருவர் சேர்த்துக்கொள்ளப் படுவார்.

(2) இறுதியான அரசியல் நிர்ணய சபையில், இந்திய சமஸ்தானங்களுக்கு, தக்க பிரதிநிதித்துவம் அளிக்க வேண்டும் என்பது எங்கள் நோக்கம். பிரிட்டிஷ் இந்தியா விஷயத்தில் அனுசரிக்கும் முறைப்படி சமஸ்தானப் பிரதிநிதிகளின் எண்ணிக்கையையும் கணக்கிட்டால், அது 93-க்கு மேல் போகாது. ஆனால், அந்தப் பிரதிநிதிகளைத் தெரிந்தெடுக்கும் முறை எது என்பதை, பரஸ்பரம் கலந்து பேசி முடிவு செய்யவேண்டும். ஆரம்ப கட்டத்தில், பேச்சுவார்த்தை நடத்தும் கமிட்டி ஒன்றே சமஸ்தானங்களுக்குப் பிரதிநிதியாக இருந்துவரும்.

(3) இவ்விதம் தேர்ந்தெடுக்கப்படும் பிரதிநிதிகள் எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரத்தில் புது டில்லியில் கூடுவார்கள்.

(4) பிரதிநிதிகளின் பூர்வாங்கக் கூட்டம் ஒன்று நடைபெறும். அந்தக் கூட்டத்தில், அலுவல்களின் பொதுவான வரிசைக் கிரமம் தீர்மானிக்கப்படும். ஒரு தலைவரும் இதர நிர்வாகிகளும் தேர்ந்தெடுக்கப் படுவார்கள். பிரஜா உரிமைகள், சிறுபான்மையோர், மலை ஜாதியினர் பிரதேசங்கள், ஒதுக்கப்பட்ட பிரதேசங்கள் ஆகிய விஷயங்கள் சம்பந்தமாக, ஓர் ஆலோசனைக் கமிட்டி, (கீழே 20-ஆவது பாராவைப் பார்க்க) அமைக்கப்படும். அதன் பிறகு, மாகாணப் பிரதிநிதிகள், இந்தப் பாராவின் (1) உட்பிரிவில் குறித்திருக்கும் பிரதிநிதித்துவ அட்ட

வணையில் ஏ. பி. ஸி. என்று கண்டுள்ளபடி மூன்று பிரிவு களாகப் பிரிவார்கள்.

5. இந்தப் பிரிவுகள், ஒவ்வொரு பிரிவிலும் சேர்க் கப்பட்டுள்ள மாகாணங்களுக்கான மாகாண அரசியல் அமைப்புகளை வகுக்கும் வேலையை மேற்கொள்ளும். அந்த மாகாணங்களுக்குத் தொகுதிவட்ட அரசியல் அமைப்பு எதையேனும் ஏற்படுத்தவேண்டுமா என்பதை யும், அவ்விதம் ஏற்படுத்த வேண்டுமென்றால் மாகாண விஷயங்களில் எந்த எந்த விஷயங்களைத் தொகுதி வட்டம் கவனிக்கவேண்டும் என்பதையும் தீர்மானிக்கும். கீழ்வரும் (8) உட்பிரிவில் கண்டுள்ள ஷரத்துகளை ஒட்டி, தொகுதி களிலிருந்து பிரிந்து போகும் உரிமையும் மாகாணங் களுக்கு இருக்கும்.

(6) பிரிவுகளின் பிரதிநிதிகளும் இந்திய சமஸ் தானங்களின் பிரதிநிதிகளும், யூனியன் அரசியல் அமைப்பை வகுப்பதற்காக மீண்டும் ஒன்றாகக் கூடு வார்கள்.

(7) மேலே 15-ஆவது பாராவில் கண்ட ஷரத்துக் களை மாற்றுவதாகவோ, அல்லது வகுப்பு சம்பந்தப் பட்ட ஏதாவது பெரிய பிரச்னையைக் கிளப்புவதாகவோ, யூனியன் அரசியல் நிர்ணய சபையில் ஏதாவது தீர்மானம் வரலாம். அப்படி வந்தால், இரண்டு பிரதான சமூகங் களுள் ஆஜராகி இருக்கும் பிரதிநிதிகளில் ஒவ்வொரு சமூகத்தையும் சேர்ந்த பெரும்பான்மையோரின் ஒட்டுக் களைப் பெற்றே அதை முடிவு செய்யவேண்டும்.

தீர்மானங்களில் அப்படிப்பட்ட எவையேனும் இருந்தால், அவற்றில் எவை வகுப்பு சம்பந்தமான பெரிய பிரச்னைகளைக் கிளப்புகிறவை என்பதை, சபையின் தலை வரே தீர்மானிப்பார். ஆனால், தலைவர் அப்படித் தீர்மா

னிக்குமுன் சமஷ்டிக் கோர்ட்டைக் கலந்துகொண்டே அவர் தீர்மானிக்கவேண்டும் என்று பிரதான வகுப்புக்களில் ஏதாவது ஒன்றின் பிரதிநிதிகளில் பெரும்பான்மையோர் கேட்டுக்கொண்டால், அவர் அப்படியே செய்ய வேண்டும்.

(8) புதிய அரசியல் அமைப்பு ஏற்பாடுகள் நடைமுறைக்கு வந்தவுடன், எந்த மாகாணமாவது தன்னைச் சேர்த்திருக்கும் தொகுதி வட்டத்திலிருந்து பிரிந்து வெளியேற விரும்பினால், அப்படி வெளியேற அதற்கு உரிமை உண்டு. அந்த முடிவு, புதிய அரசியல் அமைப்பின் கீழ் முதல் பொதுத் தேர்தல் நடைபெற்ற பிறகு, அந்த மாகாணத்தில் ஏற்படும் புதிய சட்டசபையால் தீர்மானிக்கப்படும்.

20. பிரஜா உரிமைகள், சிறுபான்மையோர், மலை ஜாதியினர் பிரதேசங்கள், ஒதுக்கப்பட்ட பிரதேசங்கள் ஆகிய விஷயங்கள் சம்பந்தமான ஆலோசனைக் கமிட்டியானது, சம்பந்தப்பட்ட நல உரிமைகளுக்குப் பூரணப் பிரதிநிதித்துவம் கொண்டதாக இருக்கவேண்டும். ஜீவாதார உரிமைகளின் ஜாபிதா, சிறுபான்மையோரின் பாதுகாப்புக்கான ஷரத்துகள், மலைஜாதிப் பிரதேசங்களையும் ஒதுக்கப்பட்ட பிரதேசங்களையும் நிர்வாகம் செய்வதற்கான திட்டம் ஆகியவைபற்றி யூனியன் அரசியல் நிர்ணய சபைக்கு அறிக்கைசெய்வது, இந்த உரிமைகளைப் பற்றிய ஷரத்துக்களை, மாகாணம், தொகுதி வட்டம், யூனியன் இந்த மூன்றில் எதன் அரசியல் அமைப்பில் சேர்ப்பது என்று ஆலோசனை கூறுவது, இந்த இரண்டு காரியங்களும், அந்த ஆலோசனைக் கமிட்டியின் வேலையாக இருக்கும்,

21. மாகாணச் சட்டசபைகள் தங்கள் பிரதிநிதி

களைத் தேர்ந்தெடுக்கும்படியும், சமஸ்தானங்கள் தங்கள் பேச்சுவார்த்தைக் கமிட்டியை அமைக்கும்படியும், அவை களை வைஸ்ராய் உடனே கேட்டுக்கொள்வார். சாத்திய மான மட்டில் இடைக்காலம் மிகவும் சுருக்கமாக இருக் கும் வகையில், இந்த அரசியல் அமைப்பு வேலை துரிதமாக நடைபெறவேண்டும். இந்த வேலையில் உள்ள சிக்கல்களுக் கிடையே எவ்வளவு துரிதமாய் முடியுமோ அவ்வளவு துரிதமாய், இது நடைபெறும் என்று நம்புகிறோம்.

22. அதிகார மாற்றத்தால் எழும் சில விஷயங்க ளைச் சமாளிப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்வதற்காக யூனியன் அரசியல் நிர்ணய சபைக்கும் பிரிட்டிஷ் சர்க்கா ருக்கும் இடையிலே ஓர் உடன்படிக்கை செய்து கொள் வது அவசியமாயிருக்கும்.

23. அரசியல் நிர்ணய வேலை நடைபெறும் காலத் திலே, இந்தியாவின் நிர்வாகமும் நடந்தாகவேண்டும். ஆகையால், பிரதான அரசியல் கட்சிகளின் ஆதரவைக் கொண்ட ஓர் இடைக்கால சர்க்காரை உடனே அமைக்க வேண்டும். இந்த விஷயத்தை நாங்கள் மிக அதிக முக்கிய மாய் மதிக்கிறோம். இந்திய அரசாங்கத்தார் கஷ்டமான அலுவல்களைச் சமாளிக்கவேண்டி இருக்கிறது. ஆகையால், இந்த இடைக்காலத்தில் எவ்வளவு அதிகமான ஒத் துழைப்பு முடியுமோ அவ்வளவு அதிகமான ஒத்துழைப்பு அவர்களுக்குக் கிடைப்பது அவசியமாகும். அன்றாட நிர்வாகம் சம்பந்தமான கடும் வேலை ஒருபுறம் இருக்க, மிக வும் கோரமான பஞ்ச அபாயத்தை எதிர்த்தாக வேண்டும். இந்தியாவின் எதிர்காலத்தில் தீவிரமான மாறுதல்களை விளைவிக்கக்கூடிய யுத்தப் பிற்கால அபிவிருத்தி சம்பந்த மான பல விஷயங்களை முடிவு செய்தாகவேண்டும். முக் கியமான சர்வதேச மகாநாடுகளில் இந்தியா பிரதிநிதித்து

வம் வகிக்கவேண்டிய வேலைவேறு இருக்கிறது. இந்தக் காரியங்களுக்கெல்லாம், பொதுஜன ஆதரவு கொண்ட ஒரு சர்க்கார் அமைவது அவசியமாகும். இது சம்பந்தமான பேச்சு வார்த்தைகளை, வைஸ்ராய் ஏற்கனவே ஆரம்பித்து விட்டார். யுத்த மெம்பரின் இலாக்கா உள்படச் சகல இலாக்காக்களும், ஜனங்களின் பூர்ண நம்பிக்கைக்கும் பாத்திரமான இந்தியத் தலைவர்களின் கையிலே இருக்கும் இடைக்கால சர்க்கார் ஒன்றை, சீக்கிரத்திலேயே அமைத்து விடலாம் என்று, அவர் நம்புகிறார். இந்திய சர்க்காரில் ஏற்படும் மாறுதலின் முக்கியத்தை, பிரிட்டிஷ் சர்க்கார் உணர்ந்துகொள்ளும். மேற்கண்டவாறு அமைக்கப்படும் இந்திய சர்க்கார், தங்கள் நிர்வாக காரியங்களைப் புரிவதிலும், சாத்தியமானமட்டில் சீக்கிரமாகவும் நயமாகவும் அதிகாரத்தை இந்தியாவுக்கு மாற்றிக்கொள்வதிலும், அவர்களுக்குப் பிரிட்டிஷ் சர்க்கார் தங்களுடைய பூரண ஒத்துழைப்பை அளிப்பார்கள்.

24. பூரண சுதந்தரம் அடையக்கூடிய சந்தர்ப்பம் இந்தியத் தலைவர்களுக்கும் மக்களுக்கும் இப்போது கிடைத்திருக்கிறது. அவர்களுக்கு, கடைசியிலே இதைச் சொல்ல விரும்புகிறோம். தாங்கள் எந்த அரசியல் அமைப்பின் கீழ் வாழப்போகிறார்களோ அந்த அரசியல் அமைப்பை நிர்ணயிக்கும் முறை பற்றிய மட்டில், இந்திய மக்கள் தாங்களே ஒத்துப்போவது சாத்தியமாயிருக்கும் என்று, நாங்களும் எங்கள் சர்க்காரும் எங்கள் நாட்டு மக்களும் நம்பியிருந்தோம். இந்தியக் கட்சிகளும் நாங்களும் எவ்வளவோ முயன்றும், எல்லோருமே பொறுமையும் நல்லெண்ணமும் காட்டிவந்தும்கூட, அது சாத்தியமில்லாமல் போயிற்று. ஆகவே, நாங்கள் உங்களிடம் இப்போது இந்த யோசனைகளைச் சமர்ப்பிக்கிறோம். எல்லாக் கட்சிகள்

சொன்னதயும் கேட்டோம். ஆழ்ந்த சிந்தனை செய்தோம். அதன்மேல் உள்நாட்டுக் கலவரமும் சச்சரவும் ஏற்படக்கூடிய அபாயம் அதிக மில்லாமலும் மிகவும் குறைந்த காலத்திலும் நீங்கள் சுதந்தரம் பெறுவதற்கு இந்த யோசனைகள் உங்களுக்கு உதவியாயிருக்கும் என்று நாங்கள் நம்புகிறோம். இவைகள் எல்லாக் கட்சிளுக்கும் திருப்தியளிக்காமல் இருக்கலாம். ஆனால், இந்திய சரித்திரத்திலே மகத்தான இந்தச் சமயத்தில், பரஸ்பரம் விட்டுக் கொடுப்பதே ராஜதந்திரமாகும் என்று நாங்கள் கருதுகிறோம். அதை நீங்களும் ஒப்புக்கொள்வீர்கள்.

நீங்கள் இந்த யோசனைகளை ஏற்றுக்கொள்ளாமற் போனால், என்ன விளைவுகள் ஏற்படக்கூடும் என்பதைச் சிந்தித்துப் பார்க்கும்படி, உங்களை நாங்கள் கேட்டுக் கொள்கிறோம். ஒற்றுமை உண்டாவதற்காக, நாங்களும் இந்தியக் கட்சிகளும் சேர்ந்து கூட்டாகச் சகல முயற்சிகளும் செய்து பார்த்தோம். அதன்மேல், இதை நாங்கள் சொல்லித்தான் ஆகவேண்டும். இந்தியக் கட்சிகள் ஒத்துப்போய் அதன் மூலமே சமாதானமான முடிவு ஏற்பட்டுவிடும் என்ற நம்பிக்கைக்கு இடமில்லை என்று நாங்கள் அபிப்பிராயப் படுகிறோம். ஆகையால், இதை நீங்கள் ஏற்றுக் கொள்ளவில்லை யென்றால், பயங்கரமான குழப்பமும் பலாத்காரமும் உள்நாட்டுப் போரும்கூட விளையக்கூடும். அத்தகைய கலவரத்தின் விளைவு எப்படியிருக்கும் என்பதையும், கலவரம் எவ்வளவு காலம் நடைபெறும் என்பதையும், யாரும் முன்கூட்டிச் சொல்ல முடியாது. ஆனால், பல லட்சக் கணக்கான ஆண் பெண் குழந்தைகளுக்கு மிகவும் கோரமான கேடுகள் அதனால் விளையுமென்பதுமட்டில் நிச்சயமாகும். அவ்வித நிலைமை ஏற்படுமோ என்று எண்ணும்போதே, இந்திய மக்கள்

மட்டும் அன்றி, எங்கள் நாட்டு மக்களும், முழு உலகமுமே நடுநடுங்கத்தான் வேண்டும்.

ஆகையால், இந்த யோசனைகளை நாங்கள் எத்தகைய சமரச உணர்ச்சியோடும் நல்லெண்ணத்துடனும் கூறியுள்ளோமோ அதே சமரச உணர்ச்சியோடும் நல்லெண்ணத்துடனும் இவைகளை நீங்கள் அங்கீகரித்து அனுஷ்டானத்துக்கும் கொண்டுவருவீர்கள் என்ற ஆழ்ந்த நம்பிக்கையோடேயே, இவைகளை நாங்கள் உங்கள் முன்பு சமர்ப்பிக்கிறோம். வருங்காலத்தில் இந்தியா நன்மை அடையவேண்டும் என்று ஆசைகொண்ட அனைவருக்கும் நாங்கள் ஒரு வேண்டுகோள் விடுக்கிறோம்: தங்கள் சொந்த வகுப்பு அல்லது சொந்த நன்மையைச் சற்று மறந்து, நாற்பதுகோடி இந்தியமக்களின் நன்மைகளைக் கவனிக்க வேண்டுமென்று அவர்களை நாங்கள் கேட்டுக்கொள்ளுகிறோம்.

புதிய சுதந்தர இந்தியா, பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தில் ஓர் அங்கமாக இருக்க விரும்பும் என்றே, நாங்கள் நம்புகிறோம். அது எப்படியானாலும் சரி, நீங்கள் எங்கள் மக்களுடன் நேச உறவுடனேயே இருந்து வருவீர்கள் என்று நாங்கள் நம்புகிறோம். ஆனால், இவைகளெல்லாம் நீங்களே சுதந்தரமாய் முடிவு செய்யவேண்டிய விஷயங்களாகும். உங்கள் முடிவு எதுவாயிருந்தாலும் சரி - உலகில் மகத்துவம் வாய்ந்த நாடுகளுக்கிடையே நீங்கள் நாளுக்கு நாள் செழிப்புற்று விளங்க வேண்டும்; உங்கள் எதிர்காலம் உங்கள் பழம் பெருமையையும் மிஞ்சவேண்டும் - இதுவே உங்கள் ஆசையாயிருக்கும். அதில் நாங்களும் கலந்து கொள்கிறோம்.

# அனுபந்தம் II

## சுதந்தரக் குடியரசுத் தீர்மானம்

பிரிட்டிஷ் மந்திரிகள் தூதக்கோஷ்டியின் திட்டப்படி, இந்திய அரசியல் நிர்ணய சபை 1946-ஆம் ௵ டிசம்பர் ௴ 9-ஆம் தேதி கூடியது, முஸ்லிம் லீக் கட்சியாரைத் தவிர, மற்றப் பிரதிநிதிகள் அனைவரும் சபையில் கலந்துகொண்டார்கள். 13-ஆம் தேதி இந்தியாவைச் சுதந்தரக் குடியரசு என்று பிரகடனம் செய்யும் லட்சியத் தீர்மானத்தை, பண்டித ஜவாஹர் லால், சபையில் பிரேரணை செய்தார். இரண்டொரு நாட்கள் விவாதம் நடந்தது. பின்பு, சபைக்கூட்டம், 1947-ஆம் ௵ ஜனவரி ௴ 20-ஆம் தேதிக்கு ஒத்திப் போடப்பட்டது. அப்போதும் முஸ்லிம் லீக் கட்சியார் கலந்துகொள்ளவில்லை. ஜவாஹரின் லட்சியத் தீர்மானம் ஜனவரி ௴ 22-ஆம் தேதி ஏக மனதாக நிறைவேறிவிட்டது. அந்தத் தீர்மானத்தின் இறுதி வாசகம் பின்வருமாறு:

இந்தியா சுதந்தரமான சர்வாதிகார அந்தஸ்து வாய்ந்த குடியரசு என்று பிரகடனம் செய்யவும், அதன் வருங்கால ஆட்சிக்கு ஓர் அரசியல் திட்டம் வகுக்கவும், இப்போது பிரிட்டிஷ் இந்தியாவாக உள்ள பிரதேசமும், தற்போது இந்திய சமஸ்தானங்களாக உள்ள பிரதேசங்களும், சுதந்தரமான சர்வாதிகார அந்தஸ்து வாய்ந்த இந்தியாவுக்குள் சேர்ந்துகொள்ள விரும்புபவையாகப் பிரிட்டிஷ் இந்தியாவுக்கும் இந்திய சமஸ்தானங்களுக்கும் வெளியே இருந்துகொண்டிருக்கும் இதர பிர

தேசங்களும் அடங்கிய ஒரு யூனியனாக இதை அமைக்க வேண்டும் என்றும், இந்த அரசியல் நிர்ணய சபை திட சங்கல்பம் செய்து கொள்கிறது;

இந்தப் பிரதேசங்கள் இப்போதுள்ள எல்லைகளோடிருந்தாலும் சரி, அரசியல் நிர்ணய சபையினாலோ அல்லது அதற்குப் பின்னால், அரசியல் அமைப்புச் சட்டத்தின் பிரகாரமோ வகுக்கப்படும் வேறு எல்லைகளோடிருந்தாலும் சரி; இவைகள் சுய ஆட்சி உள்ள அங்கங்களின் அந்தஸ்து உடையவையாகவும் அந்த அந்தஸ்தைத் தங்களிடமே வைத்துக்கொண்டும் இருக்கும்; எச்ச அதிகாரங்கள் அனைத்தும் இவைகளிடமே இருக்கும்; யூனியனுக்கு அளிக்கப்பட்ட அல்லது விட்டுக் கொடுக்கப்பட்ட அல்லது யூனியனுக்கு இயற்கையாயுள்ள அல்லது அதனிடம் தொக்கு நிற்கிற அல்லது இவைகளின் டலனாக யூனியனுக்கு ஏற்படுகிற அதிகாரங்களும் அலுவல்களும் விலக்காக, பிற எல்லா நிர்வாக, துரைத்தன அதிகாரங்களையும் அலுவல்களையும் இந்தப் பிரதேசங்கள் வகிக்கும்;

சுதந்தரமான சர்வாதிகார அந்தஸ்து வாய்ந்த இந்தியாவுக்கும் சரி, அதில் அடங்கியுள்ள பகுதிகளுக்கும் சரி, இவைகளின் துரைத்தன உறுப்புகளுக்கும் சரி, இருக்கக் கூடிய அதிகாரங்கள் எல்லாம் மக்களிடமிருந்தே பெற்றவை யாகும்;

சமூகம் பொருளாதாரம் அரசியல் ஆகிய விஷயங்களில், நீதி, சந்தர்ப்பம் பெறுவதிலும் சட்டத்தின் முன்பும் சம அந்தஸ்து, சட்டத்துக்கும் பொது ஒழுக்கத்துக்கும் உட்பட்டு எண்ணத்திலும், பேச்சிலும், நம்பிக்கையிலும், மதத்திலும், தெய்வ வணக்கத்திலும், தொழிலிலும், சங்கம் கூடுவதிலும் செயலிலும், சுதந்தரம் - ஆகிய

இவைகள் இந்தியாவிலுள்ள சகல மக்களுக்கும் உண்டென்று உத்திரவாதமளித்துப் பாதுகாக்கப்படும்;

சிறுபான்மையோர்களுக்கும், பிற்போக்குப் பிரதேசங்களுக்கும் மலை ஜாதியார்களுக்கும், தாழ்த்தப்பட்டவர் - இதர பிற்போக்கு வருப்பார்களுக்கும் தகுந்த பாதுகாப்புகள் அளிக்கப்படும்;

குடியரசின் பிரதேச ஒருமைத் தன்மையும், நிலத்திலும் நீரிலும் வானிலும் குடியரசுக்குள்ள ஆதிபத்திய உரிமைகளும், நாகரிக நாடுகளின் நீதிக்கும் சட்டத்துக்கும் இணங்கப் பாதுகாக்கப்படும்; இந்தப் புராதன தேசம் உலகத்திலே தனக்குரிய கௌரமான ஸ்தானத்தைப் பெற்று, உலக சமாதானத்துக்கும் மனிதவர்க்கத்தின் க்ஷேமத்துக்கும் பூர்ணமாகவும் மனமிசைந்தும் தன் பங்கு கடமையைப் புரியும்.

முற்றும்

# புதிய வெளியீடுகள்

**பிரதிமா நாடகம்** ரூ. 1/-

பாஸமகாகவியின் கற்பனையில் உதயமான ராமாயண நாடகம். கைகேயியின் உயர்வு தோன்றச் சமத்காரமாகப் பின்னியிருக்கிறார் ஆசிரியர். சுவைகள் சம்பாஷணை வாயிலாக ஊறிப் படிப்போர் உள்ளத்தைக் கவரும். மூல ராமாயணத்திலிருந்து சில இடங்களில் வேறுபட்டிருப்பதும் யாவருக்கும் பயன்படுகிறது.

**வாழ்வின் ஒளி** (நாவல்) ரூ. 4/-

பி. எம். கண்ணன் எழுதியது. அவள் வாழ்வில், கணவனுக்குக்கூடச் சொல்ல முடியாத ஒரு ரகசியம். தன்னை நெருங்காத அவளிடம் கணவன் வெறுப்புக் கொள்கிறான்; அவளுடைய நடவடிக்கைகளினால் அவளிடம் அவனுக்கு இரக்கமும் உண்டாகிறது. அவனுடைய இன்பத்துக்காக அவள் தானே ஏற்பாடு செய்ய முனைகிறாள். கடைசியில்......?

**பொய்த் தேவு** (நாவல்) ரூ. 3/8

சாத்தனூர் மேட்டுத் தெருவில் ஏழைப் பையனாகத் திரிந்த சோமு, பிற்காலத்தில் ஒரு சொந்தக் கடைக்கு முதலாளியாகிறான். பணத்தையே தெய்வமாக எண்ணிய சோமு முதலியார் பல வழிகளிலே புகழும் பணமும் குவித்து வாழ்ந்து, கடைசியில் மேட்டுத் தெருவுக்கே வருகிறார். அது எப்படி என்பதை இதன் ஆசிரியர் க. நா. சுப்ரமண்யம் கதைப் போக்கிலே தெளிய வைத்திருக்கிறார்.

தபாற் செலவு தனி

---

கலைமகள் காரியாலயம், மயிலாப்பூர்